॥ ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ॥

553▲

# குடும்பத்தில் எப்படி இருக்கவேண்டும்?

गृहस्थमें कैसे रहें? ( तमिल )



गीताप्रेस गोरखपुर
GITA PRESS, GORAKHPUR

சுவாமி ராம்ஸுகதாஸ்

|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: || 553

# குடும்பத்தில் எப்படி இருக்கவேண்டும்?

गृहस्थमें कैसे रहें? (तमिल)

---

*த்வமேவ மாதா ச பிதா த்வமேவ*
*த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸகா$_2$ த்வமேவ ।*
*த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ*
*த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥*

*ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,*
*உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,*
*கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,*
*அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!*

---

ஆக்கியோர்

சுவாமி ராம்ஸுகதாஸ்

|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ||

# பணிவான வேண்டுகோள்

தற்காலத்தில், இந்து பாரம்பரியத்திற்கு ஏற்ப வகுக்கப்பட்டுள்ள வாழ்க்கை நெறிகள் தாறுமாறாகப் போய்க் கொண்டிருக்கின்றன. ஆசிரமங்கள் எனப்படும் நான்கு வகையான வாழ்க்கை நெறிகளுக்கும் அடித்தளமாக அமைந்த இல்வாழ்க்கை நெறி, மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது. இல்வாழ்வானைப் பற்பல பிரச்சினைகள் கோரமாகப் பற்றியுள்ளன. அவன் நம்பிக்கையிழந்து, அமைதியையிழந்து, ஜீவனற்ற வாழ்க்கையைக் கழித்து வருகிறான். இப்படிப்பட்ட ஆண்–பெண் சம்சாரிகள், பெருமதிப்பிற்குரிய சுவாமி ராம்ஸுகதாஸ் அவர்களிடம், தமது சொந்தக் கவலைகளைக் கூறி, அவரவர்களுக்கு ஏற்புடைய ஆறுதல்–ஆலோசனைகளைப் பெற்றுச் சென்றனர். இதிலிருந்துதான், குடும்ப வாழ்க்கையில் உள்ளவர்களின் பலதரப்பட்ட சிக்கல்களையும், அவற்றிற்கான தீர்வுகளையும் ஒருங்கே ஒரு புத்தகமாக வெளியிடும் யோசனை பூஜ்ய சுவாமிகளுக்கு உருவாயிற்று. இந்த நூல், அந்தத் தேவையை நிறைவேற்றுகிறது. மனம் தோய்ந்து இந்நூலை உலகத்தார் அனைவரும் படித்துணர்ந்து, அதன்வழி நடந்து இல்வாழ்க்கையில் மேன்மையடைய வேண்டுகிறோம். மேலும், திருமணம் போன்ற நல்நிகழ்ச்சிகளில் இவ்வரிய நூலை உலகத்தாருக்குப் பரிசாக வழங்கலாம்.

— **வெளியீட்டாளர்கள்**



॥ ஸ்ரீஹரி: ॥

# தேவநாகரி எழுத்துக்கள் — சில குறிப்புகள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு **(Transliteration)** என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு **(Translation)** என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, முறையாக சம்ஸ்கிருதம் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு 2, 3, 4 என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ | उ உ |
| ऊ ஊ | ऋ ரி | ॠ ரீ | ॡ ல்ரு | ए ஏ |
| ऐ ஐ | ओ ஓ | औ ஔ | | |

| | | | | |
|---|---|---|---|---|
| क க [ka] | ख க$_{2}$ [kka] | ग க$_{3}$ [ga] | घ க$_{4}$ [gha] | ङ ங |
| च ச [ca] | छ ச$_{2}$ [cha] | ज ஜ [ja] | झ ஜ [jha] | ञ ஞ |
| ट ட [ta] | ठ ட$_{2}$ [tta] | ड ட$_{3}$ [da] | ढ ட$_{4}$ [dda] | ण ண |
| त த [tha] | थ த$_{2}$ [thha] | द த$_{3}$ [dha] | ध த$_{4}$ [dhha] | न ந,ன |
| प ப [pa] | फ ப$_{2}$ [pha] | ब ப$_{3}$ [ba] | भ ப$_{4}$ [bha] | म ம |
| य ய | र ர | ल ல | व வ | |

| | | | |
|---|---|---|---|
| स ஸ [sa] | ष ஷ [sha] | क्ष க்ஷ [ksha] | ह ஹ [ha] |
| श ஶ [sā] | ज्ञ ஜ்ஞ [gna] | ऋ ரு [ri] | |

**'श'** என்ற எழுத்து 'ஶ' என்று எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. இந்த 'ஶ' என்னும் எழுத்து 'பிசகு', 'கசடு' என்னும் சொற்களில் வரும் 'ச'வைப் போன்று ஒலிக்கும்.

சம்ஸ்கிருத–தமிழ் எழுத்துப்பெயர்ப்பில் **(Transliteration)** கொடுத்துள்ள எழுத்துக்கள் எழுத்துப்பெயர்ப்பில் மட்டும்

பயன்படுத்தப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பில், வழக்கத்தில் உள்ள தமிழ் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக **'सुखं'** என்ற சொல் எழுத்துப்பெயர்ப்பில் **'ஸுக$_2$ம்'** என்றும், மொழிபெயர்ப்பில் **'சுகம்'** என்றும் எழுதப்பட்டுள்ளது.

**சம்ஸ்கிருதத்தில் உள்ள உயிரெழுத்தான 'ऋ'** என்பது உயிரெழுத்தாக வரும்பொழுது **'ரி'** என்றும், உயிர்மெய்யெழுத்தாக வரும்பொழுது **'ரு'** என்றும் உச்சரிக்கப்படுகிறது. (உ–ம்.:– **ऋषि – ரிஷி, कृत्वा – க்ருத்வா)** இந்த **'ரு'** என்னும் எழுத்து **'எருது', 'விருது'** என்னும் சொற்களில் வரும் **'ரு'**வைப் போன்று ஒலிக்கும்.

**'ञ'** என்ற எழுத்து **'ஞ'** என்றும், **'ज्ञ'** என்ற கூட்டெழுத்து **'க்ஞ'** என்றும் எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. **'ञ'** என்ற எழுத்தில் துவங்கும் சொற்களில்லை.

ஒரு சொல்லிற்கு மேல் இருக்கின்ற புள்ளியானது **'ம்'** என்னும் எழுத்தைக் குறிக்கிறது. (உ–ம்.:– **सुखं – ஸுகம்**)

ஒரு சொல்லின் இறுதியில் மேலும் கீழும் வருகின்ற இரு புள்ளிகள் (:) **'விஸர்கம்'** என்று அழைக்கப்படுகிறது. இதன் உச்சரிப்பு, இதற்கு முன் வரும் எழுத்தைப் பொறுத்து அமையும். உதாரணம் பின்வருமாறு :–

| | | |
|---|---|---|
| **भवन्तः** | – ப$_4$வந்த: | – ப$_4$வந்த**ஹ** |
| **स्थितिः** | – ஸ்தி$_2$தி: | – ஸ்தி$_2$தி**ஹி** |
| **प्रभुः** | – ப்ரபு$_4$: | – ப்ரபு$_4$**ஹு** |
| **गुणैः** | – கு$_3$ணை: | – கு$_3$ணை**ஹி** |
| **भ्रुवोः** | – ப்$_4$ருவோ: | – ப்$_4$ருவோ**ஹோ** |

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் **'ऽ'** அல்லது **'ऽऽ'** என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு **'அவக்$_3$ரஹம்'** என்று பெயர். இந்த இடங்களில் முறையே **'அ', 'ஆ'** என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.



॥ ஶ்ரீஹரி: ॥

# பொருளடக்கம்





|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ||

# குடும்பத்தில் எப்படி இருக்கவேண்டும்?

ருத்$_3$ரோ முண்ட$_3$த$_4$ரோ பு$_4$ஜங்க$_3$ஸஹிதோ கௌ$_3$ரீ து ஸத்$_3$பூ$_4$ஷணா
ஸ்கந்த$_3$: ஶம்பு$_4$ஸுத: ஷட$_3$ாநநயுதஸ்துண்டீ$_3$ ச லம்போ$_3$த$_3$ர: |
ஸிம்ஹக்ரேலிமூஷகம் ச வ்ருஷப$_4$ஸ்தேஷாம் நிஜம் வாஹநம்
இத்த$_2$ம் ஶம்பு$_4$க்$_3$ருஹே விபி$_4$ந்நமதிஷு ஐக்யம் ஸதா$_3$ வர்ததே ||

பகவான் சங்கரர், மண்டை ஓட்டாலான மாலையையும் பாம்பையும் அணிந்து கொண்டிருக்கிறார். பார்வதிதேவியோ மிக அழகிய அணிகலன்களை அணிந்து கொண்டிருக்கிறார். சங்கரருடைய குமாரர்களாகிய கார்த்திகேயனுக்கு முகங்கள் ஆறு; கணேசனுக்கு நீண்ட தும்பிக்கையும், பெருத்த வயிறும். பகவான் சங்கரர், பார்வதிதேவி, கார்த்திகேயன், விநாயகப் பெருமான் ஆகியோருடைய வாகனங்களாகிய எருது, சிங்கம், மயில், மூஞ்சூறு ஆகியவை ஒன்றையொன்று உண்ணக் கூடியவைகள். இவ்விதம் தங்களிடையே விரோதமான இயல்புடையவைகளைக் கொண்ட சங்கரரின் குடும்பத்தில் எப்போதும் ஒற்றுமை நிலவி வருகிறது. (அதுபோலவே, நாமும் நமது குடும்பத்தில் பலவகைப்பட்ட இயல்புடையவர்களோடு, நம்முடைய சொந்த மரியாதை, இன்பம் ஆகியவற்றைத் தியாகம் செய்வதுடன், மற்றவருடைய நலன், சுகம் ஆகியவற்றை எண்ணி, நமக்குள் அன்புமயமான ஒற்றுமை விளங்க வாழவேண்டும்.)

## 1. குடும்பஸ்தனின் கடமை

ஸாநந்த$_3$ம் ஸத$_3$நம் ஸுதாஶ்ச ஸுதி$_4$ய: காந்தா ந து$_3$ர்ப$_4$ாஷிணீ
ஸந்மித்ரம் ஸுத$_4$நம் ஸ்வயோஷிதி ரதிஶ்சாக்ஞாபரா: ஸேவகா: |
ஆதித்$_2$யம் ஶிவபூஜநம் ப்ரதிதி$_3$நம் ம்ருஷ்டாந்நபாநம் க்$_3$ருஹே
ஸாதே$_4$ா: ஸங்க$_3$முபாஸதே ஹி ஸததம் த$_4$ந்யோ க்$_3$ருஹஸ்த$_2$ாஶ்ரம: ||

வீட்டில் எல்லோரும் சுகமாக இருக்கிறார்கள். புத்திசாலியான மக்கள், இன்சொல் விளம்பும் துணைவி, நல்ல நண்பர்கள், மனைவியோடு நல்லுறவு, சொன்னதைச் செய்யும் வேலைக்காரர்கள், நாள்தோறும் விருந்தோம்பல், சிவபூஜை, அறுசுவை உண்டி, தினமும் மகான்களின் உபதேசம் – இப்படிப்பட்ட குடும்பி மிகவும் பாக்கியசாலி!

***வினா:– திருமணம் ஏன் செய்துகொள்ள வேண்டும்? திருமணம் செய்துகொள்வது இன்றியமையாததா?***

***விடை:–*** நம்முடைய சமுதாயத்தில் நைஷ்டிகன், உபகுர்வாணன் என்ற இரண்டுவிதமான பிரம்மசாரிகள் இருக்கிறார்கள். வாழ்க்கை முழுவதும் பிரம்மசரியத்தோடு இருப்பவர்கள் 'நைஷ்டிக பிரம்மசாரிகள்' எனப்படுவர். விசாரத்தின் மூலமாகத் தம்முடைய இன்பநுகர்ச்சி வேட்கையைத் தணித்துக் கொள்ள முடியாமல், இன்பநுகர்ச்சி ஆசையைத் தணித்துக் கொள்வதற்காக மட்டுமே திருமணம் செய்து கொள்பவர்கள் 'உபகுர்வாண பிரம்மசாரிகள்' என்று அழைக்கப்படுவர். புலனின்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையை விசாரம் மூலம் அடக்கிக் கொள்ள முடியாதவர்கள் விவாகம் செய்து கொள்ளட்டும்; புலன்நுகர்ச்சி வேட்கை, புலனின்பங்களை அனுபவிப்பதன் மூலம் அடங்குவதில்லை என்பதைத் தாங்களே உணர்ந்து கொள்ளட்டும் என்பதுதான் தாத்பர்யம். அதனால்தான், குடும்ப வாழ்க்கை நடத்திய பிறகு, வானபிரஸ்தம், சந்நியாசம் ஆகிய ஆசிரமங்களைக் கைக்கொள்ள வேண்டும் என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. எப்போதும் குடும்ப வாழ்க்கையில் இருந்து கொண்டு இன்பங்களை அனுபவித்துக் கொண்டிருப்பது என்பது மனிதத்தன்மை அல்ல.

எவருடைய மனத்தில் இன்பவேட்கை இருக்கிறதோ அல்லது எவர் தன்னுடைய வம்ச பரம்பரை தொடர வேண்டும் என்று விரும்புகிறாரோ, (வம்ச பரம்பரையைத் தொடரக்கூடிய) ஒரு சகோதரர்கூட இல்லாத அவர், தன்னுடைய இன்ப

வேட்கையைத் தணித்துக் கொள்ளும் எண்ணத்துடனோ அல்லது வம்ச பரம்பரை தொடர்வதற்காகவோ திருமணம் செய்து கொள்ளலாம். மேலே சொல்லப்பட்ட இரு விருப்பங்களும் இல்லாவிடில், திருமணம் செய்து கொள்ளத் தேவையில்லை. துறவு மார்க்கமே மிகவும் உயர்ந்ததென அறநூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது— *'நிவ்ருத்திஸ்து மஹாப$_2$லா ।'*

***வினா:– கலியுகத்தில் துறவு மேற்கொள்வது தடை செய்யப்பட்டிருக்கும்போது, மனிதன் நிவ்ருத்தியை எப்படி செய்ய முடியும்?***

***விடை:–*** கலியுகத்தில் சந்நியாச தர்மங்களைக் கடைப்பிடிப்பது மிகவும் சிரமம். அதனால், சந்நியாச தர்மங்களை முற்றிலுமாகச் செய்ய முடியாமல் போகும் என்பதால்தான், கலியுகத்தில் துறவுக்குத் தடை செய்யப் பட்டிருக்கிறது. அரசு அலுவலிலிருந்து பணி ஓய்வு பெறும் அலுவலர்களைப்போல, மனிதன் குடும்பப் பொறுப்புகளைப் பிள்ளை–பேரன்களிடம் ஒப்படைத்துவிட்டு, வீட்டிலேயே பூஜை–தியானம் செய்து கொண்டிருக்கவேண்டும். தேவையான உணவு–உடைகளுக்கு மட்டும், பிள்ளைகள் வற்புறுத்தினால் குடும்பத்தோடு தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும். பிள்ளைகள் வற்புறுத்தவில்லையென்றால், அந்தத் தொடர்பையும் விட்டுவிட வேண்டும். 'எனக்கு இவை எங்கிருந்து கிடைக்கும்?' என்ற கவலை தேவையில்லை. ஏனெனில்,

*ப்ராரப்$_3$த$_4$ பஹலே ரசா, பீசே$_2$ ரசா ஸரீர ।*
*துலஸீ சிந்தா க்யோ(ம்) கரே, ப$_4$ஜ லே ஸ்ரீரகு$_4$வீர ॥*

(பிராப்த கர்மா முதலில் செயல்படத் தொடங்கிவிட்டது; சரீரம் எடுத்ததோ பின்னால். பின்பு என்ன கவலை? ரகுவீரனைத் துதித்துக் கொண்டிருந்தால் போதும்!) என்று கோசுவாமி துளசிதாசர் கூறுகிறார்.

***வினா:– குடும்பியின் முக்கிய கடமை என்ன?***

***விடை:–*** பிரம்மசரியம், கிருஹஸ்தம், வானபிரஸ்தம், சந்நியாசம் ஆகிய நான்கு வாழ்வு முறைகளிலும்

உள்ளவர்களுக்குத் தொண்டு செய்வதே, குடும்பியின் முக்கியமான கடமை. ஏனெனில், குடும்பவாசிதான் எல்லோருக்கும் தாய்–தந்தையர், வளர்ப்பவர், காப்பாற்றுபவர். அதாவது, குடும்பத்திலிருந்துதான் பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானபிரஸ்தன், சந்நியாசி ஆகியோர் தோன்றுகிறார்கள்; வாழ்க்கைத் தேவைகளைப் பெறுகிறார்கள்; குடும்பியால் காப்பாற்றப்படுகிறார்கள். அதனால், நான்கு நிலைகளைச் சேர்ந்தவர்களையும் போற்றி வளர்ப்பதுதான் குடும்பியின் தலையாய கடமை.

விருந்தோம்பல், ஆடு–மாடு போன்ற நாற்கால் பிராணிகளின் நல்வாழ்வுக்கு ஆவன செய்தல், வீட்டில் வாழும் எலி முதலியவற்றைக்கூட தன் குடும்பத்தைச் சேர்ந்தவைகளாகக் கருதுதல், அவற்றுக்கெல்லாம் உணவளித்து வளர்ப்பது ஆகியவை குடும்பியின் தலையாய கடமை. இவ்விதமே, மகான்களுக்குத் தொண்டு செய்தல்; முன்னோர்களுக்கு அன்னப்பிண்டம்–நீர்க்கடன் இயற்றுதல்; பகவானிடம் மிக ஆர்வத்தோடு பணிந்து வணங்குதல் (வழிபாடு–தியானம்) ஆகியவை குடும்பத்திலுள்ளவரின் தலையாய கடமை ஆகும்.

***வினா:–* ‘குடும்ப வாழ்க்கை’ என்னும் நிலையில் எவ்வாறு இருக்கவேண்டும்?**

***விடை:–*** மனித உடலும், குறிப்பாக குடும்ப வாழ்வும் நம்மைக் கடைத்தேற்றுவதற்கான பள்ளிக்கூடம். உலகியல் இன்பங்களைத் துய்ப்பதற்கும், ஓய்வு கொண்டு சுகமாக இருப்பதற்கும், இம்மனித உடல் கொடுக்கப்படவில்லை. ***‘ஏஹி தந கர ப$_2$ல பி$_2$ஷய ந ப$_4$ாஈ ।’ (ஸ்ரீராமசரிதமானஸம் உத்தர. 44/1).*** சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள யாகம் முதலிய கர்மாக்களைச் செய்து, பிரும்மலோகம் முதலிய லோகங்களை அடைவதுகூட முக்கிய விஷயம் அல்ல. ஏனெனில், அங்கே சென்று பின்னர் மீண்டும் திரும்பி வரத்தான் நேரிடுகிறது. ***‘ஆப்$_3$ரஹ்மபு$_4$வநால்லோகா: புநராவர்திந:’ (கீ$_3$தா 8/16)***. ஆகவே, உயிர்ப் பிராணிகளின் நலனைக் கருத்தில் கொண்டு

குடும்ப வாழ்க்கையில் ஈடுபடவேண்டும். தனது சக்திக்கு ஏற்றபடி உடல், உள்ளம், அறிவு, தகுதி, அதிகாரம் ஆகியவற்றால் மற்றவர்களுக்கு நன்மை உண்டாகும்படி நடந்துகொள்ள வேண்டும். மற்றவர்களின் நலன்—நன்மைக்காக தனது சுக—சௌக்கியங்களைத் தியாகம் செய்வதில்தான் மனிதனின் மனிதத்தன்மை இருக்கிறது!

***வினா:–* குடும்பத்தில் இருப்போர் வேலை முதலான அன்றாட கடமைகளைச் செய்யும்போது ஏற்படுகிற இம்சையிலிருந்து எவ்வாறு விடுவிக்கப்படுவார்?**

***விடை:–*** குடும்ப வாழ்வில், நாள்தோறும் ஐந்துவித கொடுஞ்செயல்கள் நிகழ்கின்றன. (1) சமையற்கட்டில் எறும்பு முதலிய சிறுசிறு உயிர்கள் நெருப்பில் மரிக்கின்றன; விறகுக்கட்டைகளில் இருக்கும் சிற்றுயிர்களும் மரிக்கின்றன. (2) தண்ணீர் வைத்திருக்கும் குடங்களை இடம் மாற்றும்போதுகூட நுண்ணுயிர்கள் உயிர் விடுகின்றன. (3) துடைப்பத்தால் பெருக்கும்போதும் பற்பல உயிர்கள் நாசமடைகின்றன. (4) இயந்திரத்தில் தானியத்தை இட்டு மாவாக்கும்போதும் அநேக உயிர்கள் அரைபட்டுப் போகின்றன. (5) நெல்லை உமி நீக்கி அரிசியாக்கும் போதும் உயிர்கள் இறந்துவிடுகின்றன. இக்கொடிய தீச்செயல்களின் விளைவிலிருந்து விடுதலை பெறுவதற்காக, வைசுவதேவ பலி, பஞ்சமகாயக்ஞம் ஆகியவற்றை குடும்பஸ்தன் நாள்தோறும் செய்யவேண்டும். எவர், எப்போதும் பகவானையே சரணடைந்துள்ளாரோ, அவரை இக்கொடுஞ்செயல்கள் பாதிக்கமாட்டா. அவர் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கப்படுகிறார்!

***வினா:–* மாவு அரைப்பதற்கும், உமி நீக்குவதற்கும் இயந்திரத்தைப் பயன்படுத்தாதவரை பாவம் தொடராதல்லவா?**

***விடை:–*** அரைக்கப்பட்ட மாவு, தொலி நீக்கப்பட்ட தானியம் ஆகியவற்றை உபயோகப்படுத்துகிறீர்கள். அந்த மாவு அரைக்கப்பட்டபோதும், தொலி நீக்கப்பட்டபோதும் ஏற்பட்ட

ஜீவஹிம்ஸை என்னும் தீவினை உங்களைப் பற்றிக் கொள்ளும்.

*வினா:– வயல்வெளியில் அநேக உயிர்கள் கொல்லப் படுகின்றன என்பதால் குடியானவன் உழவுத்தொழிலையே விட்டுவிடுவதா?*

*விடை:–* அவசியம் உழவு செய்ய வேண்டும். ஆனால், உயிர்களுக்குத் துன்பம் நேரிடக்கூடாது என்பதை நினைவில் கொண்டிருக்க வேண்டும். உழவுத்தொழில் செய்வது குடியானவருக்கு விதிக்கப்பட்ட தொழிலாதலால், அவருக்குச் சிறிதளவு பாவமே ஏற்படுகிறது. அதனால், பாவத்திற்குப் பயந்து, தன்னுடைய கடமையை அவர் விட்டுவிடலாகாது. ஆம், மிக அதிகமான உயிர்களுக்குத் துன்பம் ஏற்படாதபடிக் கவனத்துடன் செயல்படுவது மிகவும் முக்கியம்.

*வினா:– இப்போதெல்லாம் நல்ல விளைச்சல் ஏற்பட வேண்டும் என்பதற்காக, பூச்சிக்கொல்லி மருந்துகளைத் தெளிக்கிறார்களே, அது சரியா?*

*விடை:–* உழவர்கள் இக்காரியத்தைச் செய்யவே கூடாது. முன்பு இப்படிப்பட்ட பாவத்தை மக்கள் செய்யாதிருந்தபோது, தானியம் குறைந்த விலைக்குக் கிடைத்தது. இப்போது, உயிர் வதையாகிற பாவம் செய்தும், தானியத்தின் விலை ஏறிவிட்டது. ஜந்துக்களை அழிப்பதன் மூலம் தானியம் நிறைய விளைவதுபோல் தோன்றினாலும், இச்செயலின் விளைவு நல்லதாக இருக்கப் போவதில்லை.

*வினா:– சாஸ்திரங்களில் குடும்பஸ்தனுக்கு ஐந்து கடன்கள் சொல்லப்பட்டுள்ளன. அவை பிதிர்க்கடன், தேவர்கடன், ரிஷிகடன், பூதகடன், மனிதர்கடன் என்பனவாகும். இவற்றில் பிதிர்க்கடன் என்பது என்ன? அதிலிருந்து விடுதலை பெறுவதற்கான வழி என்ன?*

*விடை:–* தாய்–தந்தையர், பாட்டனார்–பாட்டி, கொள்ளுப் பாட்டனார்–கொள்ளுப்பாட்டி, தாயாரைப் பெற்ற பாட்டனார்–

பாட்டி, கொள்ளுப்பாட்டனார்–கொள்ளுப்பாட்டி – இவர்கள் இறந்தவுடன் செய்யப்படும் காரியங்களுக்குப் 'பிரேத காரியம்' என்று பெயர். மேலும், குலமுறையாக, சிராத்த–தர்ப்பணம், அன்னப்பிண்டம்–நீர்க்கடன் முதலிய முன்னோர்களைக் குறித்து செய்யப்படும் செயல்கள் எல்லாம் 'பித்ருகாரியம்' ஆகும். இறந்தபின் உயிர்கள், தேவதை, மனிதன், பறவை–மிருகம், பூத–பிரேதம், செடி–கொடி முதலியவற்றில், ஏதோ ஒன்றுடன் சேர்ந்தாலும், 'பிதிரர்' என்ற பொதுப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

தாய்–தந்தையரின் சோணித–சுக்ல சம்பந்தத்தால் உடல் உண்டாகிறது. தாய்ப்பால் மூலமாகவும், தந்தையால் சேகரிக்கப்படும் உணவு மூலமாகவும் சரீரம் போஷிக்கப் படுகிறது. தந்தையின் செல்வத்தின் மூலமாகப் படிப்பும் தகுதியும் அடையப்படுகின்றன. தாய்–தந்தையரின் முயற்சியால் திருமணம் நடக்கிறது. இவ்விதம், பிள்ளைக்குத் தன் தாய்–தந்தையரிடமும், தாய்–தந்தையருக்குப் பாட்டனார்–பாட்டியிடமும், பாட்டனார்–பாட்டிக்குக் கொள்ளுப்பாட்டனார்–கொள்ளுப்பாட்டியிடமும் கடன் ஏற்படுகிறது. தொடர்ந்து வரும் இந்தப் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதற்காக, பிதிரர்களுக்கு நல்ல கதி கிடைப்பதற்காக, அவர்கள் பெயரில் அன்னப்பிண்டம்–நீர்க்கடன் அளிக்கவேண்டும்; சிராத்தம்–தர்ப்பணம் செய்யவேண்டும்.

ஒரு மைந்தன் தன் வாழ்நாள் முழுவதும், பெற்றோர் முதலியோர் குறித்து அன்னப்பிண்டம்–நீர்க்கடன் கொடுக்கிறான். ஆனால், எதிர்காலத்தில் பிண்டம்–நீர் கொடுப்பதற்காக, ஒரு மகனை உற்பத்தி செய்யவில்லையானால், அவன் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதில்லை. அதாவது, அவனிடம் பிதிர்க்கடன் இருந்து கொண்டிருக்கும். ஆனால், மகன் பிறந்து விட்டானேயானால், அவனிடம் பிதிர்க்கடன் ஒட்டிக் கொண்டிருப்பதில்லை. மாறாக, அந்தக் கடன் அவன்

வழித்தோன்றலை வந்தடைகிறது. முன்னோர்கள் பிண்டம்–நீர் விரும்புகிறார்கள். அதனால், அன்னப்பிண்டம்–நீர் கிடைத்தால், அவர்கள் சௌக்கியத்தை அடைகிறார்கள். கிடைக்காவிட்டால், துக்கத்தோடு போகிறார்கள். தம் மைந்தனுக்குக் குழந்தை இல்லாமற்போனாலும், 'இனிமேல் நமக்கு அன்னமும் நீரும் யார் அளிப்பார்கள்?' என்று கவலையோடு போவார்கள்.

***வினா:–* முன்னோர்களைக் குறித்து அளிக்கப் படுபவைகள், அவர்களைப் போய் அடைகின்றனவா?**

***விடை:–*** முன்னோர்களை முன்னிட்டு என்ன கொடுத்தாலும், அது முழுவதும் அவர்களுக்குக் கிடைத்துவிடும். அவர்களுக்காக அளிக்கப்படும் அன்னப்பிண்டம்–நீர், அவர்கள் எந்த யோனியில் பிறந்திருந்தாலும், அந்த யோனிக்கு ஏற்ற உணவுப் பண்டமாக அல்லது குடிக்கத் தக்கதாக உருவம் பெற்றுப் போய்ச் சேர்கிறது. முன்னோர்கள் மிருக ஜாதியில் பிறந்திருந்தால், அவர்கள் பெயரைக் கூறி அளிக்கப்படும் அன்னம், புல்லாக மாறிக் கிடைக்கும். தேவ ஜாதியில் தோன்றியிருந்தால் அமுதமாக மாறிக் கிடைக்கும். அதாவது, எந்தப் பொருளைக் கொண்டு அவர்கள் காப்பாற்றப்படுவார்களோ, அதே பொருள் அவர்களுக்குக் கிடைத்துவிடும். அமெரிக்காவில் உள்ள ஒருவருக்கு பணவிடை மூலமாக அனுப்பும் ரூபாய், அங்கே டாலராக (அமெரிக்க நாணயமாக) மாற்றப்பட்டுக் கிடைத்துவிடுவதைப் போல, முன்னோர்கள் குறித்து நாம் அளிக்கும் பிண்டம்–நீர், தானம்–புண்ணிய கர்மா ஆகியவை, அவர்கள் எந்த வகைப் பிறவி எடுத்திருக்கிறார்களோ, அந்த வகைக்கு ஏற்ற உணவு அல்லது குடிபொருள் உருவத்தில் கிடைத்துவிடுகிறது. இன்று நமக்குக் கிடைக்கும் உயர்ந்த உணவு–உடைகள், முன்பு செய்த நமது புண்ணியச் செயல்களின் விளைவாக இருக்கலாம். அல்லது நம்முடைய முந்திய பிறவியில் உண்டான பிள்ளை–பேரன்கள் செய்யும் சிராத்த–தர்ப்பணங்களின் பலனாகவும் இருக்கலாம். எனினும், பலன் கொடுக்கத் தொடங்கிவிட்ட நமது பிராரப்த கர்மத்தின் விளைவே, இது.

ஒருவன் ஒரு வங்கியில் பெருந்தொகையைச் சேர்த்து வைத்தான். அதில் ஒரு பகுதியைத் தன் பெயரிலும், ஒரு பங்கினை மனைவியின் பெயரிலும், இன்னொரு பங்கை மகன் பெயரிலும் போட்டிருந்தான் என்றால், தன்னுடைய பெயரில் போட்டிருந்த தொகையை மட்டுமே அவன் கையெழுத்திட்டுப் பெறமுடியுமே ஒழிய, மனைவி–மகன் பெயர்களிலுள்ள பணத்தைப் பெற முடியாது. அந்தத் தொகை அவனுடைய மனைவி–மகனையே போய்ச் சேரும். அவ்விதமே, முன்னோர்களைக் குறித்து அளிக்கப்படும் அன்னப்பிண்டம்–நீர், அந்தப் பித்ருக்களையே போய்ச் சேருமேயன்றி, நம்மை அல்ல. ஆமாம்! நாம் உயிருடன் இருக்கும்போதே கயாவிற்குச் சென்று பிண்டம்–நீர் இறைத்தால், மரணத்துக்குப் பின் அது நம்மை வந்தடையும். கயாவில் மிருகம்–பறவை பெயரில் அளிக்கப்படும் பிண்டம்–நீர்கூட அவைகளைச் சென்றடைகிறது. ஒரு கனவானுக்குத் தனது பசுவிடம் மிகவும் பிரியம் இருந்தது. அந்தப் பசு இறந்த பின்னர், அவருடைய கனவில் தோன்றித் தன் துயரத்தைக் காட்டியது. அவர் கயாவிற்குச் சென்று பிண்டம்–நீர் அளித்தார். மறுபடியும் அந்தப் பசு கனவில் தோன்றியபோது மகிழ்ச்சிகரமான தோற்றத்தைக் காட்டியது.

நம்மிடம், நாமே சேர்த்த செல்வமும், தந்தை, பாட்டனார், கொள்ளுப்பாட்டனார் தேடி வைத்த செல்வங்களும் இருக்குமேயானால், நாமே சேர்த்த பொருட்களின் மேல் நமக்குப் பூரண உரிமை இருக்கும் அளவுக்கு, தந்தை–பாட்டனார் சேர்த்து வைத்த பொருட்களின் மேல் உரிமை கொண்டாட முடியாது. குல வழக்கப்படி, தந்தை–பாட்டனாரின் சொத்துக்களின்பேரில் மகன்–பேரன்களுக்கு உரிமை உண்டு. இவ்விதமே, பித்ருக்களின் குலமுறைப்படி, மகன்–பேரன்களால் அளிக்கப்படும் பிண்ட–நீர்க்கடன், அவர்களுக்குக் கிடைக்கிறது. அதனால், மகன்–பேரன்களுக்குத் தந்தை–பாட்டனாருக்குப் பிண்டம்–நீர்க்கடன் செலுத்தும் பொறுப்பு இருக்கிறது. பித்ருலோகம் என்று ஒன்று இருக்கிறது. ஆனால், இறந்தவுடன்

எல்லோரும் பித்ருலோகம் போய்ச் சேரவேண்டும் என்ற விதி இல்லை. காரணம், தத்தம் வினைக்கேற்பவே, எல்லோருடைய மறுபிறப்பும் ஏற்படுகிறது.

***வினா:– ஒருவருடைய பெற்றோர்கள் முக்தி அடைந்து விட்டார்கள்; பகவானுடைய திவ்ய சந்நிதியில் சேர்ந்து விட்டார்கள் என்றால், அவர்கள் பெயரைச் சொல்லி அளிக்கப்படும் பிண்டம்–நீர்க்கடன் என்ன ஆகும்?***

***விடை:–*** தன்னுடைய தாய்–தந்தையர் முக்தி அடைந்து விட்டார்கள்; பகவானுடைய இருப்பிடத்தை (வைகுண்டத்தை) அடைந்து விட்டார்கள் என்ற செய்தி, மகனுக்குத் தெரியாதாகையால், அவன் மிகுந்த ஆர்வத்துடன் அளிக்கும் அன்ன–நீர்க்கடன், தானம்–புண்ணியம் முதலியன அவன் பெயரிலேயே சேர்க்கப்பட்டு, அவன் இறந்தபிறகு அவனுக்கே கிடைக்கின்றன. தூர தேசத்தில் உள்ள ஒருவருக்கு நாம் பணம் அனுப்பி, அவர் அங்கே இல்லாது போனால், நமக்கே திரும்பி வருவதைப் போல்தான் இதுவும்.

***வினா:– பிள்ளைப்பேறு அடையாவிட்டாலும்கூட ஒருவன் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறமுடியுமா?***

***விடை:–*** ஆமாம், விடுதலை பெறமுடியும். பகவானிடமே எல்லாவிதத்திலும் சரண் புகுந்துவிட்டவரிடம் எந்தக் கடனும் எஞ்சியிருக்க முடியாது.

***தே$_3$வர்ஷிபூ$_4$தாப்தந்ருணாம் பித்ரூணாம்***
***ந கிங்கரோ நாயம்ருணீ ச ராஜந் ।***
***ஶர்வாத்மநா ய: ஶரணம் ஶரண்யம்***
***க$_3$தோ முகுந்த$_3$ம் பரிஹ்ருத்ய கர்தம் ॥***

***(ஸ்ரீமத்$_3$பா$_4$க$_3$வதம் 11/5/41)***

''அரசே! அடைக்கலம் அடையத்தக்கவரான பகவான் முகுந்தனை, எல்லா வகையாலும் சரண் அடைந்துவிட்டவர் தேவ–ரிஷி–பித்ரு கடன்களிலிருந்தும், அதிதி பூஜை–பூதபலி முதலிய சடங்குகளிலிருந்தும் விடுதலை பெற்றுவிடுகிறார்.

இவர் (பகவானைத் தவிர, வேறு எவருக்கும்) அடிமை அல்லர்; கடனாளி அல்லர். கர்மவாசனையிலிருந்தும் கர்மத்தளையிலிருந்தும் வெளியேறிவிடுகிறார்.''

***வினா:– 'தேவருணம்' (தேவர்கடன்) என்பது என்ன? அதிலிருந்து விடுபடும் வழி என்ன?***

***விடை:–*** மழை பொழிகிறது; செங்கதிர் சுடுகிறது; காற்று வீசுகிறது; எல்லாவற்றையும் நிலம் தாங்குகிறது; இரவில் சந்திரனும், பகலில் சூரியனும் ஒளி வீசுகின்றன. இதனால்தான் எல்லோருடைய வாழ்க்கையும் நடக்கிறது. இவையெல்லாம் நம்மீது சுமந்துள்ள 'தேவர்கடன்' ஆகும். யாகம், யக்ஞம் செய்வதால் தேவதைகளுக்கு உடல்நலம் ஏற்படுகிறது. இதனால், நாம் தேவருணத்திலிருந்து விடுதலை பெறுகிறோம்.

***வினா:– 'முனிவர்கடன்' என்பது என்ன? அதிலிருந்து விடுதலை பெறுவதற்கான வழி என்ன?***

***விடை:–*** ரிஷி–முனிவர்களும், பெரியோர்களும் எழுதி வைத்துள்ள அறநூல்களைப் படிப்பதனால் ஞான ஒளி பெறுகிறோம்; கல்வி பெறுகிறோம்; செய்யத்தக்கது–தகாதது என்ற அறிவைப் பெறுகிறோம். இவ்விதமாக, நாம் அவர்களுக்குக் கடனாளி ஆகிறோம். அவர்களுடைய நூல்களைப் படிப்பதன் மூலமும், திரும்பத் திரும்பச் சிந்தித்துப் பார்ப்பதன் மூலமும், படித்தல்–படிப்பித்தல் மூலமும், சந்தியா–காயத்ரீ செய்வதன் மூலமும் ரிஷிகள்பால் நாம் ஏற்றுள்ள கடனிலிருந்து விடுதலை பெறுகிறோம்.

***வினா:– பூதருணம் என்பது என்ன? அதிலிருந்து விடுதலை பெறுவதற்கான வழி என்ன?***

***விடை:–*** பசு–எருமை, ஆடு–மாடு, ஒட்டகம்–குதிரை என்று எத்தனையோ பிராணிகளைக் கொண்டு, நமது வேலைகளை நடத்திக் கொள்கிறோம்; வாழ்க்கையைக் கழிக்கிறோம். செடி, கொடி முதலியவற்றிடமிருந்து பழம், பூ, இலை, விறகு முதலியன எடுத்துக் கொள்கிறோம். இதன் மூலம் நம்மீது

செடி—கொடிகள் போன்றவை மற்றும் உயிர்ப் பிராணிகளின் கடன்சுமை ஏற்படுகிறது. மிருகம்—பறவைகளுக்கு புல், உணவு கொடுப்பதாலும், நீர் ஊட்டுவதாலும், செடி—கொடிகளுக்கு உரமிட்டு நீர் பாய்ச்சுவதாலும், நாம் பூதருணத்திலிருந்து விடுபடுகிறோம்.

***வினா:— 'மனுஷ்யருணம்' என்பது என்ன? அதிலிருந்து விடுபடுவதற்கான வழி என்ன?***

***விடை:—*** பிறருடைய உதவி இல்லாமல் நம்முடைய வாழ்க்கையை நடத்திச் செல்ல முடியாது. பிறரால் போடப்பட்ட சாலைகளில் செல்கிறோம்; பிறரால் தோண்டப்பட்ட கிணற்று நீரை உபயோகப்படுத்துகிறோம்; பிறரால் வளர்க்கப்பட்ட மரம்—செடிகளைப் பயன்படுத்துகிறோம்; பிறரால் உற்பத்தி செய்யப்படும் அன்னம் போன்ற உணவுப் பொருட்களை உண்கிறோம் — இதுவே, அவர்கள் நம்மீது சுமத்தும் கடன் ஆகிறது. மற்றவர்களுடைய சௌகரியத்திற்காகக் கிணறு தோண்டச் செய்வது, தண்ணீர்ப் பந்தல் அமைப்பது, தோட்டம் ஏற்படுத்துவது, சாலை போடச் செய்வது, தர்மசாலை அமைப்பது, அன்னதான நிலையங்கள் நடத்துவது போன்றவற்றால் நாம், மனிதக்கடனிலிருந்து விடுதலை பெறுகிறோம்.

பிதிர்க்கடன், தேவர்கடன், ரிஷிகடன், பூதருணம், மனிதக்கடன் — இவ்வைந்தும் குடும்பஸ்தனுக்கே உரியவை. எவன் பகவானிடம் முற்றிலுமாக அடைக்கலம் புகுந்து விடுகிறானோ, அவன் பித்ருக்கள், தேவர்கள் முதலிய எவருக்கும் கடன்பட்டவனாக இருப்பதில்லை; எல்லாக் கடன்களிலிருந்தும் விடுபடுகிறான்.

***வினா:— தனக்கு பிள்ளைப்பேறு உண்டாகாதபோது தனது உறவினர் அல்லது அனாதைச் சிறுவர்—சிறுமியரைச் சுவீகாரம் (தத்து) எடுத்துக் கொள்ளலாமா, கூடாதா?***

***விடை:—*** இந்தக் காலத்திய நடைமுறைகளைப் பார்க்கிற போது, தத்து எடுத்துக் கொள்ளாமலிருப்பதே நல்லது. தன்

வயிற்றில் பிறந்த பிள்ளையே பணிவிடை செய்வதில்லை, நம் சொற்படி நடப்பதில்லை என்று ஆகிவிட்டபோது, தத்து எடுத்துக்கொண்ட பிள்ளை மட்டும் நமக்கு என்ன செய்துவிடப் போகிறான்? பிண்டம்–நீர்க்கடன் அளிப்பதற்காகத் தத்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற விதிமுறை இருந்தாலும், அவன் பிண்டம்–தண்ணீர் கொடுக்கமாட்டான் என்றாகும்போது, தத்து எடுப்பதால் என்ன பயன்? நமக்குப் பிள்ளை அவசியம் தேவை என்றால் இறைவன் கொடுப்பான். நமக்குப் பிள்ளை தேவையில்லை. அதனால், கடவுள் நமக்குப் பிள்ளையைக் கொடுக்கவில்லை. ஆகவே, சுவீகாரம் செய்துகொண்டு, தனக்குத்தானே ஆபத்தை விலைக்கு வாங்குவானேன்? அநேகமாக, சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட பிள்ளைகள் எல்லாம், தாய்–தந்தையருக்குத் துயரத்தின் மேல் துயரங்களைக் கொடுக்கிறார்களே தவிர, அவர்களுக்குப் பணிவிடை செய்வதில்லை. ஆதலால், அனாதைச் சிறுவர்களுக்குக் கல்வி கற்பிக்கவேண்டும். அவர்களுக்குத் தொண்டு செய்யவேண்டும். அவர்கள் உடம்பைப் பேணுவதற்கான ஏற்பாடுகளை மட்டுமே செய்யவேண்டும்.

***வினா:– பிள்ளைகள் இல்லாவிட்டால், முதுமைக் காலத்தில் நமக்கு யார்தான் தொண்டு செய்வார்கள்?***

***விடை:–*** யாருக்கு மைந்தர்கள் இருக்கிறார்களோ, அவர்களெல்லாம் தத்தம் தாய்–தந்தையருக்குப் பணிவிடை செய்கிறார்களா, என்ன? இந்நாளைய மைந்தர்கள் தாய்–தந்தையரின் சொத்து, சுகங்களைத் தம் பெயரில் மாற்றிக் கொள்ள விரும்புகிறார்கள்; சிராத்தம்–தர்ப்பணம் பயனற்றவை என்று எண்ணுகிறார்கள். இப்படிப்பட்ட மைந்தர்கள் எங்கே தொண்டு செய்யப் போகிறார்கள்? பெற்றோர்களுக்குத் துன்பங்களைக் கொடுப்பவர்களாக மட்டுமே அவர்களால் இருக்க முடியும். உண்மையில், நமது பிராரப்த வினையின்படி, எப்படிப்பட்ட தொண்டு கிடைக்க வேண்டுமோ, எவ்வளவு சுக–சௌக்கியங்கள் கிடைக்க வேண்டுமோ, அவ்வளவும்

கிடைக்கும். மகன் இருந்தாலும் இல்லாவிட்டாலும், முற்றும் துறந்த துறவிகளுக்குச் செய்யப்படும் தொண்டு போன்றுகூட, குடும்பஸ்தர்களுக்குக் கிடைப்பதில்லை என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோமே? அதாவது, பிள்ளை இருந்தால் பணிவிடை செய்வான் என்று எண்ணக்கூடாது.

***வினா:– மகன் இல்லாவிட்டால், மரணத்திற்குப்பின் பிண்டம்–நீர்க்கடன் செலுத்துவது யார்? பிண்டம்–நீர்க்கடன் செலுத்தப்படாவிட்டால், நமக்கு உய்வு எப்படி ஏற்படும்?***

***விடை:–*** பிண்டம்–தண்ணீர் கொடுப்பதால், அந்தப் பிண்டம்–தண்ணீரைப் பெறுகிறவர்களின் பிறப்பு–இறப்பு தொடர்ந்து நிகழ்வதாகிறது. சாலையில் போய்க் கொண்டிருக்கிற ஒருவன் பசி–தாகத்தால் ஓரிடத்தில் நிற்கிறான். அவனுடைய நடை தடைப்படுகிறது. உணவும் நீரும் கிடைத்தவுடன், தன்னுடைய வழியில் செல்லத் தொடங்குகிறான். அதுபோலவே, மரித்துப் போனவர்களுக்குப் பிண்டம்–தண்ணீர் கிடைக்காது போனால், அவர்கள் ஓர் இடத்தில் தடைப்படுகிறார்கள், தங்கிவிடுகிறார்கள். பிண்டம்–தண்ணீர் கிடைத்தவுடன் அங்கிருந்து புறப்பட்டுச் செல்கிறார்கள். அதாவது, அவர்களுடைய பயணம் தொடர்கிறது. அவர்களுடைய பிறப்பும் இறப்பும் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். ஆனால், அவர்களுக்கு முக்தியும் நற்பேறும் உண்டாகாது.

உண்மையில் முக்தி பெறுவதும், உயர் உலகங்களில் மேன்மையோடு வாழ்வதும், சிறிதளவுகூட நமது பிள்ளைகளைச் சார்ந்திருக்கவில்லை. முக்தி என்பது பிள்ளைகளைச் சார்ந்திருந்தால், அது பிறர் வசப்பட்டதாகிவிடுகிறது. அப்படியானால், மனிதப்பிறவியில் சுதந்திரத்திற்கு என்ன கௌரவம்? உடற்பற்றும்கூட விண்ணுலக நல்வாழ்வுக்கு, ஆன்ம விடுதலைக்குப் பாதகமானது எனும்போது, மரணத்திற்குப்பின் பிள்ளையிடமிருந்து பிண்டம்–தண்ணீர் எதிர்ப்பார்ப்பது எவ்வாறு பொருந்தும்? அது பந்தத்தில்தான் ஆழ்த்தும். ஆகவே, தன்னுடைய நன்மையைக் கோருபவன்,

புத்ரைஷணா (மகன் மீது உள்ள பாசப்பற்று), லோகைஷணா (உலகத்தில் மானம்–மரியாதை, அருமை–பெருமை – இவற்றை அடைய பெருவிருப்பம்), வித்தைஷணா (செல்வத்தின் மேலுள்ள ஆசை) – இம்மூன்றையும் விட்டொழிக்க வேண்டும். ஏனெனில், இம்மூன்றும்தான் பரமாத்மாவை அடைவதில் தடைகளாக அமைந்துள்ளன.

மகனைப் பெற வேண்டும், பிண்டம்–தண்ணீர் கிடைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறவன், பிறப்பு–இறப்புச் சுழலில் சிக்கிக்கொள்ள விரும்புகிறான். ஏனெனில், ஏதேனும் ஒரு பிறவி எடுத்தால்தானே, பிண்டம்–தண்ணீரை எதிர்பார்க்க நேரிடும்? பிறவியே இல்லாமற்போய்விட்டால் பிண்டமும் தண்ணீரும் யாருக்கு வேண்டும்?

'புத்திரன் இல்லாவிட்டால் நற்கதியே கிடைக்காது' என்பது முற்றிலும் தவறு. சந்ததியின் மூலமாகத்தான் நற்கதி கிடைப்பது உண்மையானால், பத்து பதினோரு குட்டிகளைப் பெற்றுக் கொள்ளும் பன்றியும், நூற்றுக்கணக்கில் குட்டிகளைப் பெறும் பாம்பும் நற்கதி அடையவேண்டுமே? அப்படியே அதிக மக்களைப் பெறுகிறவர்களுக்கு விரைவில் நற்கதி கிட்டவேண்டும். ஆனால், இப்படி நிகழ்வதேயில்லை.

சந்ததி இருந்தாலும், இல்லாமற்போனாலும் மனிதன், பகவானிடமே ஈடுபட்டிருக்க வேண்டும். பகவானையே சார்ந்து இருந்து பஜனம் செய்யவேண்டும். ஆனால், சந்ததி இல்லாத ஒருவருக்குப் பிள்ளைப் பாசத்தை அடக்க முடியாமற்போனால், குழந்தை இராமன், பாலகிருஷ்ணன், பாலகோபாலன், பாலமுருகன் ஆகியோரைத் தனது சொந்தக் குழந்தையாகவே கருதி, அவர்களிடம் பிள்ளைப்பாசத்தைக் காட்டலாம். அந்த மகன் (பகவான்) எப்படித் தொண்டு செய்வானோ, அப்படிப்பட்ட தொண்டினை வயிற்றில் பிறந்த மகன்கூடச் செய்யமாட்டான். அந்த மைந்தன் இகலோக–பரலோக வாழ்க்கைக்கான எல்லா நற்செயல்களையும் செய்து முடிப்பான்.

***வினா:–*** **குடும்ப வாழ்க்கையில் குழந்தைகளை வளர்த்துப் பராமரிப்பது, திருமணம் செய்வது போன்றவை சம்பந்தமாகப் பற்பல கவலைகள் ஏற்படுகின்றனவே. அந்தக் கவலைகளிலிருந்து எவ்வாறு விடுதலை பெறுவது?**

***விடை:–*** ஒவ்வொரு உயிரினமும் தனது பிராரப்த கர்மாவுக்கு ஏற்பவே பிறவியை அடைகிறது. பிராரப்தத்தில் மூன்று பொருட்கள் அடங்கியுள்ளன. அவை பிறப்பு, ஆயுள், புலன்நுகர்ச்சி.† இம்மூன்றில் உயிரினுடைய 'பிறப்பு' நடந்துவிட்டது. அதற்கு எவ்வளவு ஆயுள் உண்டோ, அதுவரை வாழ்ந்துதான் தீரும். மனதிற்குகந்த–உகக்காத சூழ்நிலைகளின் தோற்றமே போகம் அல்லது புலன்நுகர்ச்சி எனப்படும். உண்மையில், எந்தச் சூழ்நிலையும், எந்த மனிதனையும் சுகப்படுத்துவதோ, துன்பப்படுத்துவதோ இல்லை. மாறாக, மனிதன் தனது அறியாமையால் சந்தர்ப்பச் சூழலிலிருந்து சுகவாசியாகவோ, துக்கப்படுபவனாகவோ எண்ணிக் கொள்கிறான்.

மகள் பூப்பெய்துவிட்டாள் என்றால், அவள் திருமணம் குறித்துக் கவலைப்பட ஆரம்பித்துவிடக் கூடாது. ஏனென்றால், அவள் தன் விதியைக் கையுடனே கொண்டு வந்திருக்கிறாள். அதனால், அவளுக்கு அனுகூலமான அல்லது விரோதமான வாய்ப்புகள், அவளுடைய வினைப்படியே தோன்றும். ''எந்த இடத்தில் நம் வீட்டுப்பெண்ணை மணம் முடித்தால் சௌக்கியமாக இருப்பாள்'' என்ற ஒரு சிந்தனை மட்டும் தாய்–தந்தையருக்கு இருந்தால் போதும். இப்படிச் சிந்தித்து ஆராய்வது தாய்–தந்தையினரின் கடமை. ஆனால், 'நாம் அவளைச் சௌக்கியமாகவே வைத்திருப்போம்; நல்ல குடும்பத்திலேயே கொடுப்போம்' என்பது நம் கையில்

---

† ***ஸதி மூலே தத்$_3$விபாகோ ஜாத்யாயுர்போ$_4$க$_3$ா:*** **।**

***(யோக$_3$த$_3$ர்ஶநம் 2/13)***

பிராரப்தத்தின் விளைவுகளே பிறப்பு, ஆயுள், போகங்கள்.

இல்லை. ஆதலால், கடமையைத் தவறாது செய்யத்தான் வேண்டும். ஆனால், கவலைப்படத் தேவையில்லை.

கவலை என்று ஒன்று; ஆராய்ச்சி (விசாரம்) என்று ஒன்று. அறியாமையிலிருந்து கவலை தோன்றுகிறது; அதனால் உள்மனத்தில் மாசுபடிகிறதே தவிர, புதிய முன்னேற்றம் ஏற்படுவதில்லை. ஆனால், ஆராய்ச்சி செய்வதன் மூலமாக அறிவில் தெளிவு உண்டாகிறது. ஆகவே, ஒவ்வொரு செயலிலும் ஈடுபடும்போது, அதை எவ்வாறு செய்வது, எந்த முறையில் செய்வது? என்பது பற்றிச் சிந்தித்து ஆராயவேண்டும்; கவலை கொள்ளக் கூடாது. கவலைப்படாமல் சிந்தனை செய்தால் ஏதேனும் ஒரு வழி கிடைக்காமல் போகாது.

***வினா:– முதுமைக் காலத்தில், பிள்ளைகள் கவனிக்கா விட்டால் என்ன செய்யவேண்டும்?***

***விடை:–*** 'இவர்கள் என்னுடையவர்கள்' என்ற மமகாரத்தை நீக்கிவிட வேண்டியதுதான். 'இவர்கள் எனது மக்கள் அல்லர்' என்ற மனோபாவத்தைப் பெறவேண்டும். எவருமே பணிவிடை செய்வதில்லை என்ற சூழ்நிலையில், 'குடும்பத்தில் உள்ளவர்களிடமிருந்து உதவி கிடைக்கும்' என்ற நம்பிக்கை உண்டாகும்போது, அதே நபர்களிடமிருந்து துன்பம்தான் கிடைக்கும். ***'ஆஶா ஹி பரமம் து$_3$:க$_2$ம் நைராஶ்யம் பரமம் ஸுக$_2$ம் ।'*** – 'எதிர்பார்ப்பு மிகவும் துக்கம்; எதையும் எதிர்பாராதிருத்தல் மிகவும் சுகம்.' ஆதலால், அந்த எதிர்பார்ப்பைத் தியாகம் செய்து ஏற்படும் இடைஞ்சல்களைத் தவம் செய்வதற்கு உகந்ததாகக் கொண்டு, ''பகவானுக்கு என்மீது எத்துணை கருணை! நாமே தவம் மேற்கொள்வதற்கான வாய்ப்புக் கொடுத்திருக்கிறார். குடும்பத்திலுள்ளவர்கள் நம்மீது அக்கறை கொண்டு பணிவிடை செய்வார்களேயானால், அவர்கள்பால் நாம் மோக–மமகார வலையில் சிக்கிக் கொள்வோம். அதிர்ஷ்டவசமாக, அருள்பொழியும் பகவான் அப்படிப்பட்ட சிக்கலில் நம்மை ஆழ்த்தவில்லை'' என்று கருதவேண்டும்.

மனிதனுடைய ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது, மோக–மமகார வலைதான். அந்தத் தடையை நீக்குபவர்கள், நமக்கு உபகாரம் செய்வதாகவே கருதவேண்டும். ''தடை ஏதும் இல்லாமல் செய்து, நமக்கு நன்மையையே செய்கிறார்கள். நம்மிடம் அவர்களுக்கு எவ்வளவு அன்பு இருக்கிறது!'' என்று எண்ண வேண்டும்.

வாழ்நாள் முழுவதும் பிறருடைய தொண்டினை எதிர்பார்த்தே வாழ்வதால், முதுமைக் காலத்தில் இயலாமை காரணமாக, குடும்ப அங்கத்தினர்களிடமிருந்து உதவியை எதிர்பார்க்கும் ஆசை அதிகமாகிவிடுகிறது. அதனால், தொடக்கத்திலிருந்தே மனிதன் கவனமாக இருக்கவேண்டும். தொண்டுகளைப் பெறுவதற்காக நான் இங்கே வரவில்லை. எல்லோருக்கும் தொண்டு செய்வதற்காகவே வந்திருக்கிறேன். ஏனெனில், மனிதர், தேவர், ரிஷி, முனிவர், பிதிரர், மிருகம், பறவை, பகவான் ஆகிய எல்லோருக்கும் உதவியாக இருப்பதற்காகத்தான் மனித உடல் கிடைத்திருக்கிறது. அதனால், எவரிடமிருந்தும் உதவி–உபகாரங்களை எதிர்பார்க்கக் கூடாது. ஆரம்பத்திலிருந்தே எவரிடமிருந்தும் நாம் உதவி–உபகாரங்களை எதிர்பார்க்காமல் இருப்போமேயானால், வயோதிக நிலையிலும் பிறருடைய தொண்டு கிடைக்காவிட்டால், நமக்குத் துயரம் ஏற்படாது. ஆம்! மற்றவர்களிடமிருந்து பணிவிடைகளை எதிர்பார்க்கும் உளப்பாங்கு நமக்கு இல்லாமற்போனால், அவர்கள் மனத்தில் 'நமக்கு சேவை செய்ய வேண்டும்' என்ற விருப்பம் விழித்தெழும்.

ஒவ்வொரு துறையிலும் தியாகத்திற்கு அவசியம் ஏற்படுகிறது. தியாகம் செய்வதால், அப்போதைக்கு சாந்தி கிடைக்கிறது. பாதகமான சூழ்நிலை ஏற்படும்போதும் 'மகிழ்ச்சியோடிருத்தல்' என்பது மிகப்பெரிய தவம் ஆகும். உள்ளத்தூய்மை என்பது தவத்தின் மூலம் பெறப்படுகிறது; சௌக்கியங்களை அனுபவிப்பதன் மூலமாக அல்ல. சௌக்கியத்திற்கான வசதிகளை விரும்புவதனால் அந்தக்கரணம்

மாசடைகிறது. அதனால் மனிதன், தன்னுடைய சுகத்தை ஒருபொழுதும் விரும்பக்கூடாது. மாறாக, தன் உடல், உள்ளம், சொல் மூலமாகப் பிறருக்கு நலன் ஏற்படச் செய்வதிலேயே கருத்தாயிருக்க வேண்டும்.

**வினா:– குடும்பத்தில் ஒருவர் இறந்து போய்விட்டால், இறந்தவரின் ஆன்மா சாந்தி அடையவும், தன்னுடைய துக்கம் குறையவும் என்ன செய்யவேண்டும்?**

**விடை:–** (1) இறந்தவருக்காக முறைப்படி, நாராயண பலி, சிராத்த–தர்ப்பணங்கள் செய்யவேண்டும். (2) அவருடைய நினைவு வரும் போதெல்லாம், பகவானுடைய திருப்பாதங்களில் அவரைக் காணவேண்டும். (3) அவர் நினைவாக கீதை பாராயணம், பாகவத ஸப்தாஹம், ஸ்ரீராமசரிதமானச பாராயணம் (ஒன்பது நாட்கள்), நாமஜபம், சங்கீர்த்தனம் ஆகியன நிகழ்த்த வேண்டும். (4) அவர் பொருட்டு ஏழைக் குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கலாம். இனிப்பைப் பெறும் சிறுவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள். அவர்கள் அடையும் மகிழ்ச்சியினால், இறந்தவருடைய ஆன்மா மகிழ்கிறது; நாமும் மகிழ்கிறோம்.

நமது சோகத்தை வெளிப்படுத்தாமல், சத்சங்கம், புராணப் பேருரைகள், நாம சங்கீர்த்தனம், கோவிலுக்குச் செல்லுதல், புனித நீராடல் போன்ற விஷயங்களில் அவசியம் ஈடுபட வேண்டும். இவற்றுள்ளும் அடியார்கள் கூட்டத்தில் சேர்வது என்பது மிக்க சிறப்புடையது. ஏனெனில், சத்சங்கத்தினால் எல்லாத் துயரங்களும் விலகிப் போகின்றன.





## 2. நடத்தை

***வினா:–*** ***குடும்பத்திலுள்ள பெரியோர் முதியோரிடம் நாம் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்?***

***விடை:–*** பெரியோர்களின் சௌக்கியத்திற்கும் ஓய்வுக்கும் ஏற்பாடு செய்வது; அவர்களுக்குத் தொண்டு செய்வது; அவர்களுக்குப் பெருமை அளிப்பது; அவர்களுக்கு மரியாதை காட்டுவது; அவர்களுடைய ஆணைப்படி நடப்பது; அவர்களுடைய கட்டுப்பாட்டில் இருப்பது – இவை சிறியோர்களின் கடமையாகும். ஆனால், இது பெரியோர்களுடைய சொந்தக் கடமை அல்ல. அதாவது, நாம் பெரியவர்கள், மதிக்கப்பட வேண்டியவர்கள், கௌரவத்திற்குரியவர்கள் என்று பெரியோர்கள் எண்ணிக் கொள்ளக் கூடாது. காரணம் இவ்வித எண்ணம் இருக்குமேயானால், பிறருடைய உள்ளத்தில் மரியாதை குறைந்து, நாளடைவில் அவமரியாதை கூடத் தோன்றிவிடும். ஆதலால், எல்லோருடைய நல்வாழ்வுக்கான செயல்களைச் செய்வது, இன்னல்களைத் தாங்கிக் கொள்வது, சிறியவர்களின் சுக–சௌகரியங்களைக் கவனிப்பது ஆகியவையே பெரியவர்களுடைய நோக்கமாக இருக்கவேண்டும். சிறியவர்களும் பெரியவர்களும் இவ்விதப் பாசப்பற்றுதல் கொண்டிருந்தால், குடும்பமும் சமுதாயமும் சௌக்கியமாக இருக்கும்.

***வினா:–*** ***கைம்பெண்களிடம் மாமனார், மாமியார், பெற்றோர் ஆகியவர்கள் எவ்வாறு பழகவேண்டும்?***

***விடை:–*** கைம்மை அடைந்தது மகளோ, மருமகளோ – அவளிடத்தில் மாமனார்–மாமியாரும், பெற்றோரும் மனப்பூர்வமாக ஆதரவு காட்டவேண்டும். அவள் கெட்டுப் போகாவண்ணம் பாதுகாப்புச் செய்து, கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும். அதாவது, அவள் எப்போதும் துக்கப்பட்டுக் கொண்டிராமலும், அதே சமயம் அவள் நடத்தை கெட்டுப் போகாமலும்

இருப்பதற்கான முறையில், அவளுடைய நலனில் அக்கறையுள்ளவர்களாக நடந்து கொள்ள வேண்டும்.

கைம்மை அடைந்துவிட்ட மருமகள் அல்லது மகளின் மாமியார்–தாயார், தாங்களும் எளிய வாழ்வை மேற்கொள்ள வேண்டும். படாடோபமான உடை, அணி, உணவு முதலியவற்றை மிகவும் விரும்பி அனுபவிக்கக் கூடாது. அடிப்படை தேவைக்கு ஏற்ற அளவே ஏற்கவேண்டும். இதைக் கண்டு மருமகளும் மகளும் தங்களைச் சீரமைத்துக் கொள்வார்கள். சுக–போகங்களை அனுபவிக்கும் மாமியார்–தாயாரைப் பார்க்கும் மருமகள்–மகள் உள்ளத்தில் நல்விளைவு ஏற்படாது. மாமியாரும் அன்னையாரும் நியமக் கட்டுப்பாட்டோடு இருந்தால், மருமகள்–மகள் உள்ளத்தில் அதன் தாக்கம் நல்லதாக இருக்கும். அவர்கள் வாழ்க்கை செம்மைப்படும். ''இந்த அவலச்சூழலில் கூட நாம் ஓர் ஒழுங்குக் கட்டுப்பாட்டுடன் வாழாவிட்டால், பின் எப்போதுதான் கட்டுப்பாட்டுடன் இருப்போம்?'' என்று, மாமியார்–தாயார்கள் சிந்திக்கவேண்டும். உலகத்தில் புலன்களைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்போருக்கும், தன்னலம் துறந்த தியாகிகளுக்கும்தான் பெருமை உண்டு. இன்பநுகர்வில் ஆழ்ந்திருப்போருக்கும், பொருளாசை கொண்டோருக்கும் அல்ல.

***வினா:– சகோதரர்களும், அவர்களது துணைவிகளும் கைம்பெண்ணிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?***

***விடை:–*** சகோதரர்களும், அவர்களுடைய மனைவிமார்களும், கைம்பெண்ணிடம் அந்தரங்கமான மரியாதை பூண்டிருக்க வேண்டும். அவளை வெறுத்து ஒதுக்கக் கூடாது. அவளுடைய நடத்தையையும் உணர்வுகளையும் போற்றிப் பாதுகாக்கும் வகையில் பரிவோடு நடந்துகொள்ள வேண்டும். அவளுடைய நன்மையை முன்னிட்டு, அவள் மேல் கட்டுப்பாடும் அன்பும் கொண்டிருக்க வேண்டும்.

***வினா:– தாய்–தந்தையர், பெண்ணின் புக்ககத்தில் உணவு கொள்ளலாமா, கூடாதா?***

*விடை:–* கன்னிகாதானம் செய்து கொடுக்கப்பட்டதும், அவள் புகுந்த வீட்டின் தலைவி ஆகிறாள். அவளுடைய பெற்றோர்களுக்கு அந்த வீட்டில் உணவு கொள்ள அதிகாரம் இல்லை. தானம் செய்யப்பட்டுவிட்ட பொருளின் மீது தானம் செய்பவருக்கு உரிமை ஏதும் இல்லை. இதுபற்றி நாம் ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறோம். பர்ஸானாவைச் சேர்ந்த ஒரு அருந்ததியர், ஏதோ காரியமாக ஒரு நாள் காலை நந்தகோபனின் கிராமத்திற்குச் சென்றார். அங்கே நண்பகல் வரை தங்கும்படி ஆயிற்று. அவர் சாப்பிடவும் இல்லை; நீர் அருந்தவும் இல்லை. அவருக்கு மிகவும் தாகமாக இருந்தது என்றாலும் பெண் கொடுத்துள்ள கிராமத்து நீரைப் பருக முடியுமா?† ஏனென்றால், 'நம்முடைய விருஷபானு அவர்கள், தன்னுடைய பெண்ணை இங்கே கொடுத்திருக்கிறார்.' இவ்வாறு எண்ணி, அங்கே ஒரு சொட்டு நீர்கூட அருந்தாமல் பர்ஸானாவுக்குத் திரும்பி நடக்கத் தொடங்கினார். வழியில் நடைக்களைப்பினால் அவர் தளர்ந்து விழுந்தார். அப்போது ராதா அம்மையார், அந்த அருந்ததியரின் பெண்ணினுடைய உருவம் தாங்கி, அவரருகே வந்து கூறினாள்— "அப்பா! நான் உங்களுக்குத் தண்ணீர் கொண்டு வந்திருக்கேன், பருகுங்கள்."

அவர் சொன்னார்— "மகளே! நந்தருடைய கிராம எல்லைக்குள்ளேயே இன்னும் இருக்கிறேன். அதனால், இந்த இடத்துத் தண்ணீரைப் பருகலாகாது." ராதா கூறினாள்— "அப்பா! பர்ஸானாவிலிருந்தே நான் ஜலம் கொண்டு வந்திருக்கிறேன்." அவர் அந்தத் தண்ணீரைப் பருகிவிட்டுச் சொன்னார்— "பெண்ணே! நீ முன்னாலே போ, நான் பின்னே வருகிறேன்." ராதை சென்றுவிட்டாள். அவர் தன் வீட்டை அடைந்ததும், தன் மகளை அன்போடு அணைத்துக் கொண்டு,

† உத்தர பிரதேச மாநிலத்தில் ஸ்ரீபிருந்தாவனத்திற்கு அருகிலுள்ள பர்ஸானா என்ற சிற்றூரில் ஸ்ரீராதாதேவி அவதரித்தார். பர்ஸானா மக்கள் இன்றளவும் ஸ்ரீராதாதேவியைத் தங்கள் மகளாகக் கருதி வருகிறார்கள்.

''மகளே! எனக்குத் தண்ணீர் கொடுத்து உயிரைக் காப்பாற்றினாய். நீ மட்டும் தண்ணீருடன் வந்திராவிட்டால், என் உயிரே போயிருக்கும்'' என்று கூறினார். பெண் சொன்னாள்— ''அப்பா! தண்ணீரா? நான் கொண்டு வந்தேனா? நான் வரவேயில்லையே?'' ''ராதைதான் எனக்குத் தண்ணீர் கொடுப்பதற்காக, என் மகளுடைய உருவில் வந்திருக்கிறாள்'' என்பது அவருக்குப் புரிந்தது. அதாவது, முற்காலத்தில் தம் பெண்களைத் திருமணம் செய்து கொடுத்துள்ள கிராமத்து உணவையும் நீரையும்கூட மக்கள் ஏற்காமலிருந்தார்கள் என்ற உண்மையை உணர வேண்டும்.

மகளுக்குப் பிள்ளைப்பேறு உண்டாகாத காலம் வரையில், அவள் வீட்டில் உணவும் நீரும் அருந்தக்கூடாது. ஆனால், பெண்ணுக்குக் குழந்தை பிறந்துவிட்டால், அவள் வீட்டில் சாப்பாடு–தண்ணீர் அருந்தலாம். தன் முன்னோர் கடனிலிருந்து விடுதலை வேண்டியே, பிறர் வீட்டுப் பெண்ணை மாப்பிள்ளை ஏற்றுக் கொள்கிறார். அவருக்குச் சந்ததி தோன்றியதும் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுகிறார். அப்போது, தம் மகள் மீது தாய்–தந்தையருக்கு ஓர் உரிமை உண்டாகிறது. அதனால்தான் பெண் வயிற்றுப்பேரன், தன் தாத்தா–பாட்டிகளுக்குச் சிராத்தம்–தர்ப்பணம் செய்கிறான். அவர்களுக்கு அன்னப்பிண்டம்–நீர்க்கடன் கொடுக்கிறான். மேலுலகத்தில் வாழும் தாத்தா–பாட்டிகள், பெண் வயிற்றுப்பேரன் கொடுக்கும் சிராத்தம்–தர்ப்பணம், பிண்டம்–நீர் ஆகியவற்றை ஏற்கவும் செய்கிறார்கள். மகளுக்குப் பிள்ளை பிறக்காமல், பெண்ணே பிறந்தாலும்கூட அவள் வீட்டில் உணவு கொள்ளலாம். ஒரு சந்ததி தோன்றியவுடனேயே, கன்யாதானம் பலனுடையதாகி விடுகிறது.

***வினா:–* *தாய்–தந்தையர், மகன்–மகள் இவர்கள் தங்களுக்குள் எவ்வாறு பழக வேண்டும்?***

***விடை:–*** மகனோ, மகளோ, நம் வீட்டில் பிறவி எடுத்துள்ளார்கள். இவர்களுடைய இம்மை–மறுமை

நல்வாழ்வுக்கான காரியங்களைச் செய்யவேண்டும் என்று தாய்–தந்தையர் நினைக்க வேண்டும். தங்களுடைய சுக–சௌகரியங்களைப் பற்றியே எண்ணிக் கொண்டிராமல், 'இவர்கள் வாழ்க்கை செம்மையாக அமைய வேண்டும்' என்ற கருத்துடன், அவர்கள் மீது ஆதிக்கம் வைத்து, நல்ல கல்வி கற்பித்து, சிலசமயங்களில் அவர்கள் நன்மை கருதிக் கடுமையாகவும் நடந்து கொள்ளவேண்டும்.

''இந்த உடலைக் கொண்டுதான் நாம் பரமாத்மாவை அடையவேண்டும்; இந்த எல்லையற்ற ஆனந்தத்தை அனுபவிக்க இயலும். இந்த உடலைத் தாய்–தந்தையரிடமிருந்து பெற்றுள்ளோம். அதனால், ஒருபொழுதும் நம்மால் அவர்களுக்குத் துயரம் ஏற்படக்கூடாது'' என்பது, மகன்–மகளின் குறிக்கோளாக இருக்கவேண்டும். நம்மால் இவர்களுக்கு அவமானம் ஏற்படக்கூடாது. மக்கள் மத்தியில் இவர்களுக்கு மரியாதையும் பெருமையும் தோன்றும்படியாக, நாம் நடந்து கொள்ளவேண்டும். நமது புண்ணிய க்ஷேத்திரயாத்திரை, விரத நியமம் ஆகியவற்றால் உண்டாகும் நற்பலன்கள் யாவும் அவர்களையே போய் சேரவேண்டும். இவ்வித எண்ணங்களால் தங்களுக்குள் அன்பு பெருகும்; நிகழ்காலத்தில் குடும்ப சுகமும், எதிர்காலத்தில் எல்லோருக்கும் நல்வாழ்வும் உண்டாகும்.

***வினா:– கணவன்–மனைவியரிடையே எவ்வாறு உறவு இருக்கவேண்டும்?***

***விடை:–*** ''இவள் தன்னைப் பெற்ற தாய்–தந்தையர், சகோதரர் முதலியோரை விட்டுவிட்டு என்னிடம் வந்திருக்கிறாள். இது எவ்வளவு பெரிய தியாகம்!'' என்று கணவன் கருதவேண்டும். ''இவளுக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படக்கூடாது; உடலைப் பேணுவதற்கான உணவு–உடை–உறையுள் ஆகியனவற்றுக்கும் குறைவு ஏற்படக்கூடாது; என்னைக் காட்டிலும் உயர்ந்த சௌக்கியத்தை இவள் பெற வேண்டும்'' என்ற எண்ணத்துடன்கூட அவள் கட்டுப்பாடற்றுப்

போகாமலும், அவளுடைய ஆன்மிக நன்மையை முன்னிட்டும், அவளுடைய கற்பில் ஒரு கண் வைத்திருக்க வேண்டும்.

''என்னுடைய பரம்பரை, குடும்பத்திலுள்ளோரைத் துறந்து இவரிடம் வந்து சேர்ந்திருக்கிறேன். கடலைக் கடந்து வந்து, கரையில் ஒதுங்கியிருக்கும்போது, நான் மூழ்கிச் சாகலாமா? பெரிய தியாகங்களைச் செய்துவிட்டு இங்கே வந்திருக்கிற நான், என் நிமித்தமாக இவருக்குத் துன்பமும் அவமானமும் பழிச்சொல்லும் இழிவும் ஏற்படாதவண்ணம் நடந்துகொள்ள வேண்டும்'' என்பது மனைவியின் நோக்கமாக இருக்க வேண்டும். என் காரணமாக இவருக்கு ஏச்சு முதலியன ஏற்படுமேயானால், அது மிகவும் தவறான நடத்தை ஆகும். எனக்கு எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டாலும், இவருக்குக் கொஞ்சமும் துன்பம் ஏற்படக்கூடாது – இவ்விதமாகத் தனது சுக–சௌகரியங்களைத் துறந்து, கணவரின் இம்மை–மறுமை நல்வாழ்வையே கருத்தில் கொண்டு நடக்க வேண்டும்.

**_வினா:– மாமியார்–மருமகளிடையே உறவு எப்படி இருக்கவேண்டும்?_**

**_விடை:–_** ''இவள் தன்னுடைய தாயை விட்டு விட்டு நம் வீட்டுக்கு வந்திருக்கிறாள். என்னுடைய மகனின் ஓர் அங்கமாக விளங்குகிறாள். தன்னுடைய தாயின் நினைவே இவளுக்குத் தோன்றாத வகையில் நான் பழகவேண்டும்'' என்பது மாமியாரின் எண்ணமாக இருக்கவேண்டும்.

என்னுடைய மங்கல வாழ்வுக்குக் காரணமான என் கணவரைப் பெற்றெடுத்த தாய், இவர். எனக்கு அனைத்துமாய் விளங்குபவர். இந்த மரத்தின் பழுத்த பழம். அதனால் இவரிடம் மரியாதை வைக்க வேண்டும்; பெருமை தரவேண்டும். கஷ்டங்களை நான் அனுபவிப்பேன்; சுகங்களை இவர் அனுபவிக்கட்டும். இவர் என்னிடம் கடுமையாக நடந்தால், அதுவும் என் நலன் பொருட்டே ஆகும். நான் உடல்நலம் குன்றிக் கிடந்தபோது, என் மாமியார் செய்த பணிவிடைகளைப் போல் வேறு யாரும் செய்யமுடியாது என்பதைக் கண்ணால்

கண்டேன். உண்மையில் என் நலனில் நாட்டம் கொண்டு என்னிடம் மாமியார் பழகுகிற மாதிரி, வேறு யாரும் பழகுவதைக் கண்டதில்லை. அது நடக்கக் கூடியதும் அல்ல. 'மருமகள் எங்கள் வீட்டு ராணி' என்று சொல்லித் தன்னுடைய பொறுப்பு முழுவதையும் என்னிடம் தந்துள்ளார். இவ்வளவு பெரிய பொறுப்பை வேறு யார்தான் கொடுக்க முடியும்? பல பிறவிகள் எடுத்து உழைத்தாலும், இக்குடும்பத்தில் எனக்குக் கிடைத்துள்ள நம்பிக்கைக்கு ஈடு செய்யமுடியாது. அதனால், என்னால் இவர்களுக்குச் சிறிதளவு கூடத் துன்பம் உண்டாகக் கூடாது. அவ்விதமே, தனது சொந்த சகோதர—சகோதரிகளைக் காட்டிலும் அதிக மதிப்புடன் பழகவேண்டும். மூத்த மைத்துனரும் அவரது மனைவியும் தாய்—தந்தையரைப் போலும், இளைய மைத்துனரும் அவரது மனைவியும் தனது மகன்—மகளைப் போலும் கருதத்தக்கவர்கள். அதனால், இவர்களுக்குச் சௌக்கியம் உண்டாகும்படி நான் நடந்து கொள்ளவேண்டும் என்பதே குறிக்கோளாக இருக்கவேண்டும். இவர்களுக்குத் தொண்டு புரிவதற்காகவே, நான் இந்த வீட்டுக்கு வந்திருக்கிறேன். ஆகவே, என்னுடைய மிகச் சிறிய செயலானாலும் சரி, இவர்களுடைய நன்மைக்காகவும் சுகத்திற்காகவும் செய்யப்பட வேண்டும். இவர்கள் என்னுடன் எப்படிப் பழகுகிறார்கள் என்பது பற்றிக் கவலையில்லை. ஏனென்றால், இவர்களுடைய மிகக் கசப்பான பழக்க தோரணையில்கூட என்னுடைய நலன் இருக்கவே செய்யும்.

*வினா:— தன் அண்ணியிடம் இளைய மைத்துனர் எவ்வாறு பழக வேண்டும்?*

*விடை:—* அண்ணி, சீதையைப் போலவும், இளைய மைத்துனர், பரதன் போலவும் நடக்க வேண்டும். சீதாதேவி, பரதனைத் தன் மகனைப் போல நடத்தினாள். காரணம் ஏதுமின்றியே இராமனைக் காட்டுக்கு அனுப்பினாள், கைகேயி. ஆனால், சீதாதேவி பரதன் மேல் குற்றம் சுமத்தவில்லை; பரதனை அவமதிக்கவில்லை. மாறாக, சித்ரகூடத்தில் சீதையின்

பாததூளியைச் சிரசில் ஏற்றபோது, பரதனுக்கு ஆசீர்வாதம் செய்தார். இளைய மைத்துனர் எவ்வளவுதான் மரியாதை குறைவாக நடந்து கொண்டாலும், அவமானப்படுத்தினாலும், அண்ணியானவள் தன்னுடைய தாய்மை உணர்ச்சியையும், நலன் நாடும் தன்மையையும் இழக்காமல் இருக்கவேண்டும். தாயிடம் நடந்து கொள்வதைப்போல அண்ணியிடமும் நடப்பது மைத்துனரின் தன்மையாகும். சீதாதேவி வயது முதிர்ந்தவள் இல்லை என்றாலும், பரதன், லட்சுமணன் முதலியோர்க்கு சீதையிடம் தாய் உணர்வு இருந்தது.

***வினா:- ஒரு பெண்ணின் கணவரும், அவளுடைய சகோதரனும் எவ்வாறு பழகவேண்டும்?***

*விடை:-* எனக்கு என் மனைவியிடம் அன்பு தோன்றுவதைப் போல், என்னுடைய மனைவியின் அன்புக்குரிய சகோதரனாக இருப்பதால் மைத்துனனும், என் அன்புக்குரியவன். இவனுடைய வீட்டிலிருந்து அவ்வப்போது ஏதேனும் கிடைத்துக் கொண்டிருக்கிறது. அதனால் உலகாயதமாகப் பார்த்தாலும் வரவுக்கு மேல் வரவுதான்! ஆன்மிக நிலையில் தியாகத்திற்கே சிறப்பு.

இவர், என் சகோதரியின் மதிப்புக்குரிய அம்சமாக விளங்குகிறார். அதனால் என்னாலும் மரியாதை செய்யத் தக்கவர் என்ற எண்ணம் மனைவியின் சகோதரனுக்கு இருக்கவேண்டும். சகோதரிக்கோ, பெண்ணுக்கோ பரிசு கொடுப்பதில் மதிப்பு இருப்பதைப்போல, சகோதரியின் ஓர் அங்கமாக விளங்கும் காரணத்தால், சகோதரியின் கணவனுக்குப் பரிசு அளிப்பதிலும் பெருமை இருக்கிறது. இவர்கள் அன்பையும் தானத்தையும் பெறுவதற்குரியவர்கள். ஆதலால், மனப்பூர்வமான மரியாதையோடு இவர்களுக்கு ஏதேனும் ஒன்றைக் கொடுத்துக் கொண்டே இருக்கவேண்டும்.

***வினா:- சகோதர-சகோதரிகள் தம்மிடையே எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?***

*விடை:–* அநேகமாக சகோதரன் தரப்பில்தான் தவறு ஏற்படுகிறது. சகோதரியின் தரப்பிலிருந்து உண்டாகும் தவறு சிறிதுதான். ''இவள் திருமாங்கல்யம் அணிந்துள்ள நல்லாள்; இரக்கத்தின் திருவுரு. இவளிடம் அதிக மரியாதையும் அன்பும் காட்ட வேண்டும்'' என்ற எண்ணம் சகோதரனுக்கு இருக்க வேண்டும். பிராமணனுக்கு உணவு அளிப்பதில் கிடைப்பதைப் போன்ற புண்ணியம், சகோதரிக்கும் மகளுக்கும் கொடுப்பதில் கிடைக்கிறது.

தந்தையின் சொத்துக்களில் சகோதரிக்கும் பங்கு உண்டு என்று அரசு சட்டம் இயற்றியிருப்பதால், சகோதர–சகோதரிகளிடையே சச்சரவு உண்டாகக் கூடும். மனத்தாங்கல் என்பது மிகவும் சாமானியமான விஷயம். அவள், தனது பங்கைக் கேட்கும்போது, சகோதரி–சகோதரரிடையே அன்பு அற்றுப் போகிறது. சகோதரர்கள் ஒருவருக்கொருவர் சச்சரவிட்டுக் கொள்கிறார்கள் எனில், சகோதர–சகோதரியிடையே சச்சரவு தோன்றுவதைப் பற்றி என்ன சொல்ல? ஆதலால், 'தந்தையின் சொத்தில் பங்கு கேட்பதில்லை' என்ற பழைய வழக்கத்தையே சகோதரிகள் பின்பற்ற வேண்டும். அந்த வழக்கம்தான் அறச்சார்புடையது; தூய்மையானது. பணமும் பொருளும் முக்கியமானவை அல்ல. இவை, ஏதோ வாழ்வியலுக்காக உள்ளவைதான். இந்த உலக நடவடிக்கைகளும் அன்புக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் நல்லனவாக அமையுமே தவிர, பொருளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் அல்ல. நடைமுறையைப் பார்க்கும்போது, செல்வம் முதலிய பொருட்கள் வாக்குவாதத்தைத் தோற்றுவித்து, கடைசியில் நரகத்திற்கு அழைத்துச் சென்று விடுவனவாகவே ஆகிவிட்டன. இதில் மனிதத்தன்மை ஏதுமில்லை. நாய்கள் பரஸ்பரம் அன்போடு விளையாடிக் கொண்டிருக்கும். இந்த விளையாட்டு எதுவரை என்றால் அவைகள் முன்னே ரொட்டித் துண்டு வராத வரையில்தான். எதிரே ரொட்டித் துண்டு காணப்பட்டவுடன், அவைகளுக்குள்ளே சண்டை துவங்கிவிடுகிறது. மனிதர்களும்

இப்படியே நடந்து கொண்டால், அவர்களிடம் மனிதத்தன்மை இருப்பதாக எப்படிக் கூறமுடியும்?

அறம், தன் கடமை, பகவான்–முனிவர்களின் ஆணைகள், தியாகம் ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுப்பதன் மூலம் இவ்வுலக வாழ்க்கையும், அவ்வுலக வாழ்க்கையும் பயனுடையதாக அமையும். ஆனால் கௌரவம், புகழ், சுயநலம் ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் அளிப்பதன் மூலம் மண்ணுலக–விண்ணுலக வாழ்க்கை வீணாகப் போகின்றது.

***வினா:– குடும்பஸ்தன், அதிதியிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?***

***விடை:–*** எவருடைய வருகைக்குத் திதி (நாள்) நிர்ணயிக்கப் படவில்லையோ – என்பதுதான் 'அதிதி' (விருந்தாளி) என்ற சொல்லின் பொருள். குடும்ப வாழ்வில் உள்ளவர்களுக்கு விருந்தோம்பல் முதல் கடமையாகும். வானபிரஸ்தர்களுக்கு இது இரண்டாவது இடத்தை வகிக்கிறது. பிரம்மசாரிக்கும் துறவிக்கும் இந்தத் தொண்டு முக்கியமானது அல்ல.

பிரம்மசரிய ஆசிரமத்தின் நியமங்களைக் கடைப்பிடித்து, அடுத்த நிலைக்குத் தயாராக உள்ள ஸ்நாதகனுக்கு, அதுவரை அவன் பரிபாலித்து வந்த தீட்சை முடிவில் செய்யப்படும் உபதேசம்— ***'மாத்ருதே$_3$வோ ப$_4$வ । பித்ருதே$_3$வோ ப$_4$வ । ஆசார்யதே$_3$வோ ப$_4$வ । அதிதி$_2$தே$_3$வோ ப$_4$வ ।' (தைத்திரீயோபநிஷத்$_3$, ஶிக்ஷாவல்லீ 11/2)***. 'அன்னை, தந்தை, ஆசார்யர், அதிதி ஆகியோரைத் தெய்வமாக நினைத்துத் தொண்டு செய்' – என்பது இதன் பொருள். குடும்ப வாழ்வில் ஈடுபடும் நிலையில் உள்ளோர்க்கு, இது தலையாய சட்டமாகும். ஆகவே, குடும்பஸ்தன் தன் சக்திக்கு ஏற்றபடி, அதிதிகளை வரவேற்று உபசரிக்க வேண்டும்.

விருந்தோம்பல் என்பதில் உட்காருவதற்கு ஆசனம் அளித்தல், உணவு உண்பித்தல், நீர் கொடுப்பது ஆகிய பல விஷயங்கள் அடங்கும் என்றாலும், உணவு அளிப்பதுதான்

முக்கியமானது. சமையல் தயாரானதும், முதலில் முறைப்படி வைசுவதேவ பலி கொடுத்துவிட வேண்டும். உலகத்துக்கே உணவு படைத்தல் என்பதுதான் வைசுவதேவ பலி கொடுப்பதன் பொருள். பின்னர், பகவானுக்கு அமுது படைத்தல் வேண்டும். பின்னர், அதிதிகளோ, சாதுக்களோ வந்தால் அவர்களுக்கு உணவு கொடு. ஆறுவகையான சாதுக்கள் சொல்லப்பட்டிருக்கிறார்கள்—

*ப்$_3$ரஹ்மசாரீ யதிஸ்சைவ வித்$_3$யார்தீ$_2$ கு$_3$ருபோஷக: ।*
*அத்$_4$வக$_3$: க்ஷீணவ்ருத்திஸ்ச ஷடே$_3$தே பி$_4$க்ஷுகா: ஸ்ம்ருதா: ॥*

''பிரம்மசாரி, சந்தியாசி, கல்வி கற்பவன், குருவுக்குத் தொண்டு செய்பவன், வழிப்போக்கன், பொருள் இழந்தவன் (எவனுடைய வீடு தீக்கிரையாகி விட்டதோ, திருடர்கள் மற்றும் கொள்ளைக்காரர்கள் எல்லாச் சாமான்களையும் களவாடிப் போய் விட்டார்களோ, வாழ்க்கை நடத்துவதற்கு எவ்வித ஆதாரமும் இல்லாமற்போய்விட்டதோ, இது போன்றவர்கள்) – இவ்வறுவரும் சாது எனப்படுகிறார்கள்.'' ஆகவே, இவ்வறுவருக்கும் உண்டி அளிக்க வேண்டும்.

வைசுவதேவ பலி கொடுப்பதற்கு முன்னே, அதிதி–சாது வந்துவிட்டால் என்ன செய்வது? சரியான நேரமாக இருந்தால் வைசுவதேவ பலி கொடு. இல்லாவிட்டால், முதலிலே சாதுவுக்கு உணவு கொடுத்துவிடு. பிரம்மசாரியும் சந்நியாசியும் தயாராக உள்ள உணவுப் பொருட்களுக்கு உரிமையாளர்கள். இவர்களுக்கு உண்டி அளிக்காமல், முதலில் சாப்பிடுகிறவர்களைப் பாவம் பற்றிக் கொள்கிறது. சாந்த்ராயண விரதம்† செய்தால் மட்டுமே

---

† 'சாந்த்ராயண விரதம்' பற்றிய விதிமுறைகள்:– அமாவாசையை அடுத்த பிரதமையன்று ஒரு கவளம், திவிதீயையன்று இரு கவளம் – என்று படிப்படியாக ஒவ்வொரு கவளம் வீதம் அதிகரித்து, பௌர்ணமி நாளில் பதினைந்து கவளம் உணவு ஏற்கவேண்டும். பின், பௌர்ணமியை அடுத்து வரும் பிரதமையிலிருந்து ஒவ்வொரு கவளமாகக் குறைத்து, அதாவது பிரதமையில் பதிநான்கு, திவிதீயையில் பதிமூன்று என்றபடி

இந்தப் பாவம் போகும். அதிதி வீட்டுக்குள் வந்து வெறுங்கையுடன் திரும்பிச் சென்றால், அந்த வீட்டின் சொந்தக்காரனின் புண்ணியத்தை எடுத்துக் கொண்டு, தன்னுடைய பாவங்களை விட்டுச் செல்கிறான். ஆதலால், அதிதிக்குக் கட்டாயம் உணவு அளிக்கவேண்டும்.

விருந்தாளியைப் பரமாத்ம ஸ்வரூபமாக எண்ணவேண்டும்; அவரைக் கௌரவிக்க வேண்டும்; அவருக்கு உணவும் நீரும் கொடுக்க வேண்டும் – என்று மனத்தளவில் குடும்பஸ்தன் கருதவேண்டும் என்றாலும், வெளிப்பழக்கத்தில் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். அவரிடம் வீட்டு ரகசியங்களைக் கூறக் கூடாது; வீட்டைச் சுற்றிக் காட்டக் கூடாது. அதாவது, மனமார அவர்களை மதித்தாலும் முற்றிலும் நம்பிக்கை வைத்துவிடக் கூடாது. ஏனெனில், அதிதி என்ற போர்வையில், இந்தக் காலத்தில் யார் வேண்டுமானாலும் வரலாம்.

வினா:– துறவி முதலியோர்க்கு முதலில் உணவு அளிப்பது குடும்பஸ்தனின் கடமை. குடும்பஸ்தன் உணவு கொண்டபின், பிச்சைக்கு செல்ல வேண்டியது துறவியின் தர்மம். இவை இரண்டும் எப்படி ஒத்துப் போகும்?

*விடை:–* சமையல் முடிந்து உணவு தயாரானதும், முதலில் வைசுவதேவ பலி கொடுத்துவிட வேண்டும். பின் அதிதி வந்தால் சக்திக்கேற்றபடி உணவு கொடு. அதிதி வராவிட்டால், ஒரு †பசு பால் கறக்கும் காலம்வரை வாசற்கதவருகே காத்து நின்று, அதிதியை எதிர்பார்த்துக் கொண்டிரு. அப்படியும்

---

உணவு ஏற்கவேண்டும். அதாவது, சந்திரனுடைய கலை வளரும்போது கவள எண்ணிக்கை வளரும்; கலை குறையும்போது கவளமும் குறையும். இது சாந்த்ராயண விரதம். கவள அன்னம் தவிர வேறு எதையும் உட்கொள்ளக் கூடாது.

† பால் கறக்கும்போது, பசுவின் மடிக்காம்பிலிருந்து பாத்திரத்தினுள் பால் விழுவதற்கு உண்டாகும் நேரம். அதாவது, சுமாராக ஐந்து நிமிடம்.

அதிதி வராவிட்டால், அவருக்கான பாகத்தை எடுத்து வைத்துவிட்டு, நீ உணவு கொள்.

துறவி எதையும் சேர்த்து வைத்துக் கொள்வதில்லை. அதனால் அவருக்குப் பசி ஏற்படும் வேளையில், பிச்சைக்காக குடும்பவாசியின் வீட்டுக்கு வருவார். குடும்பத்திலுள்ளவர்கள் சாப்பிட்டுப் பாத்திரங்களைக் கழுவி வைத்த நேரத்தில், அவர் பிச்சைக்காகப் போய் நின்றால் என்ன செய்வது? அதாவது, அப்பொழுது குடும்பஸ்தனுக்குச் சுமை தோன்றக் கூடாது. குடும்பத்தில் ஓரிருவர் சாப்பாட்டுக்கு மட்டுமே சமையல் செய்திருக்கும் போது, ஒரு சாது வந்து சேர்ந்தால், சமையல் பற்றாமல் போய்விடும். வீட்டில் ஆறேழு நபர்களுக்கான உணவு தயாரிக்கப்பட்டிருந்தால், பெரிய வித்தியாசம் தோன்றாது. ஆனால், அங்கேயும் அதிக எண்ணிக்கையில் சாதுக்கள் வந்துவிட்டால், அவர்களுக்கும் கஷ்டம் ஏற்படும். அதனால், குடும்பத்திலுள்ளவர்கள் உணவருந்திய பிறகே, பிச்சை கேட்டு துறவி செல்ல வேண்டும். எது மிச்சமிருக்கிறதோ, அதை ஏற்கவேண்டும். சந்நியாசி கிருகஸ்தனின் வீட்டில் பிச்சைக்காக வெகுநேரம் காத்துக் கொண்டிருக்கக் கூடாது. கிருகஸ்தன் தடுக்காவிட்டால், ஒரு பசு பால் கறக்கும் நேரம் காத்திருக்கலாம். அப்படியும் கொடுக்கும் எண்ணத்தில் குடும்பஸ்தன் இல்லை என்றால், அங்கிருந்து போய்விட வேண்டுமே தவிர, கோபம் கொள்ளக்கூடாது. இவ்விதமே குடும்பவாசியும் கோபம் கொள்ளக்கூடாது.

***வினா:– குடும்பஸ்தன் அண்டை–அயலாருடன் எப்படிப் பழக வேண்டும்?***

***விடை:–*** அண்டை வீட்டுக்காரர்களைத் தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக மதிக்க வேண்டும். இது நம்முடையது, இது பிறருடையது என்ற எண்ணம் இழிந்த இதயமுடையவர் களுக்கே தோன்றும். பெருந்தன்மையான உள்ளம் படைத்தவர்களுக்கு, இந்த மண்ணுலகம் முழுவதுமே

சொந்தக் குடும்பம்.† பகவானிடம் நமக்கு உள்ள உறவுப்படி பார்த்தால், எல்லோரும் நமது சகோதரர்களே. அதனால், குடும்பத்திலுள்ளவர்களிடம் பழகும் விதத்திலேயே அண்டை வீட்டில் உள்ளோரிடமும் பழக வேண்டும். வீட்டுக்கு இனிப்புப் பொருளோ, பழமோ வந்திருக்கிறது. எதிரே நமது பிள்ளைகளும், அடுத்த வீட்டுப் பிள்ளைகளும் இருக்கிறார்கள் என்றால், இனிப்பு முதலியவற்றைப் பங்கிட்டுக் கொடுக்கும்போது, அடுத்த வீட்டுப் பையனுக்கு அதிக அளவிலும் உயர்ந்தவையுமான இனிப்புக்களைக் கொடுக்க வேண்டும். அதற்குப் பிறகு சகோதரியின் பிள்ளைகளுக்கும், மகளின் பிள்ளைகளுக்கும் நிறைய, சுவைமிக்க இனிப்புகளைக் கொடுக்க வேண்டும். பிறகு குடும்பத்துக் குழந்தைகளுக்கும், பெரியப்பா—மாமா போன்றவர்களின் பிள்ளைகள் இருந்தால், அவர்களுக்கும் கொடுக்க வேண்டும். கடைசியில், மிச்சம் மீதி இருந்தால் தன்னுடைய பிள்ளைகளுக்குக் கொடுக்க வேண்டும். ''நம்முடைய பிள்ளைகளுக்குக் குறைவான மட்டமான பொருள் கிடைத்தால் நமக்கு நஷ்டம்தானே?'' என்ற சந்தேகம் சிலருக்குத் தோன்றக்கூடும். இதில் நஷ்டம் ஏதுமில்லை. அண்டை வீடு, சகோதரி, மகள் ஆகியோருடைய பிள்ளைகளிடம் இவ்வாறு நடந்து கொண்டால், அவர்களும் அவ்வாறே செய்வார்களாதலால், கணக்குப் பார்க்கும்போது எல்லாம் சரியாக இருக்கும்! இப்படி நடந்து கொள்வதால், நம்மிடையே அன்பு பெருகும் என்பதைக் கவனிக்க வேண்டும். அன்புக்கு உள்ள விலை, வேறு எந்தப் பொருளுக்கும் இல்லை!

பக்கத்து வீட்டுக்காரரின் பசு—எருமை, நமது வீட்டுக்குள் வந்துவிட்டால், அண்டை வீட்டுக்காரருடன் சண்டை

---

† ***அயம் நிஜ: பரோ வேதி க$_3$ணநா லகு$_4$சேதஸாம் ।***
***உதா$_3$ரசரிதாநாம் து வஸுதை$_4$வ குடும்ப$_3$கம் ॥***
***(பஞ்சதந்த்ர, அபரீக்ஷித. 37)***

போடக்கூடாது. அந்த வாயில்லாப் பிராணியை அடிக்கவும் கூடாது. மாறாக, ''அண்ணே! உங்க வீட்டு ஆடு–மாடு எங்க வீட்டுக்குள்ளே வந்திடிச்சு. இனிமே இப்படி நேராதபடி பார்த்துக்குங்க'' என்று அன்பு சொட்டக் கூறவேண்டும். நாம் இவ்விதம் பணிவோடு கூறினால், நமது வீட்டுக் கால்நடை அவர் வீட்டுக்குள் புக நேர்ந்தால், அவரும் இவ்வாறே கூறுவார். பக்கத்து வீட்டுக்காரர் கடுமையாக நடந்து கொண்டாலும், நாம் அவரிடம் கோபம் கொள்ளாமல், இனியாவது நமது வீட்டு பசு–எருமைகள் அவர் வீட்டுக்குள் சென்று துன்புறுத்தாதவண்ணம் கவனமாக இருக்கவேண்டும்.

நமது வீட்டு சுபநிகழ்ச்சி, திருமணம் முதலிய சடங்குகளின்போது தயாரிக்கப்பட்ட விதவிதமான அறுசுவைப் பண்டங்களைப் பக்கத்து வீட்டுச் சிறுவர்களுக்கும் கொடுக்க வேண்டும். அண்டை வீட்டுக்காரர் என்ற காரணத்தால், அவரும் நமது குடும்பத்தைச் சேர்ந்தவரே. இதைக் காட்டிலும் அதிக அன்போடு பழக வேண்டும் என்றால், நமது சகோதரி–பெண்ணின் திருமணத்தின்போது நாம் பரிசுகள் கொடுப்பதைப் போல, பக்கத்து வீட்டுக்காரரின் சகோதரி–பெண்ணின் திருமணத்தின் போது பரிசுகள் வழங்கலாம். நம் வீட்டு மாப்பிள்ளையிடம் நடந்து கொள்வதைப் போலவே, அண்டை வீட்டுக்காரரின் மருமகனிடமும் நடந்துகொள்ள வேண்டும்.

***வினா:– வேலைக்காரரிடம் எவ்வாறு பழகவேண்டும்?***

***விடை:–*** தன்னுடைய பிள்ளையிடம் பழகுவதைப்போல வேலைக்காரரிடம் பழகவேண்டும். வேலைக்காரர்கள் இரண்டு விதமாக அமர்த்தப்படுகிறார்கள். (1) சம்பளமும், உணவும் கொடுத்து வைத்துக்கொள்ளப்படுபவர்கள். (2) வேலைக்காரருக்கு சம்பளம் மட்டும் கொடுப்பார்கள். உணவு, அவர் தன் வீட்டில் சாப்பிடுவார். சம்பளம் பெற்றுக்கொண்டு உணவும் சாப்பிடும் வேலைக்காரருக்கு உணவு விஷயத்தில் பாகுபாடு காட்டலாகாது. அநேகமாக, வேலைக்காரர்களுக்கு என மூன்றாம் தரமான சமையலும், வீட்டிலுள்ள மற்றவர்களுக்கு இரண்டாம்

தரமான சமையலும், தன்னுடைய கணவன்–குழந்தைகளுக்கு என முதல் தரமான சமையலும் வீட்டில் செய்யப்படுகிறது. இப்படி மூன்று பிரிவான சமையல் செய்யப்படாமல், ஒரே மாதிரியான உணவு செய்யப்பட வேண்டும். நடுத்தரமான உணவு தயாரித்து அனைவருக்கும் கொடுக்கவேண்டும். அந்த நேரத்தில் யாரேனும் பிச்சைக்காரர் வந்தால், அவருக்கும் கொடுக்கவேண்டும்.

உணவு இல்லாமல் சம்பளம் மட்டும் பெற்றுக்கொள்ளும் வேலைக்காரர், தன் சௌகரியப்படி உணவு தயாரித்துச் சாப்பிடலாம். ஆனால், நமது வீட்டில் சிறப்பான, இனிய பண்டங்கள் செய்தால், வேலைக்காரரின் குழந்தைகளுக்கும் கொடுக்க வேண்டும். திருமணம் போன்ற நிகழ்ச்சியின்போது, அவர்களுக்கும் துணிமணி எடுத்துக் கொடுக்கவேண்டும். அவருக்குத் தகுந்த சம்பளம் கொடுப்பதோடு, அவ்வப்போது வெகுமதிகள், துணிமணி, இனிப்புப் பண்டம் முதலியனவும் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். வெகுமதிகள் ஏற்படுத்தும் விளைவுகளைச் சம்பளத்தொகை உயர்வு விளைவிக்காது. வேலைக்காரருக்கு வெகுமதி முதலியன கொடுப்பதால் கொடுப்பவரின் உள்ளம் விசாலமடைகிறது. அவர்களுக்குள் அன்பு பெருகுகிறது. அதனால் அவசியம் ஏற்படும்போது, திருடுபவர் போன்றவர்களிடமிருந்து அவர் நம்மைக் காப்பாற்றவும் செய்வார்; திருமணம் போன்ற நிகழ்ச்சிகளின்போது ஆர்வத்துடன் வேலை செய்வார்.

***வினா:– வீட்டிலுள்ள எலி, பல்லி, கொசு, மூட்டைப்பூச்சி ஆகிய உயிர்களிடம் எவ்வாறு நடக்கவேண்டும்?***

*விடை:–* வீட்டில் வாழும் எலி முதலியவைகளையும் நம் வீட்டின் அங்கமாக மதிக்க வேண்டும். ஏனென்றால், அவைகள் நம் வீட்டுக்குள்ளேயே வசிப்பிடம் அமைத்துக் கொண்டு இருந்து வருகின்றன. ஆகவே, நம் வீட்டில் இருப்பதற்கு அவைகளுக்கும் உரிமை உண்டு. அதாவது, முடிந்தவரையில் தன் குடும்பத்தினரைக் காப்பாற்றிக் கொண்டு, அவைகளையும்

பேணிப் பராமரிக்க வேண்டும். ஆனால், இப்போதெல்லாம் மக்கள் அவைகளை ஒழித்துக் கட்டுகிறார்கள். இது சரியல்ல. தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமை மட்டுமே மனிதனுக்கு உண்டு; பிறவற்றைக் கொல்வதற்கான உரிமை கிடையாது. பூமியின்மேல் தனக்கென்று ஓர் இல்லம் அமைத்துக் கொண்டு மனிதன் வாழ்வதைப்போல, எலி முதலியவைகளும் தமக்கென ஒரு வசிப்பிடம் கண்டு வாழ்கின்றன. ஆகவே, அவைகளை அழிக்கக் கூடாது. வீட்டில் பாம்பு, தேள் முதலிய விஷ ஜந்துக்கள் தென்பட்டால், தந்திரமாகப் பிடித்து, வீட்டுக்குத் தொலைவில், பாதுகாப்பான இடத்தில் விட்டுவிட வேண்டும்.

தூய்மை இன்மையாலும், குப்பை சேர்வதாலும்தான் கொசு, மூட்டைப்பூச்சி முதலியன உற்பத்தியாகின்றன. ஆதலால், வீட்டில் மாசுபடியாமல், பளிச்சென்று வைத்துக் கொண்டால், இவை தோன்றவே மாட்டா. தூய்மையாக வைத்துக் கொண்டிருக்கும்போதும், அவை உற்பத்தியானால் கூட, அவைகளை ஒழித்து மாய்ப்பதற்கு நமக்கு உரிமை இல்லை.

***வினா:– வீட்டில் நாய் வளர்க்கலாமா, கூடாதா?***

***விடை:–*** வீட்டில் நாய் வைத்துக்கொள்ளக் கூடாது. நாயை வளர்ப்பவன் நரகத்திற்குப் போய்ச் சேர்கிறான். பஞ்ச பாண்டவர்களும், திரௌபதியும் உலகத்தைத் துறந்து, வடக்கு நோக்கிச் சென்று கொண்டு இருக்கும்போது, இடையிடையே பீமசேனன் முதலிய எல்லோரும் கீழே விழுந்துவிட்டார்கள். கடைசியில் யுதிஷ்டிரரும் மிகவும் சோர்ந்த வேளையில், இந்திரனுடைய உத்திரவுப்படி ரதத்தை எடுத்துக்கொண்டு அங்கே வந்த மாதலி, யுதிஷ்டிரரிடம் சொன்னான்— "தாங்கள், இந்த உடல் தாங்கியே ஸ்வர்க்கத்திற்கு எழுந்தருள்க." தர்மர், தன்னருகில் நாய் ஒன்று நிற்பதைக் கண்டார். அவர் சொன்னார்— "இந்த நாய் என்னை அண்டி வந்திருக்கிறது. அதனால், இதுவும் என்னுடன்கூட ஸ்வர்க்கம் செல்ல வேண்டும்." இந்திரன், தர்மபுத்திரரிடம் கூறினான்—

**ஸ்வர்கே$_3$ லோகே ப்₃வவதாம் நாஸ்தி தி$_4$ஷ்ண்யம்**
**இஷ்டாபூர்தம் க்ரோத$_4$வப்₃ா ஹரந்தி ।**
**ததோ விசார்ய க்ரியதாம் த$_4$ர்மராஜ**
**த்யஜ ப்₃வாநம் நாத்ர ந்ருப்₃ம்ஸமஸ்தி ॥**
***(மஹாப$_4$ாரதம், மஹாப்ரஸ்தாநம் 3/10)***

"தர்மராஜனே! நாயை வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு சுவர்க்கலோகத்தில் இடமில்லை. வேள்வி செய்வதன் மூலமும், கிணறு–குளம் தோண்டுவதன் மூலமும் அவர்களுக்குக் கிடைக்கும் புண்ணியப்பேற்றை 'கிரோதவச' என்னும் பெயருடைய ராட்சஸர்கள் அபகரித்துச் செல்கிறார்கள். எனவே, நன்றாகச் சிந்தித்துச் செயல்படு. இந்த நாயை விட்டுவிடு. ஈவு இரக்கமற்ற காரியமாக இது கருதப்பட மாட்டாது."

யுதிஷ்டிரர் சொன்னார்— "நான் இதைப் போஷித்து வளர்க்கவில்லை. இதுவாக என்னை அடைக்கலம் புகுந்திருக்கிறது. என்னுடைய புண்ணியத்தில் பாதிப்பங்கை இதற்கு அளிக்கிறேன். இதன் பயனாய், இதுவும் என்னுடன் வரட்டும்." யுதிஷ்டிரர் இப்படிக் கூறி முடித்தவுடன், அந்த நாயிடமிருந்து தர்மராஜர் வெளிப்பட்டுக் கூறினார்— "நான் உன்னைச் சோதிக்கவே இப்படிச் செய்தேன். நீ என்னை வென்றுவிட்டாய். சுவர்க்கத்திற்கு வா!"

கிருஹஸ்தன் வீட்டில் நாய் வைத்துக் கொள்ளக்கூடாது என்பதுதான் இதன் தாத்பரியம். மகாபாரதத்தில் இப்படி வருகிறது—

**பி$_4$ந்நப$_4$ாண்ட$_3$ம் ச க$_2$ட்வாம் ச குக்குடம் ப்₃ுநகம் தத$_2$ா ।**
**அப்ரப்₃ஸ்தாநி ஸர்வாணி யப்₃ச வ்ருக்ஷா க்$_3$ருஹேருஹ: ॥**
**பி$_4$ந்நப$_4$ாண்டே$_3$ கலிம் ப்ராஹு: க$_2$ட்வாயாம் து த$_4$நக்ஷய: ।**
**குக்குடே ப்₃ுநகே சைவ ஹவிர்நாப்₃நந்தி தே$_3$வதா: ।**
**வ்ருக்ஷமூலே த்$_4$ருவம் ஸத்த்வம் தஸ்மாத்$_3$ வ்ருக்ஷம் ந ரோபயேத் ॥**
***(மஹாப$_4$ாரதம், அனுப்₃ாஸந பர்வம் 127/15,16)***

"உடைந்த பாத்திரம், உடைந்த கட்டில், சேவல், நாய், அரசமரம் போன்ற மரங்கள் வீட்டிலிருப்பது நற்குறியாகக் கருதப்படவில்லை. உடைந்த பாத்திரத்தில் கலி குடி

கொள்வதாகக் கூறப்பட்டுள்ளது. உடைந்த கட்டில் இருப்பதால் தனநாசம் ஏற்படும். சேவலும் நாயும் வளர்கிற வீட்டில் அளிக்கப்படும் அவியுணவை தேவதைகள் ஏற்பதில்லை. வீட்டை ஒட்டினாற்போல் பெரிய மரம் இருந்தால், அதன் வேர்களிடையே பாம்பு, தேள் முதலியன இருப்பதைத் தடுக்க முடியாது. ஆதலால், வீட்டுக்குள்ளே மரம் வளர்க்கக் கூடாது.

நாய் மிகவும் அசுத்தமான, புனிதமற்ற பிராணி. அது உண்டு–குடிப்பதிலிருந்து, தொடுவதிலிருந்து, ஆங்காங்கே உட்காருவதிலிருந்து குடும்பஸ்தனின் உணவு–பானங்களில், அங்கிங்கே நடந்து போவதில் தூய்மைக் குறைவும், புனிதக் குறைவும் ஏற்படுகிறது. புனிதமின்மையிலிருந்து விளைவதும் புனிதமின்மையாகவே (நரகம் முதலியனவாக) இருக்கும்.

***வினா:– வயல் முதலியவற்றின் காவலுக்காக நாய் வைத்துக் கொண்டிருப்பதில் என்ன தவறு?***

***விடை:–*** வயல்வெளியின் காவலுக்காக மட்டுமே நாய் வைத்துக் கொள். அவ்வப்போது அதற்கு ரொட்டி கொடு. ஆனால், உன்னிடமிருந்து தொலைவிலேயே வைத்துக்கொள். அதைத் தன்னுடனே வைத்துக் கொள்ளுதல், அதை எடுத்துக் கொண்டு ஊர் சுற்றுதல், தீண்டல்–தீண்டாமை நோக்கின்றி பண்புக்குறைவாக நடத்தல் – ஆகியவை தடுக்கப்பட்டுள்ளன. நாய்க்கு உணவூட்டுவதோ, அதைப் பாதுகாப்பதோ குற்றம் இல்லை. உயிர்ப் பிராணிகளுக்கு உணவு அளிப்பது என்பது குடும்பஸ்தனின் முக்கியமான கடமையாகும் அல்லவா? ஆனால், நாயைக் கட்டியணைத்துக் கொள்வது, தன்னருகிலேயே அதை வைத்துக் கொள்வது, அதனிடம் ஆழ்ந்த பற்று வைப்பது ஆகியவையே வீழ்ச்சிக்குக் காரணம். ஏனென்றால், கடைசிக் காலத்தில் நாயின் நினைவு வருமேயானால், வருகின்ற பிறவியில் நாயாகப் பிறக்க நேரிடும்.†

---

† ***யம் யம் வாபி ஸ்மரந்ப$_4$ாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।***
***தம் தமேவைதி கௌந்தேய ஸதா$_3$ தத்$_3$ப$_4$ாவப$_4$ாவித: ॥***
***(கீ$_3$தா 8/6)***

***வினா:– வீட்டுக் கூரையின் மேலோ, சுவரிலோ அரச மரம் முளைவிட்டால், அதைப் பிடுங்கி எறியலாமா, கூடாதா?***

*விடை:–* அதை வேருடன் கெல்லி எடுத்து நாற்சந்தியிலோ, கோவிலுக்கு முன்பாகவோ அல்லது தெருவில் ஒரு நல்ல இடத்திலோ ஊன்றவேண்டும். அதற்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். கூரை அல்லது சுவரைச் சற்று இடிக்க நேர்ந்தாலும் சரி, பரவாயில்லை. பின்னால் அதைச் செப்பனிட்டுக் கொள்ளலாம். ஆனால் முடிந்தவரையில் அரசங்கன்றை வெட்டிப் போடுவது கூடாது. மனிதனைப் புனிதமாக்கும் அரசு, ஆல், நாட்டு அத்தி, காட்டு அத்தி, நெல்லி, துளசி முதலிய புனித மரங்களை, நாம் வணங்கிப் போற்ற வேண்டும்.

***வினா:– குடும்பத் தலைவர் வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய செல்வத்தை எவ்வாறு சேர்க்க வேண்டும்?***

*விடை:–* பிறருடைய செல்வத்தில் உரிமை கொள்ளாமல், உடலுழைப்பின் மூலம் பணம் சேர்க்க வேண்டும். எவ்வளவு வருமானம் கிடைக்கிறதோ, அதில் பத்தில் பதினைந்தில் அல்லது இருபதில் ஒரு பங்கை தான–தர்மத்திற்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும். பணம் சம்பாதிப்பதில் சிறிதளவேனும் முறைகேடு நேராமலிருக்காது. ஆகவே, அந்த முறைகேட்டுக்குப் பரிகாரம் செய்வதற்காக ஒதுக்கி வைக்கவேண்டும்.

***வினா:– நேர்மையான வழியில் நாம் பணம் சேர்க்க முடியாதபடி இன்றைய அரசு சட்டம் இயற்றியுள்ளதே, அதற்கு என்ன செய்வது?***

---

''குந்தியின் மைந்தனே! அர்ஜுனா! இந்த மனிதன் கடைசி காலத்தில் (மரணத்தறுவாயில்) எந்தெந்த ஸ்வரூபத்தைச் சிந்தித்தவண்ணமாய் சரீரத்தைத் துறக்கிறானோ, அந்தந்த ஸ்வரூபத்தையே அடைகிறான். ஏனெனில், அவன் எப்பொழுதும் அதே சிந்தனையில் இருந்திருக்கிறான்.''

*விடை:–* அரசு சட்டத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ள வழி இருக்கிறது. தன் சொந்தச் செலவுகளைக் குறைத்தல்; மிக ருசியான ஆகாரம், நவீனப் பொருட்கள், வெளி அலங்காரம் ஆகியவற்றிற்காகச் செலவு செய்யாதிருத்தல்; நடுத்தரமான வாழ்வு நடத்துதல்; மிக எளிமையாக, அமைதியாக வாழ்க்கையைக் கழித்தல் ஆகியவையாகும். பணம் சேர்ப்பது என்பது கையால் எட்டிப் பிடித்து விடக்கூடிய விஷயமல்ல. எவ்வளவு பணம் கிடைக்க வேண்டுமோ, அவ்வளவுதான் கிடைக்கும். ஆனால், செலவைக் குறைப்பது நம் கையில் உள்ளது. இவ்விஷயத்தில் நாம் நம் இச்சைப்படி நடக்க முடியும்.

***வினா:–* நாம் வரி முழுவதையும் கொடுத்தால் பணம் போய்விடுகிறது. வரி முழுவதையும் செலுத்தாமல், மறைத்து விடுவதனால் பணம் தங்குகிறது என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அதனால் மறைத்து வைப்பதுதான் நல்லது என்றாகிறதல்லவா?**

*விடை:–* வரி செலுத்தாததால் பணம் மிச்சப்படுவதுபோல் ஒரு சமயம் தோன்றும்.† மிச்சப்பட்ட பணத்தை வெளிப்படையாகச் செலவழிக்கவும் முடியாது. ஆனால், பணத்திற்காக பொய், வஞ்சனை, ஏமாற்று, அநீதி முதலியன செய்திருக்கிறோமே, அவற்றுக்கான தண்டனையை அனுபவிக்க நேரிடும். நேர்மையற்ற முறையில் சேர்க்கப்பட்ட பணத்தை விட்டுவிட்டு இறக்கவும் நேரும். அதாவது குறுக்கு வழியில் சம்பாதிக்கப்பட்ட பணம் மருத்துவர்கள், வழக்குரைஞர்களுக்குப் போய் சேரலாம்; திருடர்களால்

---

† ***அந்யாயோபார்ஜிதம் த்$_3$ரவ்யம் த$_3$ஶவர்ஷாணி திஷ்ட$_2$தி ।***
***ப்ராப்தே சைகாத$_3$ஶே வர்ஷே ஸமூலம் தத்$_3$விநஶ்யதி ॥***

"நீதியற்ற முறையில் சம்பாதிக்கப்பட்ட பணம் பத்து ஆண்டுகள் வரை இருக்கும். பதினோராவது ஆண்டு வந்தவுடன், அடிவேருடன் அது அழிந்து போகிறது."

கொள்ளையிடப்படலாம்; வங்கியில் தூங்கிக் கொண்டு இருக்கலாம். ஆனால், நம்முடைய காரியத்திற்கு உபயோகப்படாது. நம்முடைய காரியத்திற்கு உதவாத பணத்திற்காகப் பாவத்தையும் முறைகேட்டையும் ஏன் செய்யவேண்டும்?

நேர்மையாகச் சேர்த்தால் பணம் குறைவாகத்தான் கிடைக்கும் என்பது சரியல்ல. நமக்குச் சேரவேண்டிய பணம் வந்தே தீரும். ஆம், அது எப்படி வரும்? அது தெரியாது. ஆனால், வரவேண்டிய பணம் கட்டாயம் வரும். செல்வத்தைத் துறந்தவர்கள், பணத்தைத் தொடாதவர்கள் – இப்படிப்பட்டவர் களுக்குக்கூட பணம் சேருவதைப் பல சான்றுகளால் அறிகிறோம். பொருள் இழப்பு, நோய், துன்பம் முதலியன நமது முயற்சியில்லாமலே ஏற்படுவதைப்போல, கிடைக்க வேண்டிய செல்வம், சுகம் முதலியவைகளும் நமது முயற்சியின்றியே வந்து சேரும்.

*ஸுக$_2$மைந்த்$_3$ரியகம் ராஜந் ஸ்வர்கே$_3$ நரக ஏவ ச ।*
*தே$_3$ஹிநாம் யத்$_3$ யத$_2$ா து$_3$:க$_2$ம் தஸ்மாந்நேச்சே$_2$த தத்$_3$ பு$_3$த$_4$: ॥*
*(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 11/8/1)*

''மன்னா! புலன்கள் வழியாக அடையப்படும் இன்பங்கள் சுவர்க்கத்தில் கிடைப்பதைப் போல நரகத்திலும் கிடைக்கின்றன. சரீரம் எடுத்தவர்களுக்கு, அவர்கள் முயற்சியின்றியே துக்கம் வருவதைப் போலவே இன்பமும் வருகிறது. அதனால் தெள்ளறிவுடையவர்கள் அவைகளுக்கு (புலன் வழி பெறப்படும் அனுபவங்களுக்கு) விருப்பம் கொள்ளக் கூடாது.''





## 3. சிறுவரைப் பற்றிய கருத்துக்கள்

*வினா:– லட்சிய சந்ததியை எவ்வாறு உற்பத்தி செய்வது?*

*விடை:–* தாய்–தந்தையரின் நடவடிக்கைகள், எண்ணங்கள் சீரியனவாக இருந்து, பிள்ளைப்பேறு பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே, தன்னுடைய இன்பத்திற்காக அல்ல என்ற நிலையில்தான் உயர்வான மகப்பேறு உண்டாகக் கூடும். ஏனென்றால், புலன்வழி இன்பநுகர்ச்சியில் ஆசையினால் தோற்றுவிக்கப்படும் குழந்தைகள், அநேகமாக தரக்குறைவானவர்களாகவே இருக்கிறார்கள். குந்திதேவியின் செயல்பாடுகளும் சிந்தனைகளும் மேன்மையானவைகளாக இருந்ததால்தான், தர்மராஜா அவரிடம் மகனாகப் பிறந்தார்.

சூலுற்ற பெண்கள், தமக்குப் பிறக்கப் போகும் குழந்தையின் சிறப்பையும் நலனையும் மனதிற்கொண்டு, பகவானுடைய, இறையடியார்களுடைய கதை–வரலாறுகளைக் கேட்க வேண்டும். அவர்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட சித்திரங்களையே பார்க்க வேண்டும். இவ்விதமாக, தாயினிடம் நல்லோர் இணக்கத்தின் தாக்கம் ஏற்படுவதால், உயர்வான சந்ததி தோன்றும். பிரகலாதனின் தாயார் கருவுற்றிருந்தபோது, கருவிலிருந்த குழந்தையின் பொருட்டே, பகவானுடைய கதைகளை நாரத முனிவர் சொன்னார்; உபதேசம் செய்தார். அதனால், அரக்கர் பரம்பரையில் தோன்றியபோதிலும் பிரகலாதன் உயர்ந்து விளங்கினார்.

ஸத்கர்மம் (நற்செயல்), நற்சிந்தனை, நற்பேச்சு, நல்லுறவு என்று நால்வகை உள்ளன. நல்ல செயல்களைச் செய்வது ‘ஸத்கர்மா’ எனப்படும். மற்றவர்களுடைய நலனைப் பற்றியும், பகவானைப் பற்றியும் சிந்தித்திருப்பது ‘ஸச்சிந்தனம்’ (நற்சிந்தனை) ஆகும். பகவான் மற்றும் அவரது அடியார்களின் வரலாறுகளைப் பற்றித் தமக்குள் விரிவாகப் பேசுவதும் கேட்பதும் ‘ஸச்சர்ச்சா’ (நற்பேச்சு) எனப்படுகிறது. ‘நான்,

பகவானைச் சேர்ந்தவன்; பகவான் என்னுடையவர்' – என்று பகவானுடன் உறுதியாகப் பிணைந்து நிற்பது 'ஸத்ஸங்கம்' (நல்லுறவு) எனப்படும். இந்நான்கின் மூலமாகவும் சந்ததிகளை லட்சிய புருஷர்களாக, உயர்ந்தோராக ஆக்க முடியும்.

மேம்பாட்டுக்காகச் செப்பனிடுவதும், உயர்வடைவதும், மேல் தரத்தை எட்டுவதும் சுதந்திர உரிமை. ஆதலால், சாது–மகாத்மாக்களுடன் மனிதன் கூடிப் பழகவேண்டும். சாது–மகாத்மாக்கள் கிடைக்காவிட்டால், ஆன்மிகப் பயிற்சியில் ஆழ்ந்திருக்கும் சாதகர்களுடன் சேரவேண்டும். இப்படிப்பட்ட சாதகர்களும் கிடைக்காவிட்டால் கீதை, இராமாயணம் போன்ற நன்னூல்களைப் படிக்கலாம்; படிக்கச் செய்யலாம்; மனனம் பண்ணலாம்; தன் ஆன்மிக மேம்பாட்டுக்கான வழிகளைப் பின்பற்றலாம். இதனால், அவன் உயர்மனிதனாக ஆகமுடியும்.

*வினா:–* ***தாய்–தந்தையரின் நடவடிக்கைகள், எண்ண உணர்வுகள் முதலியன மிக உயர்ந்தவையாக இருந்தும், அவர்களுடைய வழித்தோன்றல்கள் நல்லவர்களாக இல்லை. இதற்கு என்ன காரணம்?***

*விடை:–* இதற்கு முக்கிய காரணம் சேர்க்கை குற்றம். அதாவது, சிறுவர்களுக்கு நல்ல சேர்க்கை கிடைக்காததுதான். போன ஜன்மத்தில் பெற்றோர்கள் பட்டிருக்கும் கடனைத் திரும்பச் செலுத்துவதற்காக, இத்தகைய குழந்தைகள் பிறக்கிறார்கள். கெட்டவர்கள் சேர்க்கையால் கெட்டுப் போகிறவன், மேன்மக்கள் உறவால் சீரடைய முடியும். ஆனால், சென்ற பிறவியில் ஏற்பட்ட கடனைக் கழிப்பதற்காக வந்திருப்பவன், துயரத்தையே கொடுத்துக் கொண்டிருப்பான். ஆதலால், நம்முடைய செயல்கள், உணர்வுகள் நல்லவையாக இருந்தும் இப்படிப்பட்ட சந்ததி தோன்றுமேயானால், 'பழைய கடனைத் திருப்பிச் செலுத்துதல்' என்று எண்ணி, 'நமது கடன் குறைந்து கொண்டிருக்கிறது' என்பதால் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும்.

விச்ரவஸ் அந்தண குலத்தினர். அவருடைய மனைவி கைகஸி அரக்க குலத்தினள். அதனால், இராவணன் தோன்றினான். உக்ரசேனர் அறவழி நடப்பவர். ஒரு நாள் அரக்கன் ஒருவன் உக்ரசேனரின் உருவம் தாங்கி, அவருடைய பத்தினியோடு கூடினான். அதன் காரணமாக, கம்சன் பிறந்தான்.

***வினா:– தாய்–தந்தையரின் நடத்தை சரியில்லை. ஆனால், அவர்களுடைய சந்ததிகள் நல்லவர்களாக இருக்கிறார்கள். இதற்கு என்ன காரணம்?***

*விடை:–* பொதுவாக, தாய்–தந்தையரின் இயல்புகள்தான் குழந்தைகளுக்கும் இருக்குமானால், பழைய கடன் கழிப்பு அல்லது கர்ப்பாதானத்தின் போது ஒரு நல்ல ஸம்ஸ்காரம் ஏற்படுவது அல்லது கருவுற்றிருந்த நாட்களின்போது ஒரு மகானுடைய வரவு – இவை காரணமாக நன்மகவு தோன்றுகிறது. இப்படித்தான் இரண்யகசிபுவின் வீட்டில் பிரகலாதர் பிறந்தார். பிரகலாதனின் பிறப்பு பற்றி ஒரு செய்தி என்னவென்றால், இரண்யகசிபுவின் தவத்திற்கு இடையூறு ஏற்பட்டபோது, மனைவியோடு கூடி மகிழ வீட்டிற்கு வந்து கூடியிருக்கும் காலத்தில் பேச்சினிடையே பல தடவை 'விஷ்ணு'வின் பெயரைச் சொன்னான். அவனுடைய மனைவி கயாது கருவுற்றிருந்தபோது, கருவிலிருந்த குழந்தையை முன்னிட்டுப் பக்தியின் பெருமையை நாரதர் விளக்கமாகக் கூறினார். இக்காரணங்களால், பிரகலாதனின் உள்ளத்தில் பக்தி உணர்வு படிந்தது. தண்ணீரின் சுவை இனிமையானதுதான் என்றாலும் மண்ணின் தொடர்பினால் சுவை மாறுபடுகிறது. வெவ்வேறாகப் போகிறது. (ஒவ்வொரு கிணற்றின் நீரும் தனித்தனி சுவை பெறுகிறது.) இவ்வித சேர்க்கை காரணமாக, மனிதனின் இயல்புகள் மாறிப் போகின்றன.

***வினா:– தந்தையின் ஆத்மாவே, மகன் உருவத்தில் வருகிறது. இதன் கருத்து என்ன?***

*விடை:–* ஒருவன் ஓர் அந்தணனைத் தன் குலகுருவாக மதிக்கிறான். இன்னொருவன், முப்புரி அளிப்பவனை ஆசார்யராக எண்ணுகிறான். அவர்கள் உடலைத் துறந்தபின், அவர்களுடைய பிள்ளையை ஆசார்யராக மதித்து, அவரைப் போலவே பிள்ளைக்கும் உபசார–மரியாதை செய்யப்படுகிறது.† செல்வத்திற்குச் சொந்தக்காரனான தந்தை இறந்ததும், அந்தச் செல்வத்திற்கு மகனே உரிமையாளனாகிறான். இவ்விதமே, மகன், தன் தந்தையின் பிரதிநிதியாகத் தோன்றுகிறான்; தந்தையின் இடத்திலிருந்து செயலாற்றுகிறான்.

இந்த இடத்தில், 'ஆத்மா' என்ற சொல் 'கௌணாத்மா'வைக் குறிக்கிறது. அதாவது, 'ஆத்மா' என்ற சொல், உடலைச் சுட்டுகிறது. உடலிலிருந்து உடல் (மகன்) தோன்றுகிறது. அதனால், உலகாயத நோக்கில், மகன், தந்தையின் பிரதிநிதி ஆகிறான். ஆனால், ஆன்மிக மேம்பாட்டுக்கு மகன் காரணம் அல்ல.

***வினா:–* குழந்தைகள் மேன்மக்களாவதற்கு ஏற்ற கல்வியை எவ்வாறு புகட்டுவது?**

*விடை:–* பொதுவாக, கண்ணால் பார்த்தே சிறுவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். அதனால், அவர்கள் எதிரில், பெற்றோர்கள் நல்ல முறையில் நடந்து கொள்ளவேண்டும். தம் வாழ்க்கையைக் கட்டுப்பாட்டுடனும் புனிதமாகவும் வைத்துக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதால், சிறுவர்கள்

---

† அசுவத்தாமாவை ஒரே கட்டாகக் கட்டி, திரௌபதியின் முன்னே கொண்டு வந்து நிறுத்தினான், அர்ஜுனன். திரௌபதி, அசுவத்தாமாவை விட்டுவிடும்படி வற்புறுத்தி அர்ஜுனனிடம், ''எவருடைய அருளினால் தாங்கள் எல்லா சஸ்திர–அஸ்திர ஞானம் பெற்றீர்களோ, அந்த துரோணரே மகன் உருவத்தில் தங்கள் எதிரே நிற்கிறார்'' என்று கூறுகிறாள்.

**'ஸ ஏஷ ப$_4$க$_3$வாந் த்$_3$ரோண: ப்ரஜாரூபேண வர்ததே ।'**

**(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் *1/7/45*)**

நல்ல விஷயங்களைக் கற்றுக் கொண்டு உயர்நிலையை அடைவார்கள்.

குழந்தைகளின் முன்னேற்றத்திற்காக, முதலாவதாக, தாய்–தந்தையர் தமது நடத்தையை ஒழுக்கமுடன் வைத்திருக்க வேண்டும். இரண்டாவதாக, அவர்களுக்கு நல்ல விஷயங்களையே கூறவேண்டும். உயர்தரமான கல்வி அளிக்க வேண்டும். அடியார்களுடைய, பகவானுடைய சரித்திரங்களைச் சொல்ல வேண்டும். உலக நடவடிக்கைகளிலும் ஆன்ம தத்துவ ஞானத்தை உணர்த்தக்கூடிய கல்வியே, சிறுவர்களுக்குச் சிறந்த படிப்பாகும். இது பற்றி இன்னும் கொஞ்சம் பார்ப்போம்.

பெற்றோர்கள் வெளியே போக விரும்பினால், ''நீ இங்கேயே இரு'' என்று பிள்ளைகளிடம் கூறுகிறார்கள். இப்படிச் சொன்னால் பிள்ளைகள் கேட்பதில்லை. பிடிவாதம் செய்கிறார்கள். அதனால், பெற்றோர்களுக்கு எரிச்சல் வருகிறது. குழந்தைகளும் துக்கம் அடைகிறார்கள். வீட்டில் கலகம் தோன்றிவிடுகிறது. அதனால், குழந்தைகளிடம் முன்னதாகவே சொல்லிவிட வேண்டும். ''நாங்கள் வெளியிலே போகின்றபோது பிடிவாதம் பண்ணாதே. நாங்கள் என்ன சொல்கிறோமோ, அப்படியே நடந்துகொள்ள வேண்டும்'' என்று நாள்தோறும் இரண்டு–மூன்று தடவை இப்படிச் சொல்லி வந்தால், குழந்தைகள் இதனை ஏற்றுக் கொள்வார்கள். பின்னால், வெளியே புறப்படும்போது, ''பிடிவாதம் கூடாது. நாங்கள் சொல்கிறபடி நடந்து கொள்ள வேண்டும்'' என்று பிள்ளைகளிடம் கூறினால், அவர்கள் தங்கள் சொல்லை மதித்து நடப்பார்கள்.

வீட்டுக்கு இனிப்பு வருகிறது, பழம் வருகிறது, நல்ல தின்பண்டம் வருகிறது என்றால், அதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று குழந்தை அடம்பிடிக்கிறது. அதனால், தின்பண்டம் கண்ணில் படாத நேரத்தில், ஏதேனும் தின்பண்டம் வந்தால், ''முதல்லே மற்றவர்களுக்குக்

கொடுக்கணும், மிச்சமீதியைத்தான் நாம் சாப்பிடணும்'' என்று நாள்தோறும் இரண்டு—மூன்று தடவை சொல்லி வரவேண்டும். பின்பு ருசியான தின்பண்டம் எதிரே வைக்கப்பட்டதும் அவன் அடம்பிடித்தால், ''குழந்தாய்! பிடிவாதம் கூடாது; மற்றவர்களுக்குக் கொடுத்துவிட்டு எடுத்துக்கொள்; பங்கு போட்டு அருந்து; வைகுண்டம் போ பறந்து!'' என்று கூறவேண்டும். பிறகு, அவன் அடம்பண்ண மாட்டான். இம்மாதிரி குழந்தைகளுக்கு என்னென்ன கருத்துக்களைக் கற்பிக்க வேண்டுமோ, அக்கருத்துக்களை பகலில் இரண்டு, மூன்று தடவை குழந்தைகளிடம் சொல்லி, மனமுவந்து அவர்கள் ஏற்றுக் கொள்ளும்படிச் செய்யவேண்டும்.

குழந்தைகளுக்கு நல்ல நல்ல விஷயங்களைக் கற்பிக்கவேண்டும். ''குழந்தாய்! இதோ பார்! ஒருபொழுதும் எந்தப் பொருளையும் திருடக்கூடாது. அம்மாவைக் கேட்டு எடுத்துக் கொள்ளவேண்டும். கொடுக்கவில்லையென்றால், அழுது ரகளை செய்து எடுத்துக் கொள்ளவேண்டும். ஆனால், திருடுவது மட்டும் கூடாது. தம்பி—தங்கைகளிடம் அன்பாக இருக்க வேண்டும். அவர்களுக்குச் சாதம் ஊட்டு, விளையாடு. இராமபிரான் எப்படி பரதன் முதலியோரிடத்திலே ஆசையாயிருந்தாரோ, ஆசையோடு புத்திமதிகள் கூறினாரோ, அப்படியே நீயும் உன்னுடைய சகோதர—சகோதரிகளிடத்திலே ஆசையாக இருக்கவேண்டும், சண்டை போடக்கூடாது. உங்களுக்குள்ளே ஏச்சுப் பேச்சு வந்தது என்றால், அவர்கள் சொல்கிறபடி ஒப்புக் கொண்டுவிடு. நான் சொல்வதைத்தான் கேட்கவேண்டும் என்று அடம்பிடிக்காதே. தாய்—தந்தையர் சொல்கிறபடி வீட்டு வேலைகளைச் செய்யவேண்டும். நேரத்தை வீணடிக்காமல், நல்ல காரியங்களைப் செய்ய வேண்டும். மற்றவர்கள் பொருள் மீது உரிமை கொண்டாடாதே. தன்னுடைய சாமான்களையெல்லாம் நல்லதுக்கு மேலே நல்ல வேலைகளுக்குப் பயன்படுத்தணும், இப்படி இப்படி.''

இவ்விதமாகக் குழந்தைகளுக்கு என்னென்ன கற்பிக்க வேண்டுமோ, அதனை, தினந்தோறும் இரண்டு–மூன்று தடவை குழந்தைகளுக்குச் சொல்லிவிட வேண்டும். அதனால், அவர்கள் உள்ளத்தில் இக்கருத்துக்கள் பதிவாகின்றன.

கருத்து என்னவென்றால், சிறுவர்களுக்கு முன் ஒழுக்கத்துடன் நடந்து காட்டுவது என்பது ஒன்று; நல்ல போதனைகள் செய்விப்பது என்பது மற்றொன்று. இந்த விஷயமாக, பகவானுடைய பின்வரும் வார்த்தைகளை தாய்–தந்தையர் மனனம் செய்யவேண்டும்.

***ந மே பார்த$_2$ாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந ।***
***நாநவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥***
***யதி$_3$ ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்$_3$ரித: ।***
***மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த$_2$ ஸர்வஶ: ॥***
***உத்ஸீதே$_3$யுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத$_3$ஹம் ।***
***ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா: ॥***

*(கீ$_3$தா 3/22–24)*

‘‘அர்ஜுனா! எனக்கு மூவுலகங்களிலும் செய்ய வேண்டிய கடமை ஒன்றுமில்லை; அடைய வேண்டியது எதுவும் அடையப்படாமலுமில்லை. ஆயினுங்கூட நான் கர்மா செய்வதிலேயேதான் ஈடுபட்டுள்ளேன். ஏனெனில், பார்த்தா! ஒருக்கால் நான் கவனத்துடன் கர்மங்களில் ஈடுபடாமல் இருந்தால் பெரிய தீங்கு விளையும். ஏனெனில், மனிதர்கள் எல்லாவிதங்களிலும் என்னுடைய வழியையே பின்பற்றுகிறார்கள். நான் கர்மங்களைச் செய்யாமல்விட்டால் இம்மனிதர்கள் அனைவரும் சீர்குலைந்து போவார்கள். மேலும், நான் சீர்குலைவு செய்கிறவனாகவும், இம்மாந்தர் அனைவரையும் அழிப்பவனாகவும் ஆவேன்.’’

***வினா:– இப்போது, கல்விக்கூடங்களின் சூழ்நிலை நன்றாக இல்லை. அதனால் குழந்தைகளின் படிப்புக்கு என்ன செய்யவேண்டும்?***

*விடை:–* குழந்தைக்கு நாள்தோறும் வீட்டில் நற்போதனை அளிக்க வேண்டும். ''தாய்–தந்தையர் சொற்படி நடந்தவன் முன்னேறினான்; தாய்–தந்தையர் சொற்கேளாதவன் வாழ்வு பாழாயிற்று'' என்பது போன்ற கருத்துக்களைக் கொண்டுள்ள கதைகளைச் சொல்லவேண்டும். குழந்தை படிக்கத் தொடங்கியதும், அவனுக்குப் பக்தர்களின் வரலாறுகளைப் படிக்கக் கொடுக்கவேண்டும். ''மகனே! ஒவ்வொரு குழந்தையோடும் சுதந்திரமாகப் பழகாதே; ரொம்பவும் கூடிக் குலாவி வம்பளக்காதே; படிச்சுட்டு நேரே வீட்டுக்கு வரணும்; பெரியவங்க பக்கத்திலேயே இரு; ஏதாவது தின்பண்டம் வேணும்னா, அம்மாவைப் பண்ணிக் கொடுக்கச் சொல்லிச் சாப்பிடணும்; கடைத்தெருவிலேருந்து வாங்கிச் சாப்பிடக் கூடாது; ஏன்னா, பணம் சேர்க்கிறதுதான் கடைக்காரனுக்குக் குறியே தவிர, பண்டத்தின் தரத்தைப் பற்றிக் கவலையில்லே; எப்படியோ நிறையப் பணம் சேரணும் அவனுக்கு. குழந்தைப் பருவத்திலே ஜீரண சக்தி வலுவாக இருப்பதால், கடையிலே வாங்குகிற தின்பண்டம் எல்லாம் ஜீரணமாயிடும். ஆனா, அதன் பலன் உனக்கு பின்னாலேதான் தெரியும்'' என்று குழந்தைகளிடம் கூறவேண்டும்.

குடும்பஸ்தன், பணம் சம்பாதிப்பதைக் காட்டிலும் குழந்தைகளின் ஒழுக்கத்தில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். ஏனென்றால், சேர்க்கப்பட்ட பொருளைப் பயன்படுத்தப் போகிறவர்கள், குழந்தைகள்தானே. குழந்தைகள் கெட்டுப் போனால், பணம் அவர்களை மேலும் கெடுத்துவிடும் என்பது பெரியோர்களின் வாக்கு. இதன் பொருள்— ''குழந்தை நல்லவனாக இருந்தால் அவனுக்குப் பணக்கஷ்டமே ஏற்படாது. கெட்டவனாக இருந்தாலோ, சேமித்து வைக்கப்பட்டுள்ள பணத்தையும் செலவழித்து ஒழித்துவிடுவான். அதனால் பணத்தை ஏன் சேர்த்து வைக்கிறாய்?''

***வினா:– கிறிஸ்துவப் பள்ளிகளில் கல்வி கற்கக் குழந்தைகளை அனுப்பலாமா, கூடாதா?***

விடை:- கிறிஸ்தவப் பள்ளிகூடங்களுக்கு குழந்தைகளை அனுப்பினால், அவர்கள் நம் வீட்டுக்குள்ளேயே கிறிஸ்தவர்களாக இருப்பார்கள். அதாவது, உங்கள் குழந்தைகள் வெளித்தோற்றத்தில் இந்துவாகவும், உள்மனத்தில் கிறிஸ்தவர்களாகவும் ஆகிவிடுவார்கள். ஆயிரக்கணக்கான மைலுக்கு அப்பாலிருந்து இங்கே வந்து, உங்கள் குழந்தைகளைக் கிறிஸ்தவர்களாக மாற்றி விடுகிறார்கள். நீங்கள், உங்கள் வீட்டுப் பிள்ளைகளைக் கூட இந்துவாக வைத்திருக்க முடியவில்லை. இது மிகவும் வெட்கப்பட வேண்டிய விஷயமல்லவா? குழந்தைகள் நமது நாட்டின் அரிய செல்வம். அதனைக் காப்பாற்ற வேண்டும்.

பெரிய மனிதர்கள், சொந்தமாகப் பள்ளிக்கூடம், கல்லூரி அமைத்து, அங்கு நல்ல நிர்வாகமும், குழந்தைகளுக்கு நல்ல படிப்பும் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். படிப்பு சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களின் நடத்தையும் நல்லதாக இருக்கவேண்டும். நல்லொழுக்கமுடைய ஆசிரியர்கள் கிடைப்பது அரிதே என்றாலும், முயன்று பார்த்தால் கிடைப்பார்கள். இப்படி நிறுவப்படும் பள்ளிக்கூடம், கல்லூரிகளில் நம்முடைய தர்மத்தைப் பற்றியும், கீதை, இராமாயணம் முதலிய நூல்களைப் பற்றியும் குழந்தைகளுக்குப் போதனை அளிக்கவேண்டும். சமய போதனைக்கு என ஒரு மணி நேரம் கட்டாயம் பள்ளிகளில் ஒதுக்கவேண்டும்.

நீங்கள் எளிய வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள். குழந்தைகளுக்கு எளிமையைப் புகட்டுங்கள். நீங்கள், பல்சுவை, நவீன வஸ்துக்கள், சொகுசு ஆகியவற்றைத் துறந்து, உயர்பணிகளில் ஈடுபட்டால், அதன் விளைவு குழந்தைகளிடம் காணப்படும். வீட்டில் பகவான் வழிபாட்டு அறை அமைத்து, பகவானுக்குப் பூஜை நடத்த வேண்டும். பகவானின் சரணாமுதத்தைச் சிறியவர்-பெரியவர் எல்லோரும் பருக வேண்டும். இல்லத்தில் கடவுள் சம்பந்தமான பேச்சுக்கள்,

பகவான் நாமகீர்த்தனம், நல்ல இசைப்பாடல் நிகழ்த்த வேண்டும். நீங்கள் எவ்வளவு மேன்மைப்படுகிறீர்களோ, அவ்வளவுக்கு குழந்தைகளும் உயர்வடைவார்கள். சொற்களைவிட நடத்தையின் பாதிப்பு ஆழமாகப் பதியும்.

***வினா:– மகன்–மகளின் திருமணத்திற்காக தாய்–தந்தையர் என்ன செய்யவேண்டும்?***

***விடை:–*** மகன்–மகளுக்கு எத்தகைய பேறு கிடைக்க வேண்டுமோ, அவ்விதமேதான் அமையும் என்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். ஆனால், மகனுக்குத் திருமணம் செய்ய வேண்டுமாயின், மணப்பெண்ணின் இயல்புகளைப் பார்க்கவேண்டும். ஏனென்றால், வாழ்க்கை முழுவதும் அவளுடன் கழித்தாக வேண்டுமே? அவளுடைய உடம்பில் கொடுமையான வியாதி இருக்கிறதா? அவளுடைய தாயாரின் குணம் சரியாக இருக்கிறதா? என்று இப்படி முடிந்தவரையில் ஆராய்ந்து பார்க்கவேண்டும். பெண்ணுக்கு விவாகம் என்றால் மணமகனின் குடும்பம் நல்லதா? மணமகன் நல்லவனா? அவனுக்குத் தகுதி இருக்கிறதா? என்பவைகளை அலசிப் பார்த்துவிட்டுப் பெண் கொடுக்கவேண்டும். அறநூல்களில் மணமகனிடம் ஏழு விஷயங்களைப் பார்க்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறது—

*குலம் ச ஶீலம் ச வபுர்யஶஶ்ச*
*வித்$_3$யாம் ச வித்தம் ச ஸநாத$_2$தாம் ச ।*
*ஏதாந்கு$_3$ணாந்ஸப்த பரீக்ஷ்ய தே$_3$யா*
*கந்யா பு$_3$தை$_4$: ஶேஷமசிந்தநீயம் ॥*

“மணமகனுடைய குலம், நடத்தை, உடல், புகழ், கல்வி, சொத்து, பெரியோர் துணை (ஆதரவு கொடுக்கக்கூடிய மேன்மக்கள்) – இந்த ஏழு வகைகளிலும் ஆராய்ந்தபின், தன்னுடைய பெண்ணைக் கொடுக்கவேண்டும்.”

உண்மையில் மணமகன் நல்லவன், மணமகனின் அன்னையும் நல்லவள் என்றால், பெண் சௌக்கியமாக வாழ்வாள். பெண்ணை மிக அருகிலோ அல்லது மிகவும்

தொலைவிலோ கொடுக்கக் கூடாது. ஏனென்றால், அருகில் கொடுத்தால் வம்புதும்புகள் நிறைய ஏற்படலாம்.† தூரத்தில் கொடுத்தாலோ, தாய்–தந்தையரைப் பார்ப்பதற்குப் பெண் வருவது அரிதாகிவிடும்.

தன்னுடைய சந்ததி சௌக்கியமாக இருக்கவேண்டும்; வசதியாக வாழவேண்டும். அதற்கு எந்தவிதமான கஷ்டமும் வரக்கூடாது; வம்சமும் வளரவேண்டும் – என்ற எண்ணத்தோடு கல்யாணம் செய்விக்க வேண்டும் என்பதுதான் இதன் கருத்து.

**வினா:–** ***வரதட்சணை வாங்குவது பாவமா?***

**விடை:–** ஆமாம், பாவம்தான்.

**வினா:–** ***பாவம் என்றால் நமது சாஸ்திரங்களில் அதன் சிறப்பு ஏன் கூறப்பட்டிருக்கிறது?***

**விடை:–** சாஸ்திரங்களில் வரதட்சணை கொடுக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது; வாங்குவதற்கு அல்ல. வரதட்சணை வாங்கக்கூடாது; வாங்காமலிருப்பதுதான் பெருமை. வரதட்சணை கொடுப்பது, ஒருவர் சக்தியைப் பொறுத்தது. வரதட்சணை பெற்றுக் கொள்வது, சக்திக்கு உட்பட்டதல்ல.

ஆசை என்பது இரு வகைப்படும். (1) நம்முடைய பொருள் நமக்குக் கிடைக்க வேண்டியதுதானே? இது நியாயமான

---

† அருகில் இருந்தால், தன்னுடைய ஒவ்வொரு துக்கத்தையும் அம்மாவிடம் வந்து சொல்வாள். தாய், அதைப் பொறுக்க முடியாமல், பெண்ணின் மாமியார் முதலியோரைப் பற்றி மனம்போனபடி ஏசுவாள். அதனால், பெண்ணின் புக்ககத்தில் மனஸ்தாபம் ஏற்படும். தன்னுடைய துக்கத்தை எவரிடமும் கூறாமல், தன் வீட்டுச்செய்திகளை வீட்டுக்குள்ளேயே வைத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் தனக்குத்தான் அவமானம் – ஆபத்து. எந்த வீட்டில் இரவுபகலாகக் காலம்கழிக்க வேண்டுமோ, அங்கே அமைதி கெட்டுப் போகும்.

விருப்பமேயானாலும், பரமாத்மாவை அடைவதற்கு இதுவும் தடைதான். (2) மற்றவர்களுடைய பொருள் எனக்குக் கிடைக்கட்டுமே? இந்த ஆசை நரகத்திற்கு இட்டுச் செல்லும். இதைப்போலவே வரதட்சணை வாங்க வேண்டும் என்கிற ஆசையும் நரகத்திற்கு இட்டுச் செல்லும். வரதட்சணை நிறையக் கிடைக்கலாம்; குறைவாகக் கிடைக்கலாம்; கிடைக்காமலே போகலாம் – இதெல்லாம் முந்தைய கர்மவினைப்படி நடக்கும். ஆனால், நீதியற்ற முறைகளில் பிறருடைய சொத்தை அடையவேண்டும் என்ற ஆசை இருக்கிறதே, அது துன்பமயமான நரகத்திற்கே அழைத்துச் செல்லும். மனித சரீரம் பெற்ற பின்னர் பயங்கரமான நரகங்களுக்குச் செல்வது எத்தனை பெரிய இழிவு! எத்தனை பெரிய வீழ்ச்சி! ஆதலால், குறைந்தபட்சம் பயங்கர நரகங்களுக்கு இட்டுச் செல்லும் ஆசையை, பிறர் பணத்துக்கு ஆசைப்படுவதை நிறுத்திவிட வேண்டும்.

உண்மையில் கர்மவினைப்படியே செல்வம் கிடைக்கிறது. நமது விருப்பப்படி அல்ல. நாம் விரும்புவதாலேயே பணம் கிடைப்பதாக இருந்தால், பணமில்லாதவன் என்று யாரும் இருக்கமாட்டான். பணத்தாசை கொண்ட எவரும் அதை முழுமையாகப் பெற்றதில்லை; பெறப் போவதுமில்லை; பெறவும் முடியாது. அதனைத் துறக்கவே வேண்டும். பணம் கிடைக்கவேண்டும் என்றிருந்தால், ஆசையில்லா விட்டாலும் சுலபமாகக் கிடைக்கிறது அல்லது ஆசைப்பட்டால் மிகவும் சிரமப்பட்டு பாவ–அநியாயங்களோடுகூடக் கிடைக்கிறது. கீதையில் அர்ஜுனன் கேட்கிறான்— ''மனிதன் விருப்பமில்லாமலே ஏன் பாவம் செய்கிறான்?'' பகவான் பதில் கூறுகிறார்— ''ஆசையே பாவங்களுக்கு ஆணிவேர்'' (3/36,37).

முன் காலத்தில் மகனுடைய மாமனார் வீட்டிலிருந்து வரதட்சணையாக வந்த தொகையை, வெளியே வாரி வழங்கி விடுவார்கள். தன் வீட்டில் சேர்ப்பதில்லை. 'பிறருடைய மகளைத் தானமாகப் பெற்றிருக்கிறோம்' – இதற்குக் கழுவாயாக

யக்ஞம், தானம், பிராமண போஜனம் முதலியன செய்தார்கள். ஏனென்றால், பிறருடைய பெண்ணைத் தானமாகப் பெறுவது, பெரும் கடன் சுமை ஆகும். ஆனால், குடும்ப வாழ்க்கைக்குப் பெண்ணைத் தானமாகப் பெற வேண்டியிருக்கிறது. அதனால், 'நம் வீட்டில் பெண் உண்டானால், நாமும் கன்னிகாதானம் செய்வோம்' என்ற எண்ணம் இருக்கவேண்டும்.

விதிமுறையாகப் பசு முதலியவற்றைத் தானமாகப் பெறும் பிராமணர்கள், அதற்குப் பிராயச்சித்தமாக யக்ஞம், காயத்ரீ ஜபம் செய்கிறார்கள் என்பதை நாம் காண்கிறோம். பிறருடைய பணத்தை ஏற்பது பாவம் என்றால், வரதட்சணை என்ற பெயரில் பணம் பெறுவதும் பாவம் என்று சொல்லவா வேண்டும்? வரதட்சணை பெற்றுக் கொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் கொடுப்பவருடைய ஆசையை நிறைவேற்றவும், அவருடைய மகிழ்ச்சிக்காகவுமே பெற்றுக்கொள்ள வேண்டும். பெற்றுக் கொள்வதில் சிறிதளவும் விருப்பமில்லாதிருந்து கொடுப்பவரின் மகிழ்ச்சிக்காகவே ஏதோ கொஞ்சம் பெற்றுக் கொண்டால், அப்படி வாங்கிக் கொள்வது கொடுப்பதற்கு இணையானதே.





# 4. பிள்ளைகளின் கடமைகள்

*மாதா ச கமலா தே₃வீ பிதா தே₃வோ ஜநார்த₃ந: ।*
*ப₃ாந்த₄வா விஷ்ணு ப₄க்தாப்ச ஸ்வதே₃பேபா பு₄வநத்ரயம் ॥*

உண்மையில், பகவான் லட்சுமி–நாராயணன்தான் எல்லோருக்கும் தாய்–தந்தையர். இந்தக் கோணத்தில் பார்த்தால், இந்த உலகத்தில் நம்முடைய தாய்–தந்தையர் எவர்களோ, அவர்கள் சாட்சாத் லட்சுமி–நாராயணரின் உருவமே. ஆகவே, தாய்–தந்தையருக்குப் பணிவிடையைத் தொடர்ந்து செய்வதே மகனின் கடமையாகும். தம்முடைய சரீரம் முதலியவற்றைத் தம்முடையதாகக் கருதாமல், தாய்–தந்தை யருடையதாகக் கருதுபவர்களே, உண்மையான புத்திரர்கள். ஏனென்றால், உடலானது தாய்–தந்தையினரிடமிருந்துதான் தோன்றியிருக்கிறது. ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களில் எதுவாக இருந்தாலும் சரி, அவை எல்லாவற்றின் மீதும் தாய்–தந்தையருக்கே அதிகாரம் உண்டு, தங்களுக்கு அல்ல என்று அவர்கள் எண்ணுகிறார்கள். மகன் தீர்த்தயாத்திரை, விரதம், வழிபாடு, ஸ்மரணம் ஆகிய நற்கர்மங்களில் எதைச் செய்தாலும், அதனை முழுமையாகத் தாய்–தந்தையருக்கே அர்ப்பணித்துவிட வேண்டும் என்று ‘மனு’ கூறியிருக்கிறார்.† தாய்–தந்தையர் உயிரோடிருக்கும் காலத்தில் முழுமுனைப்புடன் அவர்களுடைய ஆணைகளை நிறைவேற்ற வேண்டும். அவர்கள் மனமகிழ்ச்சியோடு இருக்கும்படி நடந்துகொள்ள வேண்டும். அவர்களது மரணத்திற்குப் பின்னர், அவர்களுக்குத் தண்ணீர், சிராத்தம்–நீர்க்கடன் கொடுக்க வேண்டும். அவர்கள் பெயரில் தீர்த்தயாத்திரை, விரதம் முதலியன செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் அவர்களுடைய ஆசீர்வாதம் கிடைக்கிறது. அதன் மூலம் இவ்வுலகம், மேலுலகம் ஆகிய இரண்டும் செம்மையாகின்றன.

---

† *தேஷாமநுபரோதே₄ந பாரத்ர்யம் யத்₃யத₃ாசரேத் ।*
*தத்தந்நிவேத₃யேத்தேப்₄யோ மநோவசநகர்மபி₄: ॥*

***(மநுஸ்ம்ருதி 2/236)***

பீஷ்மர், தந்தையினுடைய நலத்தையும் மகிழ்ச்சியையும் முன்னிட்டு, தன் சுக–சௌக்கியங்களைத் தியாகம் செய்தார். அத்துடன் இளமையிலிருந்தே பிரம்மசாரியாக இருக்கும் உறுதியையும் எடுத்துக் கொண்டார். அவர் பெண், பொன் என்ற இரண்டையும் துறந்தார். இதனால் மனமகிழ்ந்த தந்தை, பீஷ்மருக்கு 'இச்சாம்ருத்யு' (விரும்பியபோது மரணம்) என்ற வரத்தைக் கொடுத்தார். அதாவது, அவர் எப்போது விரும்புகிறாரோ, அப்போதுதான் உயிர் துறப்பார் என்பதாகும். அவருக்கு இந்தப் பேராற்றல், தந்தைக்குச் செய்த பணிவிடையினால் கிடைத்தது. ஸ்ரீராமர், தந்தையின் ஆணையைக் காப்பாற்றுவதற்காக, அரசு, செல்வம், சுகபோகம் ஆகிய எல்லாவற்றையும் துறந்தார். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில், ''தந்தையார் சொல்லிவிட்டால், நான் நெருப்பில் புகுவேன்; விஷத்தைக் குடிப்பேன்; மேலும் கடலில் வீழ்வேன். ஆனால் நான், தந்தையின் ஆணையை மீறமாட்டேன்'' என்று ஸ்ரீராமர் சொல்கிறார்.† ஸ்ரீராமர் ஆராய்ச்சியாளர் அல்லர்; ஆணைக்கு அடிபணிபவர். அதாவது, தந்தையார் என்ன சொன்னார்? எங்கே சொன்னார்? எப்போது சொன்னார்? எந்த நிலையில் சொன்னார்? எந்தச் சூழ்நிலையில் சொன்னார்? என்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிராமல், தந்தையாரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு, வனவாசம் சென்றார். அதனால், தாய்–தந்தையினரின் உத்தரவுப்படி நடப்பதில் ஸ்ரீராமர் எல்லோருக்கும் லட்சியபுருஷராக ஆனார். கோசுவாமி துளசிதாசர் கூறுகிறார்—

***அநுசித உசித பி$_3$சாரு தஜி ஜே பாலஹி(ம்) பிது பை$_3$ந ।***
***தே ப$_4$ாஜந ஸுக$_2$ ஸுஜஸ கே ப$_3$ஸஹி(ம்) அமரபதி ஐந ॥***

***(ஸ்ரீராமசரிதமாநஸம், அயோத்யா. 174)***

---

† ***அஹம் ஹி வசநாத்$_3$ராக்ஞ: பதேயமபி பாவகே ॥***
***ப$_4$க்ஷயேயம் விஷம் தீக்ஷ்ணம் மஜ்ஜேயமபி சார்ணவே ।***
***(ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், அயோத்$_4$யா. 18/28,29)***

கருத்து என்னவென்றால், மகன் ஸ்ரீராமனைப் போல் தன் நடத்தையை அமைத்துக் கொள்ள வேண்டும். ''இந்த சூழ்நிலையில், இந்த நிலைமையில், இந்தச் சமயத்தில், என் இடத்தில் ஸ்ரீராமர் இருந்தால் என்ன செய்வார்?'' என்று எண்ணிப் பார்க்க வேண்டும். இப்படி, அவரைப் பற்றிய நினைவுடனேயே செயல்களைப் புரியவேண்டும்.

மகன், தாய்–தந்தையருக்கு எவ்வளவுதான் சேவை செய்தாலும், அவன் தாய்–தந்தையருக்குப் பட்டிருக்கும் கடனை அடைக்க முடியாது. எந்த மனித உடல் மூலமாகத் தனக்கு மேலான நன்மை உண்டாகக் கூடுமோ, ஜீவன் முக்தி கிடைக்கக் கூடுமோ, பகவானின் அன்புக்குப் பாத்திரமாக முடியுமோ, பகவானின் மகுடத்தில் வைரமாக விளங்க முடியுமோ – இப்படிப்பட்ட பெரிய பதவியை அடைய முடியுமோ, அப்படிப்பட்ட இந்த மனிதச் சரீரத்தை நம்முடைய தாய்–தந்தையர் கொடுத்து இருக்கிறார்கள். அதற்குப் பதிலுதவியை மகன் எவ்வாறு தன் தாய்–தந்தையருக்குச் செய்து தீர்க்க முடியும்? தீர்க்கவே முடியாது.

***வினா:– தாய்–தந்தையருக்குச் சேவை செய்தல் என்பதன் கருத்து என்ன?***

***விடை:–*** தாய்–தந்தையருக்குச் சேவை செய்தல் என்பதன் கருத்து நன்றி மறவாமையாகும். தாய்–தந்தையர், குழந்தையின் பொருட்டு என்னென்ன துன்பங்களை அனுபவித்தார்களோ, அந்தக் கடன் மகன் மேல் இருக்கிறது. அந்தக் கடனை, மகனால் ஒருபொழுதும் கொடுத்துத் தீர்க்க முடியாது. தாய், பிள்ளைக்கு எவ்வளவு உதவி செய்திருக்கிறாளோ, அவ்வளவு உதவியை மகனால் செய்யவே முடியாது. ''என்னுடைய உடம்புத் தோலைக் கொண்டு செருப்புத் தைத்து, தாய்க்குக் கொடுப்பேன்'' என்று எந்தப் பிள்ளையாவது சொன்னால், நாம் அவனிடம் கேட்கிறோம்— ''நீ, இந்தத் தோலை எங்கிருந்து கொண்டு வந்தாய்? இதுவும் தாய் கொடுத்ததுதானே?

அந்தத் தோலைக் கொண்டு, செருப்புத் தைத்து தாய்க்குக் கொடுப்பது, ரொம்பப் பெரிய செயலோ? கொடுக்கிறேன் என்று தற்பெருமை மட்டும் பேசிவிட்டாய்! இவ்விதமே சரீரத்தின் பெரும் பங்கு தந்தையினுடையது. தந்தையின் முயற்சியாலேயே மகன் படிக்கவும் எழுதவும் தெரிந்து கொள்கிறான். அவனுக்கு உணவு–உடை கிடைக்கிறது. இதற்குப் பதிலுதவி எப்படிச் செய்து தீர்க்க முடியும்? ஆகவே, தாய்–தந்தையருக்குச் சேவை செய்வதால், அவர்களை மகிழ்ச்சியோடு வைத்திருப்பதால், அந்தக் கடன் அடைக்கப்பட்டதாக ஆவதில்லை. ஆனால், மன்னிக்கப்பட்டதாக ஆகும்.

**வினா:– "எனக்கு ஒரு மகன் தோன்ற வேண்டும்; அவனுக்கு மேலான நன்மை உண்டாக வேண்டும்" என்ற நோக்கத்தோடு, தாய்–தந்தை உடலுறவு கொள்ளவில்லை. அவர்கள் தங்கள் இன்பத்திற்காகவே உறவு கொண்டார்கள்; ஆனால், நாம் பிறந்தோம். இதில், அவர்களிடம் நாம் கடன்பட்டது எப்படி?**

விடை:– கருத்தின்றி இன்பப் பற்றுடன் உறவு கொள்ளும் ஆண்–பெண்களுக்குப் பொதுவாக, சிறந்த மக்கள் பிறப்பதில்லை. சாஸ்திரங்களின் கட்டளைக்கேற்ப, தங்களது இன்பத்தை நோக்கமாகக் கொள்ளாமல் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதற்கென மக்களை உற்பத்தி செய்கிற ஆண்–பெண்களே உண்மையான தாய்–தந்தையர்கள். ஆனால், மகன் எப்படித் தோன்றினாலும், ஏதோ ஒரு வகையில் தாய்–தந்தையர் இருப்பார்கள். அவர்கள் மரியாதைக்குரியவர்கள். ஏனென்றால், அவர்கள் மனித உடலைக் கொடுத்து, பரமாத்மாவை அடைவதற்குத் தகுதியுடையவனாக மகனைச் செய்திருக்கிறார்கள்.

மாணவன் கல்வியை முடித்துக் கொண்டு, 'ஸ்நாதகன்' என்ற நிலையிலிருந்து, குடும்ப வாழ்க்கையில் நுழைவதற்கு முன், ஆசார்யரிடமிருந்து விடைபெறுகிறபோது, ஆசார்யர் அனுமதி அளித்துக் கூறும்போது, ***'மாத்ருதே$_3$வோ ப$_4$வ',***

*'பித்ருதே$_3$வோ ப$_4$வ'* – அதாவது, ''நீ, தாய்–தந்தையரை சாட்சாத் பகவான் வடிவமாகவே எண்ணி, அவர்களுடைய ஆணைப்படி நட; அவர்களுக்குப் பணிவிடை செய்'' என்று கூறுவதாக உபநிடதங்களில் வருகிறது. இது மாணவப் பருவ முடிவில், ரிஷிகளால் புகட்டப்படும் பாடம். இதைக் கடைப்பிடிப்பதில்தான் நம்முடைய உயரிய நன்மை இருக்கிறது. ஆகவே, எவர்களிடமிருந்து சரீரம் கிடைத்து இருக்கிறதோ, அவர்களிடம் மகன் நன்றியுணர்வோடு இருக்கத்தான் வேண்டும்.

***வினா:– தாய்–தந்தையர் நம்மைப் பிறப்பித்து வாழ்க்கைச் சிக்கலில் தள்ளிவிட்டார்கள்; ஆபத்துக்களில் தள்ளிவிட்டார்கள். இப்படியிருக்கையில், அவர்களிடம் நாம் எப்படிக் கடன்பட்டவர்களாவோம்?***

*விடை:–* இப்படிக் கூறுவது முற்றிலும் தவறு. தாய்–தந்தையர், மனிதச் சரீரத்தைக் கொடுத்து, வாழ்க்கைச் சிக்கலிலிருந்து, பிறப்பு–இறப்பிலிருந்து விடுதலை பெறுவதற்கு மிகவும் அரிய வாய்ப்பினை அளித்துள்ளார்கள். தாய்–தந்தையர், மகனைச் சிக்கலில் தள்ளவுமில்லை; தங்களுடைய மகனைச் சிக்கலில் தள்ளும் நோக்கமும் அவர்களுக்கு இல்லை. அவர்கள் ஒவ்வொரு சூழ்நிலையிலும், தெரிந்தோ, தெரியாமலோ மகனின் நலனையே விரும்புகிறார்கள். அவர்களுக்கு நலனையே செய்கிறார்கள். ஆனால், நாம் பொருட்களின்மீதும், போகங்களிலும், சூழ்நிலைகளிலும், நபர்களின்மேல் மமதை கொண்டும், அவைகளிடமிருந்து இன்பம் துய்க்க வேண்டுமென்ற ஆசையால், சிக்கல்களில் ஆபத்துக்களில் வீழ்கிறோம். கருத்து என்னவென்றால், தன்னுடைய சுகத்தின் மேல் விருப்பம், சுகபோகம், சுகவேட்கை ஆகியவற்றைத் தியாகம் செய்து, தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவையை, பரமாத்மாவை அடையும் உபாயமாகக் கருதி, முழு முனைப்புடன் அவர்களுக்குச் சேவை செய்தால், அவனுக்கு உலகுடன் இருந்த உறவு விடுபட்டு 'பரமாத்ம பிராப்தி' ஏற்படும்.

தாய்–தந்தையரின் கடமை பற்றிய பார்வையே மகனுக்குத் தேவையில்லை. அவன், தன்னுடைய கடமையையே பார்க்க வேண்டும். தன்னுடைய கடமையைப் பார்க்காமல், தாய்–தந்தையரின் கடமையைப் பார்க்கும் மகன், தன்னுடைய கடமையிலிருந்து வழுவுகிறான். அதாவது, கடமையைச் செய்வதிலிருந்து வீழ்ந்து விடுகிறான். எந்த ஒரு சாஸ்திரத்திலும் யாருக்கும் தாய்–தந்தையரின், குருநாதர்களின் கடமையைப் பார்ப்பதற்கான உரிமை கொடுக்கப் பட்டிருக்கவில்லை. முன்பு மனிதர்கள், மற்றவர்களுடைய கடமையைப் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. ஆனால், தங்களுடைய கடமையைப் பார்த்தார்கள். தங்கள் கடமையை நிறைவேற்றினார்கள். அதனாலேயே அவர்கள் ஜீவன்முக்தர்களாக, இறையன்பர்களாக இருந்தார்கள். அவர்கள் பிறருடைய கடமைகளைப் பார்ப்பவர்களாக, தங்கள் சுயநலத்தையே பார்ப்பவர்களாக இருந்திருந்தார்களேயானால், இப்போது உள்ளதைப் போலவே மனித சமுதாயம் இருந்திருக்கும். தங்கள் கடமையிலேயே கருத்தாயிருந்தவர்கள், அதை நிறைவேற்றியவர்கள் ஆகிய அப்படிப்பட்ட சாது–மகாத்மாக்களையும் தர்மாத்மாக்களையும் பாரத மக்கள் எத்தனை மரியாதையோடு நோக்குகிறார்கள்! ஆகவே, தன்னுடைய கடமையை மனிதன் ஒருபோதும் கைவிடக்கூடாது.

கடமையைப் பற்றி ஒரு ரகசியமான விஷயம் என்னவென்றால், 'இது ஒரு கடமை' என்று மட்டுமே எண்ணி, அதைச் செய்வதால் உறவுப்பிளவு ஏற்படுகிறது. அதாவது, தாய்–தந்தையருக்குச் சேவை செய்வது, நம்முடைய ஒரு கடமை என்ற எண்ணத்துடன் செய்கிறார்களே, அவர்களுக்குத் தாய்–தந்தையருடனான உறவில் பிளவு ஏற்படுகிறது. அவர்களுக்குத் தாய்–தந்தையரிடம் வணக்கத்தோடு கூடிய அன்பு ஏற்படுவதில்லை. இதற்கு மாறாக, தமது உடலைத் தாய்–தந்தையருடையதாகவே கருதி, மனமொன்றி மரியாதை யுடனும் அன்புடனும் அவர்களுக்குப் பணிவிடை செய்தால், அத்தகையவர்களுக்குத் தாய்–தந்தையரிடம் அன்பு ஏற்படுகிறது.

உணவு கொள்வதையும், தண்ணீர் பருகுவதையும் மனிதர்கள் எவ்வாறு தம்முடைய கடமையாகக் கருதாமல், உயிருக்கு ஆதாரமாகக் கருதுகிறார்களோ, அதேபோல தாய்–தந்தையருக்குச் செய்யப்படும் சேவையை, உயிருக்கு ஆதரமாகக் கருத வேண்டும். அவர்களுடைய சேவையையே தன்னுடைய வாழ்வாகக் கருதவேண்டும். தன்னுடைய முதன்மையான வேலையாகக் கருதவேண்டும்.

***ஸேவஹி(ம்) லக$_2$நு ஸிய ரகு$_4$வீரஹி ।***
***ஜிமி அபி$_3$பே$_3$கீ புருஷ ஸரீரஹி ॥***
***(ஸ்ரீராமசரிதமாநஸம், அயோத்யா. 142/1)***

இவ்விதம் தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவையைத் தன் உயிருக்கு, வாழ்வுக்கு ஆதாரமாகக் கருதிச் செய்வதால், 'நான்', 'எனது' என்ற எண்ணம் குறைந்து போகிறது. ஏனெனில், சரீரத்தைத் தாய்–தந்தையருக்குரிய பொருளாகக் கருதி, அவர்களுடைய சேவையில் அர்ப்பணிப்பதன் மூலம் – சரீரத்தின் மேல் நமக்கு எவ்வித உரிமையும் இல்லை என்று எண்ணுவதன் மூலம் – 'நான்', 'எனது' என்ற பிடிப்பு இருப்பதில்லை.

***வினா:– மனிதன், தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவையை, பகவானை அடைவதற்கான வழியாகக் கருதுகிறான். அதுவே அடையப்பட வேண்டியது என்று கருதவில்லை. தாய்–தந்தையருக்குச் செய்யப்படும் சேவையே அடையப்பட வேண்டிய பொருள் என்று கருதினால், தன்னுடைய உயிருக்கு ஆதாரம் என்று கருதினால், அவனுக்குத் தாய்–தந்தையரின் திருப்பாதங்களிலேயே அன்பு உண்டானால், அவனுக்குப் பகவானிடம் பிரேமை, பகவத் பிராப்தி எவ்வாறு உண்டாகும்?***

*விடை:–* இதில் மூன்று விஷயங்கள் இருக்கின்றன. (1) தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவையைச் சாதனமாகவும் (வழியாகவும்), ஸாத்யமாகவும் (பெறவேண்டிய வஸ்துவாகவும்) கருதி, அவர்களுக்குச் சேவை செய்பவன், அவர்களுக்குச் செய்யும் சேவையைத் தன் உயிரின் ஆதாரமாகக் கருதுபவன் எவனோ, அவனுக்குத் தாய்–தந்தையரின் திருப்பாதங்களில்

பிரேமையும் பக்தியும் உண்டாகிக் கடைசியில் அவனுக்குப் பித்ருலோகம் கிடைக்கிறது. (2) பரமாத்மாவை அடையும் நோக்கத்துடன், தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவையைத் தன் கடமையாக எண்ணிக் கொண்டு செய்பவன் யாரோ, அவனுக்கு தாய்–தந்தையரிடமிருந்து உறவு துண்டிக்கப்பட்டுப் பரமாத்மப் பிராப்தி உண்டாகிறது. (3) தாய்–தந்தையரைச் சாட்சாத் பகவானின் வடிவமாக எண்ணி, அவர்களுக்குச் சேவை செய்பவனுக்கு பகவத் பிராப்தி கிடைக்கிறது. இந்த மூன்றிலும் யாருக்கு எந்த முறையின்மீது ஈடுபாடு ஏற்படுகிறதோ, அதையே செய்யவேண்டும்.

பதிவிரதையான மனைவி, பகவானுடையவும், சாஸ்திரங்களுடையவும், மகாபுருஷர்களுடையவும் கட்டளைக்கிணங்கவும், உடலாலும் உள்ளத்தாலும் கணவனுக்குச் சேவை செய்கிறாள். அவளுக்குப் பதிலோகம் கிடைக்கிறது. அதாவது, கணவனுக்கு எந்த லோகமோ, அதே லோகம் பதிவிரதைக்கும் கிடைக்கிறது. ஆனால், கெட்ட நடவடிக்கைகளின் காரணமாகக் கணவனுக்குக் கிடைப்பது நரகம் என்றால், பதிவிரதையின் லோகமும் நரகமே! என்று பொருள் இல்லை. எவள், பதிசேவையைத் தன் தர்மமாக (கடமையாக) எண்ணி, 'பாதிவிரத்யம்' அனுஷ்டித்திருக்கிறாளோ, அவள் ஏன் நரகத்திற்குப் போகிறாள்? போகவே மாட்டாள். அவள் பாதிவிரத்யம் கடைப்பிடித்திருக்கிறாள். அதனால், அவளுக்கு எந்த லோகம் கிடைக்குமோ, அதே லோகம் கணவனுக்கும் கிடைக்கும். அதாவது, கற்பு எனும் தவவலிமையால் அவளுக்கும், அவளது கணவனுக்கும் மேலான நன்மை ஏற்படும். இவ்விதமே தாய்–தந்தையருக்கு ஆற்றும் சேவையைச் சாதனமாகவும் ஸாத்யமாகவும் கருதி, அவர்களுக்குத் தொண்டு புரிபவனுக்கும், அவனுடைய தாய்–தந்தையருக்கும் பகவத் பிராப்தி கிடைக்கும். ஏனென்றால், மகனுக்குக் கிடைக்கும் லோகம் எதுவோ, அதே லோகம் தாய்–தந்தையருக்கும் (பித்ருலோகம்) ஆகும்.

***வினா:– இந்தச் சரீரம் நம்முடைய வினையின் பயனாக, பேற்றின் பயனாகக் கிடைத்திருக்கிறது. அதாவது, 'ப$_3$டே$_3$***

**ப$_4$ாக$_3$ மாநுஷ தநு பாவா' என்று சொல்லப்படுகிறது. பகவான் மிகுந்த கருணையோடு மனிதச் சரீரத்தைத் தந்திருக்கிறார்.**

**கப$_3$ஹூ(ம்)க கரி கருநா நர தே$_3$ஹீ ।**
**தே$_3$த ஈஸ பி$_3$நு ஹேது ஸநேஹீ ॥**

***அப்படியானால், இந்தச் சரீரம் தாய்–தந்தையரிடமிருந்து கிடைத்தது என்பது எப்படிச் சரியாகும்?***

விடை:– இந்தச் சரீரம் தோன்றுவதற்குப் பிராரப்த கர்மாவும், பகவத் கிருபையும் நிமித்த காரணங்கள்; தாய்–தந்தையர் உபாதான காரணம். எப்படியென்றால், குடம் மண்ணினால் செய்யப்படுகிறது; மண், குடத்துக்கு உபாதான காரணம். குயவன் குடத்தின் தோற்றத்திற்கு நிமித்தமாக இருக்கிறான் என்பதால், குயவன் நிமித்த காரணமாகிறான் என்பதுபோல. உபாதான காரணம் (முக்கிய காரணம்) என்பது செயலில் வடிவமாக மாறுதல் பெறுகிற காரணம். நிமித்த காரணம் பலவாறாக இருக்கக்கூடும். குடத்தைச் செய்வதற்குக் குயவன் சக்கரம், தடி முதலிய பல நிமித்த காரணங்கள் இருக்கின்றன. அவற்றில் குயவன் முக்கியமான நிமித்த காரணம். அதேபோல, சரீரத் தோற்றத்திற்குத் தாய்–தந்தையரே முக்கிய உபாதான காரணம். ஏனெனில், அவர்களுடைய சுக்ல–சோணிதத்திலிருந்து சரீரம் உருப்பெறுகிறது. பிறப்பு, ஆயுள், அனுகூலமான அல்லது அனுகூலமில்லாத சூழ்நிலை ஆகியவற்றிற்குக் கர்மம், நிமித்த காரணமாகும். 'எந்தக் கர்மாவுக்கு, எப்போது, எந்த இடத்தில், என்ன பலன் ஏற்படவேண்டும்? எவ்விதமான சூழ்நிலை அமைய வேண்டும்?' என்று, கர்மபலனுக்கு ஏற்பாடு செய்வதில், கர்மபலனைக் கொடுப்பதில் பகவத் கிருபை நிமித்த காரணமாகிறது. அதாவது, இவையெல்லாம் பகவானின் விருப்பப்படி, பகவானுடைய திட்டப்படி நிகழ்கிறது. ஏனெனில், கர்மா என்பது ஜடப்பொருள் ஆனதால், தானே கர்மபலனைக் கொடுக்க முடியாது. கர்மபலத் திட்டமும் ஜீவர்களின் கையில் இருந்தால், அவர்கள் நற்செயல்களின் பலனை மட்டுமே எடுத்துக் கொள்வார்கள்; தீயச்செயல்களின் பலனை எடுத்துக் கொள்வார்களா, என்ன? உலகியலில் நாம் பார்க்கிறோம்—

மனிதன், நற்செயல்களின் பலனைத் தானாகவே எடுத்துக் கொள்கிறான். ஆனால், தீயச்செயல் (திருட்டு, கொள்ளை முதலியவை)களின் பலனை (தண்டனையை)த் தானாகவே எடுத்துக் கொள்ளாததால், அவனுக்குச் சட்டத்தின் மூலம் தண்டனை கொடுக்கப்படுகிறது.

அன்னை, குழந்தைக்காக எத்தனை கஷ்டங்களை ஏற்கிறாள். அவனைக் கர்ப்பத்தில் தாங்குகிறாள்; பிறக்கும்போது பொறுக்க முடியாத வேதனையைப் பொறுத்துக் கொள்கிறாள்; தன்னுடைய பாலை ஊட்டுகிறாள்; மிகவும் ஆசை–அன்புடன் சீராட்டி வளர்க்கிறாள். சாப்பிடவும், அருந்தவும், எழுந்திருக்கவும், உட்காரவும், நடக்கவும், செயல்கள் செய்யவும் சொல்லிக் கொடுக்கிறாள். ஆதலால், தாயிடம் பட்டிருக்கும் பெற்ற கடனை மகனால் அடைக்கவே முடியாது. ஆகவே, மகன் தாயிடம் நன்றியுணர்வுடன் இருக்க வேண்டும். இவ்விதமே, கேட்காமலேயே மகனின் உண்டி–உறையுளுக்குத் தந்தை ஏற்பாடு செய்கிறார்; கல்வி கற்பித்து அறிவுள்ளவன் ஆக்குகிறார்; வாழ்க்கையை நடத்துவதற்குத் தொழில் கற்பிக்கிறார்; திருமணம் செய்விக்கிறார். இவ்விதம் தந்தையிடம் பட்டுள்ள கடனை அவனால் அடைக்க முடியுமா என்ன? அதனால், தாய்–தந்தையரிடம் நன்றியோடு இருக்க வேண்டும். அவர்கள் வாழ்கின்றபோது, அவர்களுடைய ஆணைகளை நிறைவேற்ற வேண்டும். அவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். அவர்களை மகிழ்ச்சியோடு வைத்திருக்க வேண்டும். அவர்கள் மரணத்திற்குப்பின், அவர்களுக்குப் பிண்டம்–நீர்க்கடன் கொடுத்து, சிராத்த–தர்ப்பணம் செய்வது முதலியன மகனின் தலையாய கடமையாகும்.

***வினா:– தாய்–தந்தையர், குழந்தைகளுக்கு அவர்களது குழந்தைப் பருவத்திலிருந்தே நற்போதனைகளைக் கொடுக்க வில்லை. அதனால், மகன்கள் தாய்–தந்தையருக்குச் சேவை செய்யவில்லை – என்றிருக்கும்போது, மகன்கள் மேல் என்ன குற்றம்?***

**விடை:–** தாய்–தந்தையர் நற்போதனைகளைக் கொடுக்கவில்லை என்றால், அந்தக் குற்றம் அவர்களுடையது. ஏனெனில், அவர்கள் தங்கள் கடமையைச் செய்யவில்லை. ஆனால், தாய்–தந்தையரின் குற்றத்தைப் பார்ப்பது, மகனின் கடமை அல்ல. அவன், தன்னுடைய கடமையைத்தான் பார்க்க வேண்டும். மற்றவர்களுடைய கடமையை மதிப்பிட்டுப் பார்ப்பதனால், மனிதன், தன்னுடைய கடமையிலிருந்து வழுவுகிறான். மற்றவர்களுடைய கடமையைப் பார்ப்பதே மிகப்பெரிய குற்றம். கீதையிலும்கூட தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டும் என்றும், செப்பனிட்டுக் கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.† ஏனெனில், நல்ல போதனைகள் கிடைத்தால், தானாகவே அதனை ஏற்று நடப்பான். நல்ல படிப்பினை கிடைத்திருந்தும்கூட, அவன் அதனை ஏற்று நடக்காவிட்டால், கெட்டுப்போனால், அந்தக் குற்றம் மகனுடையதே ஆகும். ஆகவே, தன்னுடைய முன்னேற்றமோ, வீழ்ச்சியோ பெரும்பாலும் தன்னையே சார்ந்திருக்கிறது.

**வினா:– தாய்–தந்தையர் பிள்ளையிடம் கடுமையாக நடந்து கொண்டால், ஓர–வஞ்சனை செய்தால், அந்த மகன் என்ன செய்யவேண்டும்?**

**விடை:–** அந்தப் புதல்வன், தாய்–தந்தையரின் கடமையைப் பார்க்கக் கூடாது. அவன் தன்னுடைய கடமையையே கருத்தில் கொள்ள வேண்டும். மிகுந்த ஊக்கத்துடன் சிறப்பான முறையில் தாய்–தந்தையருக்குப் பணிவிடை செய்தல் வேண்டும். கோசுவாமி துளசிதாசரின் ஸ்ரீராமசரிதமானஸத்தில், ஒவ்வொருவருக்காகவும் இதுகுறித்துக் கூறப்பட்டிருக்கிறது— **'மந்த$_3$ கரத ஜோ கரஇ ப$_4$லாஈ ॥' (5/41/4).**

---

† **உத்$_3$த$_4$ரேத$_3$ாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாத$_3$யேத் ।**
**ஆத்மைவ ஹ்யாத்மநோ ப$_3$ந்து$_4$ராத்மைவ ரிபுராத்மந: ॥**
**(ஸ்ரீமத் பகவத்கீதா 6/5)**

தாய்–தந்தையர், புதல்வனுக்கு மரியாதை காட்டினால், அந்தப் புதல்வனின் சேவை(யின் பலன்) குறைந்துவிடுகிறது; விற்கப்பட்டுவிடுகிறது. ஆனால், அவர்கள் மரியாதை காட்டாமல், புதல்வனை எப்போதும் அவமதித்தால், புதல்வனின் சேவை நிறைவாகவே இருக்கும்; அது குறையாது. பெற்றோர்கள் கஷ்டம் கொடுக்கிறார்கள் என்றால், அதனால் மகனுக்குத் தூய்மை ஏற்படுகிறது; பொறுத்துக் கொள்ளும் தன்மை வளர்கிறது; தவம் பெருகுகிறது; பெருமை கூடுகிறது. ஆதலால், தாய்–தந்தையர் கொடுக்கும் இன்னல்களை உயர்ந்த தவமாக எண்ணி, முகமலர்ச்சியோடு பொறுத்துக் கொள்ள வேண்டும். ''என்னிடம்தான், தாய்–தந்தையருக்கு எவ்வளவு கருணை! – என்னுடைய சேவையில் சிறிதளவுகூட குறையாமல், எனக்குத் தூய சேவை, தூய தவம் ஆகியவற்றின் முழுப்பயனும் கிடைத்துக் கொண்டிருக்கிறது. இத்தகைய வாய்ப்பு, ஏதாவதொரு பாக்கியசாலிக்குத்தான் கிடைக்கும். அடடா! என்ன பேறு எனக்கு! என் சேவையைத் தாய்–தந்தையர் ஏற்றுக்கொள்கிறார்கள்!'' என்று எண்ணவேண்டும். அவர்கள், சேவையை ஏற்காவிட்டாலும், அவர்களுக்குச் சேவை செய்வதே மகனின் கடமை. அக்கடமையில் ஏதாவது குறை, தவறு தெரிய வந்தால், அதை அப்போதே சீர்திருத்திவிட வேண்டும்; சேவையிலேயே முனைந்திருக்க வேண்டும்.

சொத்து, நிலம், வீடு முதலியவற்றை அடையும் எதிர்பார்ப்புடன் தாய்–தந்தையருக்குச் சேவை செய்யும் மகன், உண்மையில் சொத்து முதலியவைகளுக்குத்தான் சேவை செய்கிறான். தாய்–தந்தையருக்கு அல்ல. மகன், சேவையோடு மட்டுமே உறவு கொண்டிருக்க வேண்டும். (சொத்து முதலியவற்றோடு அல்ல.) ''உங்களிடம் உள்ள சொத்து–சுகங்களை, உங்கள் மனதுப்படி என் சகோதரனுக்கோ, சகோதரிக்கோ அல்லது விருப்பமுள்ள வேறு யாருக்கோ கொடுத்துக் கொள்ளுங்கள். ஆனால், என்னுடைய சேவையை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று அவன், தாய்–தந்தையரிடம் கூறிவிட வேண்டும். தாய்–தந்தையர், நம்முடைய சேவையை ஏற்கிறார்கள் என்பதே, அவர்களுடைய கருணைதான்.

**வினா:– முறையற்ற, தரமற்ற வேலையைச் செய்யும்படி தாய்–தந்தையர் ஆணையிட்டால், மகன் என்ன செய்ய வேண்டும்?**

**விடை:–** பெற்றோர்களின் முறையற்ற ஆணை இருவிதமாக இருக்கலாம். (1) 'இன்னாரைக் கொன்றுவிடு' என்பது போன்று, பிறருக்குத் தீமை பயக்கும் செயலைச் செய்யும்படியாக ஆணையிடுதல்; (2) 'நீ, வீட்டைவிட்டுக் காட்டுக்குப் போ' போன்ற ஆணையிடுதல். இவற்றில், இரண்டாவது ஆணையை ஏற்று நடக்கத்தான் வேண்டும். ஆனால், முதலாவது ஆணையை ஏற்க வேண்டாம். இதில்தான் தந்தையின் சக்தியைப் பார்க்க வேண்டும். தந்தைக்கு ஆற்றல் இருக்குமேயானால், அவருடைய ஆணையை ஏற்று நடப்பதில் தடையேதும் இல்லை. ஜமதக்னி முனிவர், தன்னுடைய குமாரன் பரசுராமரிடம் கூறினார்— ''உன்னுடைய தாய் நடத்தை கெட்டவள். நான் கூறிய ஆணையை, உன்னுடைய சகோதரர்கள் செய்யவில்லை. ஆகவே, இவர்களைக் கொன்றுவிடு.'' உடனே பரசுராமர், அவர்களுடைய கழுத்தை வெட்டினார். இதனால் மகிழ்ந்த ஜமதக்னி, ''நீ ஏதாவது வரம் கேள்'' என்றார். ''என் தாயும் சகோதரர்களும் உயிர்பெற்று எழவேண்டும்; என்னால் கொல்லப்பட்ட விஷயமும் அவர்களின் நினைவில் இருக்கக் கூடாது'' என்று பரசுராமர் கேட்டார். ஜமதக்னி, ''அப்படியே ஆகுக'' என்றார். எல்லோரும் உயிர் பெற்று எழுந்தார்கள்!

தந்தைக்கு ஆற்றல் இல்லை. ஆனால், அவர் முறையற்ற ஆணையிடுகிறார் என்றால், மகன் அதை மதித்து நடக்க வேண்டாம். காரணம், அந்த முறையற்ற ஆணையை மகன் நிறைவேற்றினால், தந்தைக்கு நரகம்தான் கிடைக்கும். எந்த ஆணையை நிறைவேற்றுவதால் தந்தைக்கு நரகம் கிடைக்குமோ, துக்கம் அடைய நேரிடுமோ, அந்த ஆணையை மகன் நிறைவேற்றக் கூடாது. ''நான் நரகத்திற்குப் போனாலும் பரவாயில்லை; தந்தை நரகத்திற்குப் போகக் கூடாது'' என்ற பாவனை இருந்தால், மகனுக்கும் நரகம் கிடைக்காது, தந்தைக்கும் கிடைக்காது. இதன் தாத்பர்யம் என்னவென்றால்,

நரகத்திலிருந்து தந்தையைக் காப்பாற்றுவதற்காக, அவருடைய ஆணையை உடைத்தெறிந்தாலும் பாதகமில்லை. ஆகவே, முறையற்ற காரியத்தை ஒருபோதும் செய்யக்கூடாது.

தந்தைக்கு ஆற்றல் இல்லை. ஆனால், அவர் முறையற்ற ஆணையை இடுகிறார். வாழ்நாளில் தாய்–தந்தையரின் எந்த ஒரு ஆணையையும் மீறி, மகன் நடந்ததில்லையென்றால், அவசரகதியில், அந்த முறையற்ற ஆணையை நிறைவேற்றி விடாமல், அதனைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்; பகவானை நினைக்க வேண்டும். ''உன்னுடைய தாய் நடத்தை கெட்டவள்; அவளைக் கொன்றுவிடு'' என்று கௌதமர், தன்னுடைய மகன் சிரகாரியிடம் கூறினார். இப்படிக் கூறிவிட்டுக் காட்டுக்குப் போய்விட்டார். சிரகாரி, கத்தியை எடுத்துக் கொண்டு, தந்தையின் ஆணையைப் பற்றி ஆலோசித்தார். அங்கே கௌதமருடைய மனத்தில், ''அவளை ஏன் கொல்ல வேண்டும்? அவளைத் தியாகம் செய்துவிடலாமே?'' என்ற எண்ணம் ஏற்பட்டது. இப்படி சிந்தனை செய்து கொண்டே, அவர் திரும்பி வந்தார். கையில் கத்தியுடன் சிரகாரி நிற்பதைப் பார்த்து, ''உன் தாயைக் கொன்று விடாதே'' என்று கூறி, அவர் சிரகாரியைத் தடுத்துவிட்டார்.

*வினா:–* *கோசுவாமி துளசிதாசர் கூறியிருக்கிறார்—*

**ஜாகே ப்ரிய ந ராம–பை$_3$தே$_3$ஹீ ।**
**தஜியே தாஹி கோடி பை$_3$ரீஸம,**
**ஜத்$_3$யபி பரம ஸநேஹீ ॥**
**தஜ்யோ பிதா ப்ரஹ்லாத$_3$, பி$_3$பீ$_4$ஷந ப$_3$ந்து$_4$,**
**ப$_4$ரத மஹதாரீ ।**
**ப$_3$லிகு$_3$ரு தஜ்யோ, கந்த ப்$_3$ரஜ–ப$_3$நிதந்ஹி,**
**ப$_4$யேமுத$_3$–மங்க$_3$லகாரீ ॥**

***''பிரகலாதன் தந்தையையும், விபீஷணன் சகோதரனையும், பரதன் தாயையும், பலி குருவையும், கோபியர்கள் கணவன்மார்களையும் தியாகம் செய்தார்கள்.'' அவர்களுக்குப் பாவம் ஏற்படவில்லையா?***

**விடை:-** அவர்கள், தந்தை, சகோதரன், தாய், குரு, கணவன் முதலியவர்களை, எந்த விஷயத்திற்காக, எந்த அளவிற்குத் தியாகம் செய்தார்கள் என்பதை இங்கே எண்ணிப் பார்க்கவேண்டும். இரண்யகசிபு, பிரகலாதனுக்கு அநேக துன்பங்கள் கொடுத்தான். ஆனால், பிரகலாதன் அவைகளையெல்லாம் மகிழ்ச்சியோடு பொறுத்துக் கொண்டார். 'இந்தச் சரீரம் தந்தையிடமிருந்து கிடைத்தது. அவர் விருப்பப்படி இதை வைத்துக் கொள்வதற்கு, அவருக்கு உரிமை இருக்கிறது' என்ற விஷயத்தை உணர்ந்து மதித்தார். அதனால், 'எனக்கு, நீங்கள் ஏன் கஷ்டங்களைக் கொடுக்கிறீர்கள்?' என்று, பிரகலாதன் ஒருபோதும் தகப்பனாரைக் கேட்டதில்லை. ஆனால், 'நான், சாட்சாத் பரமாத்மாவின் அம்சம். அதனால் நான், பகவானுக்குச் சேவை செய்வதில், வழிபாட்டில் ஈடுபட்டிருக்கிறேன். தகப்பனார் இதில் குறுக்கிடுகிறார்; என்னையும் தடுக்கிறார். இது முறையல்ல.' ஆகவே, தகப்பனாருக்கு நரகத்தைக் கொடுக்கக்கூடிய அந்த ஆணையைப் பிரகலாதன் கைவிட்டு விட்டார். தந்தையின் ஆணையை ஏற்று, பகவத் பக்தியைத் துறந்திருந்தால், அதற்கான தண்டனையைத் தகப்பனார் அனுபவிக்க நேர்ந்திருக்கும். தகப்பனார் தண்டனையை அனுபவிக்க நேரும்படியான எந்தச் செயலையும் மகன் செய்யக்கூடாது. இந்த நோக்கில்தான், தந்தையின் ஆணையை மதிக்காததன் மூலம் பிரகலாதன் தந்தைக்கு நன்மையே செய்தார்; அவர், தந்தையைத் துறந்துவிடவில்லை.

இராவணன், விபீஷணனைத் துச்சமாக எண்ணி, 'நீ இங்கிருந்து போய்விடு' என்று சொன்னதும், அவர் ஸ்ரீராமரிடம் போய்ச் சேர்ந்தார். ஆகவே விபீஷணன், சகோதரனைத் துறந்துவிடவில்லை. மாறாக, அவனுடைய அநியாயத்தைத் துறந்தார். அநியாயத்தை நியாயப்படுத்தவில்லை; ஆதரவும் காட்டவில்லை. விபீஷணன், இராவணனுக்கு அவனுடைய நன்மைக்கான விஷயத்தையே சொன்னார். அவனுக்கு நன்மையையே செய்தார்.

தாயார், ஸ்ரீராமனைக் காட்டுக்கு அனுப்பி வைத்தார்; துன்பம் கொடுத்தார் என்பதையறிந்த பரதன், தாயாரைத் துறந்தான். பரதன், தன் தாயிடம் இவ்வாறு கூறினான்— ''எப்படி தாய் கௌசல்யா, தன் மகன் இராமனிடம் காட்டிய அன்பைக் காட்டிலும், அதிக அன்பை என்னிடம் காட்டுகிறாரோ, அப்படியே நீயும் என்னிடம் காட்டும் அன்பைக் காட்டிலும், அதிக அன்பை இராமனிடம் காட்டியிருக்க வேண்டும். ஆனால், அதற்குமாறாக நீ, ஸ்ரீராமனைக் காட்டிற்கு அனுப்பி விட்டாய். நீ, ஸ்ரீராமனுக்கு தாயாக இல்லாமற்போய்விட்ட பிறகு, நீ எனக்கு மட்டும் தாயாக எப்படி இருக்க முடியும்? உனது இந்தச் செயலுக்காக, நான் உனக்குத் தண்டனை கொடுப்பது எனக்கு முறையல்ல. ஆதலால், 'நான், உன்னை அம்மா என்று சொல்ல மாட்டேன்' என்பதை என்னால் செய்ய முடியும். இதைத் தவிர என்னால் வேறென்னதான் செய்ய இயலும்.''

''சாட்சாத் பகவான், பிராமண உருவில் வந்து என்னிடம் பிச்சை கேட்கிறார். ஆனால் ஆசார்யர், நான் தானம் கொடுப்பதிலிருந்து என்னைத் தடுத்துக் கொண்டிருக்கிறார். ஆகவே நான், ஆசார்யரின் வார்த்தையை மதிக்கமாட்டேன்'' என்று கூறி, பலி, குருவைத் துறந்தார். பலி, குருவின் ஆணையை ஏற்காததுகூட, குருவின் நன்மைக்காகத்தான். தானம் கொடுப்பதற்குப் பலி தயாராகவே இருந்தார். அந்தச் சமயத்தில், அவர் குருவின் வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்திருந்தால், அந்த வார்த்தையின் விளைவான பாவம் குருவையே அடைந்திருக்கும். அதனால், அவர் குருவின் சாபத்தை ஏற்றுக்கொண்டார். அந்தக் குற்றத்திலிருந்தும் தீங்கிலிருந்தும் குருவைக் காப்பாற்றிவிட்டார். பலி, தானே தண்டனையை அனுபவித்தார். ஆனால், தண்டனையிலிருந்து குருவைத் தப்ப வைத்தார்! என்றால், இது குருசேவை அல்லவா!

பகவானைக் கண்களால் பார்க்கவிடாமல் கோபியர்களின் கணவன்மார்கள் தடுத்துக் கொண்டிருந்தார்கள். இதனாலேயே, கோபியர்கள் கணவன்மார்களைத் துறந்தார்கள். அவர்கள்

கணவன்மார்களின் சொற்படி நடந்திருந்தால், கணவன்மார்கள் பாவத்தின் பங்காளிகளாகியிருப்பார்கள். ஆகவே, கணவர்களின் சொல்லை மதிக்காததால், அவர்கள் கணவன்மார்களைப் பாவத்திலிருந்தே காப்பாற்றினார்கள்.

கருத்து என்னவென்றால், மனிதச் சரீரத்தைப் பயனுள்ளதாக ஆக்குவது என்பது, பரமாத்மாவை அடைவதிலேயே இருக்கிறது. ஆகவே, அந்த முயற்சியில் உதவியாளனாக இருப்பவன், நமக்கு உகந்ததைச் செய்கிறான். அதில் தடை போடுகிறவன், நமக்குத் தீங்கைச் செய்கிறான். பிரகலாதன் முதலிய எல்லோரும் பரமாத்மாவை அடைவதில் இடையூறு ஏற்படுத்தியவர்களைத் துறந்தார்கள். (தந்தை முதலியவர்களை அல்ல.) ஆகவே, அவர்களுக்கு மேன்மேலும் நலன் உண்டாயிற்று.

*வினா:– தாயின் நிலை உயர்ந்ததா? அல்லது தந்தையின் நிலை உயர்ந்ததா? மேலும், உயர்நிலைக்குக் காரணம் என்ன?*

*விடை:–* உயர்நிலை தாயுக்குத்தான். தாயின் மதிப்பு, தந்தையுடையதைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது— *'ஸஹஸ்ரம் து பித்ரூந்மாதா கெ₃ளரவேணாதிரிச்யதே'* ***(மநுஸ்ம்ருதி 2/145)***. ஸ்ரீராமன் வனவாசத்திற்காகப் புறப்பட்டபோது, அவர் அன்னையிடம் சென்று, அவரது பாதங்களில் வணங்கிக் கூறினார்— ''தாயே! வனவாசத்திற்குப் போகும்படி எனக்கு ஆணையிடப் பட்டுள்ளது.'' அதற்குத் தாயார்— ''இது தந்தையாருடைய கட்டளையே என்பதால் என்னை உயர்வாக மதித்து, நீ காட்டுக்குப் போகாதே. ஆனால், உனது சிற்றன்னையும் தந்தையுமாகச் சேர்ந்து, காட்டுக்குப் போகும்படி சொல்லியிருந்தால், † உன்னைப் பொறுத்தவரையில் காடு, நூறு அயோத்திகளுக்குச் சமமாகும்'' என்று சொன்னார்.

† தன்னிலும் அதிகமான அன்பு சிற்றன்னையிடம் காட்டவேண்டும் என்ற கௌசல்யாதேவியின் அறிவுரை, அவருடைய பரந்த உள்ளத்தைக் காட்டுகிறது. குடும்பத்தில் ஒவ்வொருவருக்குமிடையே உள்ள அன்பு கட்டுக்குலையாமல்

ஜௌ(ம்) கேவல பிது ஆயஸு தாதா ।
தௌ ஜநி ஜாஹு ஜாநி $ப_3டி_3$ மாதா ॥
ஜௌ(ம்) பிது மாது கஹேஉ $ப_3$ந ஜாநா ।
தௌ காநந ஸத அவ$த_4$ ஸமாநா ॥
**(ஸ்ரீராமசரிதமாநஸம், அயோத்யா. 56/1,2)**

தந்தை, சொத்து–செல்வம் முதலியவைகளால் மகனைப் போஷிக்கிறார். ஆனால் அன்னை, தன் சரீரத்தையே கொடுத்து மகனைப் போஷிக்கிறார். சொத்து–செல்வம் என்பது மமதையைக் குறிப்பிடும் பொருள். சரீரம் என்பது 'நான்' என்பதைக் குறிப்பது. 'என்னுடையது' என்பதைக் காட்டிலும் 'நான்' என்பது அருகில் இருக்கிறது. 'என்னுடையது' என்று சொல்லப்படும் பொருட்கள் வந்து போகும் தன்மையுடையவை. சரீரம் வேறெதையும் எதிர்பாராமல் நிலைத்திருப்பது. ஆகவே, அன்னையின் நிலை உயர்ந்ததாகவே இருக்கும்.

தாய், தன்னுடைய கன்னிப்பருவத்தைப் பாழாக்கிவிட்டார். தன்னுடைய சரீரத்தைக் கொடுத்து, தன்னுடைய பாலை ஊட்டிப் போஷித்திருக்கிறார். தாதியாக, நாவிதனாக, வண்ணானாக, தையற்காரனாக மற்றும் ஆசானாக தாயார் செயல்பட்டிருக்கிறார். அவ்வளவு ஏன்? மலமூத்திரம் கழுவித் தோட்டி வேலையைக் கூடச் செய்திருக்கிறார். அவர் செய்த வேலைகளை ஏதோ சுமையாகக் கருதிச் செய்யவில்லை. மாறாக, மிகவும் பாசத்துடனும், 'என்னுடையது' என்ற உரிமை உணர்வுடனும் ஆர்வத்துடனும் செய்திருக்கிறார் என்பது மட்டுமல்ல; பதில் உதவி பெறவேண்டும் என்ற எண்ணமும் இருந்ததில்லை. குழந்தை நோயுற்றுப் படுத்தால், தாயின் உடல்பலம் குறைகிறது. ஆகவே, உலகத்தில் அன்னைக்கு ஈடாகக் குழந்தையைப் பராமரிக்கக்கூடியவர் வேறு யார் உள்ளர்? ***'மாத்ரா ஸமம் நாஸ்தி ஶரீரபோஷணம் ।'*** ஆகவேதான்,

---

இருக்க வேண்டும் என்பதற்காகத் தாயிடம் காட்டுவதைவிட அதிக அன்பு, பிற அன்னையரிடம் காட்டவேண்டும் என்று, கௌசல்யாதேவி எல்லோருக்கும் பாடம் புகட்டியிருக்கிறார்.

அன்னையின் நிலை உயர்ந்தது. மகன் சாது–சந்நியாசியான பின், அன்னையைக் காண நேர்ந்தால், அவர் அன்னையின் எதிரே, நிலந்தோய வணங்குதல் வேண்டும் என்று அறநூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வளவு உயர்ந்த நிலை வேறு யாருக்கு ஏற்பட முடியும்!

***வினா:– தாய்–தந்தையருக்குச் சேவை செய்வதால், என்ன லாபம்?***

***விடை:–*** தாய்–தந்தையருக்குச் சேவை செய்வதால் இகலோக–பரலோக வாழ்க்கை செம்மைப்படுகிறது. பகவான் மகிழ்ச்சி அடைகிறார். தாய்–தந்தையருக்குச் சேவை செய்யாதவனிடம் பகவான் நம்பிக்கை வைப்பதில்லை. ''தாய்–தந்தையருக்குப் பணிவிடை, பக்தி பூணாத இவன், என்னிடமா பக்தி செலுத்தப் போகிறான்!''

புண்டரீகன், உடலாலும் உள்ளத்தாலும் ஆழ்ந்த ஈடுபாட்டுடனும் தாய்–தந்தையருக்குச் சேவை செய்தார். அவருடைய சேவையால் மகிழ்ந்த பகவான், அழைப்பு இல்லாமலே புண்டரீகன் வீட்டுக்கு வந்து கூறினார்— ''புண்டரீகனே! நீ உன் தாய்–தந்தையரிடம் காட்டும் பக்தியினால் மனம் மகிழ்ந்து, நானாகவே உனக்குத் தரிசனம் கொடுப்பதற்காக, உன்னிடம் வந்திருக்கிறேன்.'' அந்தச் சமயத்தில் புண்டரீகன், தாய்–தந்தையரின் பணிவிடையில் ஆழ்ந்திருந்தார். அதனால், அவர் பகவானிடம் கூறினார்— ''எந்தச் சேவை, அதாவது தாய்–தந்தையருக்குச் செய்யும் சேவை காரணமாகத் தாங்கள் இங்கே எனக்குத் தரிசனம் கொடுப்பதற்காக வந்திருக்கிறீர்களோ, அந்தச் சேவையை நான் எப்படி விடுவேன்? இப்போது நான், தாய்–தந்தையருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறேன். அது முடிந்த பின்னர்தான், நான் தங்களைத் தரிசனம் செய்ய முடியும். அதுவரை தாங்கள் காத்திருக்க விரும்பினால், இந்தச் செங்கற்களின் மேல் நின்று கொள்ளுங்கள்.'' இப்படிச் சொல்லிக் கொண்டே புண்டரீகன், இரண்டு செங்கற்களைத் தன் முதுகுக்குப் பின்னால் விட்டெறிந்தார். பகவான்,

அவற்றின் மேல் நின்று கொண்டார். செங்கற்களின்மேல் நின்ற காரணத்தால், பகவானின் பெயர் 'விட்டல்' என்றாயிற்று. பகவானுடைய இந்தக் காட்சியைக் காண விரும்பினால், (மகாராஷ்டிரத்திலுள்ள) பண்டரீபுரம் சென்று காணலாம். இதுபோலவே, மகாபாரதத்தில், ஊமைச் சண்டாளியின் கதை வருகிறது. ஊமைச் சண்டாளிக்குத் தன் தாய்–தந்தையரிடமிருந்த பக்தியைப் பார்த்து, பகவானே அவள் வீட்டில் வசித்து வந்தார்! கருத்து என்னவென்றால், தாய்–தந்தையருக்குச் செய்யப்படும் சேவையால், மண்ணுலகத்திலும் மேலுலகத்திலும் எல்லாவிதமான நன்மைகளும் உண்டாகின்றன.

***வினா:– மனிதர்கள், தாய்–தந்தையருக்கு ஆற்றும் சேவைக்கு இவ்வளவு பெருமை இருக்கும்போது, அந்தச் சேவையை விட்டுவிட்டு, ஏன் சாது–சந்நியாசிகளாகப் போகிறார்கள்?***

***விடை:–*** ஒருவன் இறந்துவிடுகிறான் என்றால், அவன் தாய்–தந்தையருக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளை விட்டுவிட்டுத்தான் இறக்கிறான். அதனால், அவனுக்குப் பாவம் ஏற்படுவதில்லை. அப்படியே யாருக்கு உலகத்திலிருந்து உண்மையான வைராக்கியம் ஏற்படுகிறதோ, அவனுக்குப் பாவம் உண்டாவதில்லை. இவ்விதமே எவன் எவ்வகையிலும் பகவானையே புகலடைந்து விடுகிறானோ, அவனுக்கும் எவ்விதப் பாவமும் உண்டாவதில்லை. ஏனென்றால், யாரிடமும் பட்ட கடன்பாக்கி, அவனுக்குக் கிடையாது.

***தே$_3$வர்ஷிபூ$_4$தாப்தந்ருணாம் பித்ரூணாம்***
***ந கிங்கரோ நாயம்ருணீ ச ராஜந் ।***
***ஸர்வாத்மநா ய: ஶரணம் ஶரண்யம்***
***க$_3$தோ முகுந்த$_3$ம் பரிஹ்ருத்ய கர்தம் ॥***

***(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 11/5/41)***

''அரசே! எவனொருவன் எல்லா விருப்பங்களையும் விட்டு, புகலடைந்தவர்களிடம் அன்பு கொண்டவனான பகவானின் திருப்பாதங்களை முழுமையாகச் சென்று அடைகிறானோ, அவன் தேவர், முனிவர், பிராணிகள், குடும்பம் நடத்துவோர்,

பிதிரர் கூட்டம் – இவர்களில் எவருக்கும் கடன்பட்டவனாகவோ, ஏவலாளனாகவோ இருக்கமாட்டான்.''

கருத்து என்னவென்றால், எவன் மனிதப்பிறவியின் உண்மையான லட்சியப் பொருளான பகவானிடம் ஈடுபடுகிறானோ, அவன் தாய்–தந்தையரின் சேவை, குடும்பம் ஆகியவற்றைத் துறந்தாலும், அவனைப் பாவம் ஒட்டுவதில்லை.

**வினா:– இரண்டு–மூன்று மகன்கள் இருந்து, அவர்களில் ஒருவன் சாது–சந்நியாசியாகப் போய்விட்டால், அது ஒன்றும் பெரிய விஷயமல்ல. ஆனால், ஒருவருக்கு ஒரே மகன்தான் இருக்கிறான். அவனும் சாது–சந்நியாசியாகப் போனால், அவனுடைய தாய்–தந்தையர் யாரை அண்டிப் பிழைப்பார்கள்?**

**விடை:–** தாய்–தந்தையர் இருக்கும்வரையில் அந்த மகன், அவர்களுக்குச் சேவை செய்து கொண்டிருக்க வேண்டும்; அவர்களை விட்டுவிடக் கூடாது. ஏனென்றால், பகவத் பிராப்திக்குச் சாதுவாகப் போவது ஒரு காரணமல்ல. மாறாக, உலக வாழ்விலிருந்து வைராக்கியமும், பகவானிடம் பிரேமையும்தான் காரணம். ஆதலால், அவன் தாய்–தந்தையருக்குச் சேவை செய்து கொண்டே, வழிபாடு–தியானங்களைச் செய்தால், அவனுக்கு பகவத் பிராப்தியில் எவ்வித இடையூறும் ஏற்படாது. மாறாக, தாய்–தந்தையரின் மகிழ்ச்சியினால் பகவத் பிராப்தியில் உதவிதான் கிடைக்கும். கருத்து என்னவென்றால், தாய்–தந்தையரிடம் பட்டுள்ள கடனை அடைக்காமல், அவர்களைத் துறக்கலாகாது. ஆனால், தீவிர வைராக்கியம் ஏற்பட்டு, பகவானின் திருவடிகளில் தனித்த அன்பு ஏற்பட்டு, அந்த நிலையில் தாய்–தந்தையரின் சேவை விடப்பட்டால், அவனுக்குப் பாவம் உண்டாகாது.

எவன், வீட்டில் உட்கார்ந்து கொண்டு, தாய்–தந்தையருக்குச் சேவை செய்யாமல், தன்னுடைய மனைவி–மக்களை வளர்ப்பதில் மட்டுமே குறியாக இருக்கிறானோ, அவனுக்குப் பாவம் உண்டாகும். அப்படியே எவன், தாய்–

தந்தையரையும், வீடு–மக்களையும் விட்டுச் சென்று, சாதுவாகி, குடில்–ஆசிரமம் ஏற்படுத்திக் கொண்டு, பொருள் சேர்த்துக் கொண்டு, சிஷ்யன்–சிஷ்யைகளைச் சேர்த்துக் கொண்டு, சுக–சௌக்கியத்தோடு இருக்கிறானோ, அவனைத் தாய்–தந்தையருக்குப் பணிவிடை செய்யாத பாவம் ஒட்டிக் கொள்ளத்தான் செய்யும்.

***வினா:– ஒருவன் சாது–சந்நியாசியாகிச் செல்வம் சேர்க்கிறான்; அச்செல்வத்தைத் தாய்–தந்தையர், மனைவி–மக்களுக்கு அனுப்புகிறான்; அவர்களை வளர்த்துப் பராமரிக்கிறான் என்றால், அவனுக்குப் பாவம் ஏற்படுமா?***

*விடை:–* சாது–சந்நியாசியான பின்னர், தாய்–தந்தையர், மனைவி–மக்கள் ஆகியோருக்குப் பொருள் அனுப்புகிறவர்கள் பாவத்தில் பங்கேற்பவர்களே. அத்துடன் அவரால் கொடுக்கப்படும் பொருளைக் கொண்டு தங்கள் வாழ்க்கையை நடத்துகிறவர்களும் பாவத்தில் பங்கு கொள்கிறார்கள். ஏனெனில், அவ்விருவருமே அறநூல் ஆணைக்கு எதிரான காரியம் செய்கிறார்கள். அவர்கள் குடும்ப வாழ்வில் இருந்து கொண்டேயல்லவா, தாய்–தந்தையருக்குச் சேவை செய்ய வேண்டும்? ஆனால், அவர்கள் சாஸ்திர விரோதமான காரியம் செய்து, சந்நியாச ஆசிரமத்தையே மாசுபடுத்துகின்றனர் என்பதால், அவர்களுக்குப் பாவம் ஏற்படவே செய்யும். அவர்கள் பாவத்திலிருந்து தப்ப முடியாது.

***வினா:– வீட்டில் தாயாரைப் பராமரிப்பதற்கும் பார்த்துக் கொள்வதற்கும் வேறு யாரும் இல்லாத நிலையில், சாது–சந்நியாசியாகிவிட்ட மகன், தாயைப் பராமரிக்கலாமா, கூடாதா?***

*விடை:–* அம்மாவுக்கு வேறு ஓர் ஆதரவும் இல்லாவிட்டால், சாது ஆகிவிட்டாலும்கூட, அவன் தாயைப் பராமரிக்க வேண்டும்; பராமரிக்கவே வேண்டும். ஆதரவற்ற நிலையில் உள்ள பிற பிராணிகளுக்குக்கூடச் சேவை செய்யவேண்டும் என்னும்போது, சரீரத்தைக் கொடுத்த தாயைப் பற்றிச்

சொல்லவா வேண்டும்? அவர் ஆதரவற்று இருந்தால், அவருக்குச் சேவை செய்வதில் எவ்விதக் குற்றமும் இல்லை.

*வினா:– மகள், கணவன் வீட்டுக்குப் போய்விடுகிறாள். அப்புறம் அவள் தாய்–தந்தையருக்கு எப்படிச் சேவை செய்ய முடியும்? சேவை செய்யாவிட்டால், தாய்–தந்தையரிடம் பட்டுள்ள கடன் சுமை எப்படி நீங்கும்?*

*விடை:–* ஒருவருக்கு அவர் மனமார விரும்பியும்கூட அடைக்க முடியாத அளவுக்குக் கடன் ஏறிவிட்டது என்றால், அவர் கடன் கொடுத்தவரிடம் சென்று, ''நான், என் வீடு, நிலம் ஆகிய எல்லாவற்றையும் தங்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். இப்போது நீங்கள் இவைகளை உங்கள் விருப்பம்போல் பயன்படுத்திக் கொள்ளலாம்'' என்று சொல்ல வேண்டும். இப்படிச் சொல்வதால் அவன்மேல் கடன் சுமை நிற்பதில்லை; நீங்கிவிடுகிறது. இவ்விதமே மகள், குழந்தைப் பருவத்திலிருந்தே தாய்–தந்தையருக்கு அர்ப்பணமாகி இருக்கிறாள். அவள், தன் மனத்தில் எதையும் வைத்துக் கொள்வதில்லை. தாய்–தந்தையர், எங்கே அவளைத் திருமணம் செய்து கொடுக்கிறார்களோ, அவள் மகிழ்ச்சியோடு அங்கேதான் செல்கிறாள். அவள், தன் கோத்திரத்தையும் கணவனின் கோத்திரத்தோடு இணைத்து விடுகிறாள். இவ்வளவு பெரிய தியாகம் செய்திருக்கிற அவள்மேல், கடன் எப்படி இருக்க முடியும்? இருக்கவே முடியாது.

*வினா:– தாய்–தந்தையருக்கு ஆதரவாக யாரும் இல்லை என்ற நிலையில், திருமணமாகியுள்ள மகள், தாய்–தந்தையரைப் பராமரிக்கலாமா, கூடாதா?*

*விடை:–* துணையற்ற தாய்–தந்தையருக்கு அவள் சேவை செய்யலாம். திருமணமான மகளுக்குக் குழந்தை இருந்தால், தாய்–தந்தையர், அவளுடைய வீட்டில் உணவு ஏற்கலாம்; அவளுடைய வீட்டில் வசிக்கலாம். ஆனால், அவளுக்குக் குழந்தை இல்லையென்றால், அவளது வீட்டில் உணவு ஏற்க, தாய்–தந்தையருக்கு உரிமை இல்லை.

தாய்–தந்தையர், கன்னிகையைத் தானம் செய்து கொடுத்திருக்கிறார்கள் என்பதால், அவர்கள் அந்த வீட்டில் உணவு ஏற்கலாகாது. ஏனெனில், தானம் கொடுத்தவருக்கு, தானம் கொடுக்கப்பட்ட பொருளின்மீது உரிமை கிடையாது. ஆனால், பெண்ணுக்குக் குழந்தை பிறந்துவிட்டால், தாய்–தந்தையர் பெண்ணின் வீட்டில் உணவு கொள்ளலாம். காரணம் என்னவென்றால், மகளின் கணவன் (மாப்பிள்ளை), தன்னுடைய பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறவே, வேறொருவர் பெண்ணை ஏற்றுக் கொண்டார். அவள் மூலம் குழந்தை உண்டானதும், அவர் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுகிறார். ஆகவே, குழந்தை பிறந்ததும், தாய்–தந்தையருக்கு மகளிடம் உரிமை ஏற்பட்டு விடுகிறது. அதே கோத்திரத்தைச் சேர்ந்தவனாக இல்லாவிட்டாலும், பெண் வயிற்றுப்பேரன், தன்னுடைய தாய்வழிப் பாட்டனார்–பாட்டிக்குச் சிராத்த–தர்ப்பணம் செய்ய முடியும்.

தாய்–தந்தையருக்குத் துணை இல்லாத நிலையில், அவர்களுக்குச் சேவை செய்வதற்கு யாருமில்லாதபோது, அவர்களுக்குச் சேவை செய்யும் பொறுப்பு மகளின் மேல்தான் இருக்கிறது. ஆகவே, தனக்குக் குழந்தை உண்டாகாவிட்டாலும், திருமணமான பெண், அவர்களுக்கு சேவை செய்யத்தான் வேண்டும். மற்றொரு விஷயம்— இப்போதுள்ள சட்டத்தில் தந்தையின் சொத்துக்களில் மகனுக்கும் மகளுக்கும் சமமான உரிமை இருப்பது ஏற்கப்பட்டுள்ளது. ஆகவே, இன்றைய சட்டநோக்கில் பார்த்தாலும், எப்பொழுது மகளுக்குச் செல்வத்தைக் கொடுக்கும் உரிமை ஏற்பட்டுவிட்டதோ, அதேபோல் அவளிடமிருந்து சேவையை ஏற்றுக்கொள்ளும் உரிமையும் தாய்–தந்தையருக்கு உண்டுதானே!



# 5. மகளிர் சம்பந்தமான விஷயங்கள்

***வினா:–*** ***கன்னிப் பெண்கள் சுயம்வரம் மூலமாக (தன் விருப்பப்படி)க் கணவனைத் தேர்ந்தெடுக்கலாமா?***

***விடை:–*** அறநூல்களில் சுயம்வரம் பற்றிய குறிப்பு வருகிறது. ஆனால், தாமே தம் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள் துன்பத்தையே அனுபவித்திருக்கிறார்கள். சீதை, திரௌபதி, தமயந்தி முதலியோர் சுயம்வரத்தின் மூலம் கணவனை அடைந்தார்கள் என்றாலும், அநேகமாக துன்பமே அடைந்தார்கள். இப்போதெல்லாம் தன் கணவனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் பெண்கள், தங்கள் மனம்போல மணந்து கொள்கிறவர்கள், என்ன சுகத்தைக் காண்கிறார்கள்? துயரத்தின் மேல் துயரம் அடைகிறார்கள்; அமைதியில்லாமல் இருக்கிறார்கள்.

தன் கணவனைத் தானே தேர்வு செய்து கொள்ளும் பெண் விஷயத்தில், அதன் பொறுப்பு அவள் பேரிலேயே விழுகிறது. பெண்ணின் நலனை நாடுபவர் தந்தை. அப்படி நலனை விரும்புவராக இருப்பதால்தான் மணமகனைத் தேடி அலைகிறார்; தேடித் தொடர்பு கொள்கிறார். அதனால், இந்த உறவின் முழுப் பொறுப்பும் தந்தையிடமே உள்ளது; பெண்ணிடம் அல்ல. தந்தை மூலமாகக் கணவனைப் பெறும் பெண், ஏதோ ஒரு தவறு செய்தால், அது மன்னிக்கப்படும். ஆனால், தானே கணவனைத் தேடிக்கொண்ட பெண் தவறிழைத்தால், அது மன்னிக்கப்பட மாட்டாது. தாய்–தந்தையருக்கு செய்யும் பணிவிடைகளில் மகன் சிறிது குறை வைத்தாலும், அது ஒரு பெரிய குற்றமாகாது. ஏனென்றால் மகன் அவர்களிடமிருந்தே தோன்றியவன்; தானாக விரும்பிப்பெற்ற உறவல்ல. ஆனால், தத்துப்போன பிள்ளை தவறிழைத்தால், அதற்கான தண்டனையை அனுபவிக்கவே நேரும். ஏனென்றால், அவன் அறிவுபூர்வமாக உணர்ந்து சேர்த்துக் கொள்ளப்பட்டவன். ஒரு வீட்டில் வேலை செய்கிற

வேலைக்காரன், வேலையில் பிழை செய்தால் அவனுக்கு மன்னிப்புக் கிடையாது. ஏனென்றால், அவன் தானாகவே வேலை தேடி வந்து சேர்ந்தவன். இரக்கமுள்ள யஜமானன், அவனை மன்னிக்கலாம். ஆனால், அவன் மன்னிக்கத் தக்கவனல்லன். ஒருவரைக் குருவாக ஏற்றுக்கொண்டபின், அவருடைய ஆணைக்குப் பணிந்து நடப்பது, அவனுடைய கடமையாகிறது. ஆனால் அவன், குருவின் ஆணைக்குப் பணிந்து நடக்காவிட்டால், குருவை மதிக்காவிட்டால், இழித்துரைத்தால், அவன் கடுமையான தண்டனையை அனுபவிக்க நேரிடும். அவனை பகவான்கூட மன்னிக்க மாட்டார். கடவுள் கோபம் கொண்டால், குரு மன்னித்து விடுவார். ஆனால், குரு கோபம் கொண்டால், கடவுளால்கூட மன்னிக்க முடியாது. ஆதலால், கணவனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் பெண்களுக்கு அதிகமாக பொறுப்பு இருக்கிறது.

***வினா:– கன்னிகை திருமணம் செய்து கொள்ளாமல் ஆன்மிகப் பயிற்சி, இறைவழிபாட்டிலேயே வாழ்க்கையைக் கழிக்க விரும்புவது சரிதானா?***

***விடை:–*** திருமணம் செய்து கொள்ளாமல் இருப்பது பெண்களுக்கு உகந்ததல்ல. ஏனெனில், அவள் தனியாகவே இருந்து தன் வாழ்க்கையை நடத்திக் கொள்ளலாம் என்பது மிகவும் சிரமம். அதாவது, திருமணம் செய்து கொள்ளாமல் இருப்பதால் வாழ்க்கை நடத்துவதில் சிரமங்கள் நேரும். தாய்–தந்தையர் இருக்கும்வரையில் எல்லாம் சரியாக இருக்கும். தாய்–தந்தையர் இல்லாதபோது, அண்ணன்–தம்பிகள் (தங்கள் மனைவியின் வசப்பட்டு) சகோதரியை மதிப்பதில்லை. மாறாக, அவளை வெறுக்கிறார்கள்; இழிவான நோக்கோடு பார்க்கிறார்கள். சகோதரர்களின் மனைவிமார்களும் அவளை வெறுப்புடனே பார்க்கிறார்கள். இதனால், கன்னிகையின் மனத்தில், அடிமை என்ற எண்ணம் ஏற்படுகிறது. அதனால், திருமணம் செய்து கொள்வதே நல்லது.

''நாம் கணவன்–மனைவி என்று உடலுறவு வைத்துக் கொள்ளாமல் ஆன்மிக சாதனை, கடவுள் வழிபாட்டுக்காகவே இணைந்து வாழ்வோம்'' என்று, திருமணத்துக்கு முன்பே உறுதி எடுத்துக்கொண்டு வாழும் சிலரை நாம் பார்த்திருக்கிறோம். அவர்கள், அந்த உறுதியைக் கடைப்பிடித்தும் வருகிறார்கள். ஆன்மிக சாதனை, தெய்வ வழிபாட்டுக்காகவே திருமணம் என்ற உறவு என்றிருக்கக் கூடிய ஆண்–பெண்களைக் காண்பது, இக்காலத்தில் அரிதே ஆனாலும்கூட, அப்படிப்பட்டவர்கள் தென்படுவது ஒன்றும் நிகழக் கூடாததல்ல.

மீராபாயைப் போல, குழந்தைப் பருவத்திலிருந்தே சங்கீர்த்தனம்–ஸ்மரணம் ஆகியவற்றில் மூழ்கிப் போவது என்பது வேறு விஷயம். ஆனால், இது விதிமுறை அல்ல; உள்ளுணர்வு. இவ்வுணர்விலும் சிரமம் வரத்தான் செய்கிறது. மீராபாயின் வாழ்க்கையிலும் நிறையத் துன்பங்கள் வரத்தான் செய்தன. ஆனால், பகவானிடம் உறுதியான நம்பிக்கை என்ற சக்தியைக் கொண்டு, எல்லாத் துன்பங்களையும் கடந்து சென்றாள். இப்படிப்பட்ட உறுதியான நம்பிக்கையுடையவர்கள் மிகவும் குறைவாகவே காணப்படுகிறார்கள். இவ்வளவு பலமான நம்பிக்கை யாருக்கு இருக்கிறதோ, அவரைப் பொறுத்தமட்டில் திருமணம், திருமணமின்மை என்ற நியதி ஏதும் இல்லை. பகவானிடம் உறுதியான ஆர்வம் – நம்பிக்கை உடைய மனிதர் எப்படி இருந்தாலும், அவர் உயர்ந்தவரே ஆவார் என்பதுதான் இதன் உட்கருத்து.

***வினா:– பெண், சாது–சந்நியாசியாக மாறுவது உகந்ததுதானா?***

***விடை:–*** உலக வாழ்க்கையில் பற்றுதல் நீங்கி, வீடு முதலியவற்றைத் துறந்து, பாவம் நீங்கி, சங்கீர்த்தனம்–ஸ்மரணம் செய்து கொண்டே வாழ்க்கையைக் கழிக்கும் உரிமை ஆணுக்கு உண்டு. ஆனால், பெண்களுக்கு இப்படிப்பட்ட ஒரு நியதியை நாம் எங்கேயும் காணவில்லை.

ஆகவே, சாது–சந்நியாசியாக ஆவது பெண்களுக்கு உகந்ததல்ல. அவர்கள் வீட்டிலேயே இருந்துகொண்டு, தங்கள் கடமையை ஆற்றவேண்டும். அவள் குடும்பத்தில் தன்னல மறுப்புடனும் கட்டுப்பாட்டுடனும் வாழவேண்டும். இதில்தான் அவளுடைய பெருமை இருக்கிறது.

உண்மையில் தியாக–வைராக்கியம் எவ்வளவு உயர்நெறிக் கொள்கையோ, அவ்வளவு சாது–சந்நியாசி ஆவதில் இல்லை. எவளுடைய மனத்தில் பொருட்களுக்கு அடிமையாயிருக்கும் தன்மை இல்லையோ, அவள் வீட்டிலேயே இருந்தாலும் சாத்விதான், சந்நியாசிதான்.

***வினா:– பதிவிரதை, சாத்வீ, சதீ என்று யாரைச் சொல்கிறார்கள்?***

***விடை:–*** சொல் அகராதிப்படி பதிவிரதை, சாத்வீ, சதீ – இம்மூன்றும் ஒரே பொருளுடையன என்றாலும், மூன்றினிடையே வேற்றுமை காண முற்படும்போது, கணவனுடன் கூடவே இருந்தும் தன் கடமைகளில் உறுதியாக இருப்பவள் 'பதிவிரதை'. கணவன் இல்லாதவள் தன்னுடைய கடமைகளில், தியாகத்தில் திடமாக இருப்பவள் 'சாத்வீ'. எவள் சத்தியத்தைக் கடைப்பிடிக்கிறாளோ, கணவனோடு பலமாகத் தன்னைப் பிணைத்துக் கொண்டிருக்கிறாளோ, கணவன் இறந்தால் அவனோடு உடன்கட்டை ஏறுகிறாளோ, அவள் 'சதீ'.

***வினா:– உடன்கட்டை ஏறும் வழக்கம் சரியானதா, இல்லை தவறானதா?***

***விடை:–*** உடன்கட்டை ஏறுதல் என்பது ஒரு வழக்கம் அல்ல. கணவனோடுகூட எரிந்து போவது சதீ ஆகிவிடாது. எவளுடைய மனதில் சத்யம் வந்துவிடுகிறதோ, பேரார்வம் வந்துவிடுகிறதோ, அவள் நெருப்பில்லாமலே எரிந்து போகிறாள். அவள் எரிந்து போவதில் சிறிதளவு துன்பமும் உண்டாவதில்லை. 'இவள் இப்படித்தான் செய்யவேண்டும்'

என்று ஏதும் வழக்கம் இல்லை. மாறாக, இது அவளுடைய சத்தியமாக, தர்மமாக, அறநூல் கூற்றுக்களில் உள்ள நம்பிக்கையாக இருக்கிறது.

ஹர்தோய் மாவட்டத்தில் இக்னோரா என்று ஒரு கிராமம். அங்கே ஒரு பெண் தன் தாய்வழிப் பாட்டனார் வீட்டில் இருந்தாள். கணவன் நோய்வாய்ப்பட்டு இறந்து போனான். அவளுக்குக் கணவனுடைய மரணச்செய்தி கிடைத்தது. ''சதி சுலோசனாவுக்கு அவளுடைய கணவனின் தலை கிடைத்திராவிட்டால், அவள் என்ன செய்திருப்பாள்?'' என்று அந்த பெண், தன் மாமாவிடம் கேட்டாள். ''எனக்கு என்ன தெரியும்?'' என்று கூறிவிட்டார், மாமா. ''மாமா நான் உடன்கட்டை ஏறப் போகிறேன்'' என்றாள் அவள். ''அப்படிச் செய்யாதே'' என்றார் மாமா. அவள் சொன்னாள்— ''நான் செய்யவில்லை; அது தானாக நிகழ்கிறது.'' அவள் விளக்கை ஏற்றினாள். அதில் தன் கைவிரல்களை வைத்தாள். விரல் ஊதுபத்தியைப்போல எரியத் தொடங்கியது. ''நான் உடன்கட்டை ஏறுவதற்கு அனுமதி கொடுக்கிறீர்களா, இல்லையா? இல்லாவிட்டால் உங்களுடைய இந்த வீடு முழுவதும் சாம்பலாகிவிடும்'' என்று மாமாவிடம் சொன்னாள். ''சரி, உன் மனதுக்குத் தோன்றியபடியே செய்'' என்று சொன்னார் மாமா. அவள் எரிந்து கொண்டிருந்த விரலை சுவரில் தேய்த்து அணைத்தாள். வீட்டுக்கு வெளியே சென்று, அரச மரத்தின் அடியில் நின்றாள். ''எனக்கு விறகு கொடுங்கள்'' என்று மாமாவிடம் கேட்டாள். ''விறகும் கொடுக்க மாட்டேன்; நெருப்பும் கொடுக்க மாட்டேன்'' என்று சொல்லிவிட்டார், மாமா. கிராமத்து மக்கள் அங்கே கூடிவிட்டார்கள். கைகளைக் கூப்பிக் கொண்டு அவள் சூரிய பகவானிடம் வேண்டினாள்— ''கடவுளே! நீங்கள் நெருப்புத் தாருங்கள்.'' இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது அங்கு நின்றபடியே அவள் தானாகவே எரிந்து போனாள். அந்த நெருப்பினால் அரச மரத்தின் இலைகள் எரிந்தன. இவை

எல்லாவற்றையும் கிராம மக்கள் தம் கண்ணாலே கண்டார்கள். அங்கேயுள்ள இஸ்லாமியரைக் கேட்டபோது, ''எங்கள் கண்முன்னாலே இது நிகழ்ந்தது'' என்று அவர்கள் சொன்னார்கள். கரபாத்ரீ மகாராஜ் அங்கே சென்றார். சுவரில், எங்கே அந்தப் பெண் தன் எரியும் விரலைத் தேய்த்து அணைத்தாளோ, அந்த கரிக்கோட்டைப் பார்த்தார். அரச மரத்தின் எரிந்துபோன இலைகளையும் பார்த்தார்.

இந்த சதீ என்பது ஒரு வழக்கம் அல்ல என்பதுதான் உட்கருத்து. இது பெண்ணின் சொந்த, தார்மிகப் பற்று. இது விஷயமாக பிரபுதத்த பிரம்மசாரி அவர்கள், *'சதீ தர்மம் இந்து தர்மத்தின் முதுகெலும்பு'*† என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதைப் படிக்க வேண்டும்.

***வினா:- பதிவிரதையின் எண்ணங்களும் நடவடிக்கையும் எப்படி இருக்கும்?***

*விடை:-* அவளிடம் நல்லற எண்ணங்கள் வலிமை பெற்றிருக்கும். அதனால் உடலாலும் உள்ளத்தாலும் கணவனுக்குப் பணிவிடை செய்கிறாள். கணவன் உள்ளத்தோடு தன் உள்ளத்தை இணைத்துவிடுகிறாள். தனக்கு என்று எதுவும் வைத்துக் கொள்வதில்லை. அவளுடைய மனம் கணவனிடமே லயித்து நிற்கிறது. அவளுடைய இத்தகைய பாதிவிரத்யமே அவளைக் காப்பாற்றுகிறது.

பொதுவாக, போன ஜன்மத்தில் கணவனாக இருந்தவனிடமே பதிவிரதைக்குத் தொடர்பு உண்டாகிறது. சில இடங்களில் பெண்ணின் குழந்தைப் பருவத்திலிருந்தே அவளுக்கு நல்ல கல்வி, நல்ல கூட்டுறவு கிடைப்பதன் மூலம் அவளுடைய உள்ளுணர்ச்சிகள் மேன்மையடைந்து, அவளுக்குத் திருமணம் ஆனதும் பதிவிரதையாகத் திகழ்கிறாள்.

---

† இந்தப் புத்தகம் கிடைக்குமிடம்: ஸங்கீர்த்தன் பவன், தார்மிக டிரஸ்ட், பிரதிஷ்டான்பூர் (ஜூஸீ), அலஹாபாத்.

***வினா:– பதிவிரதையை எவ்வாறு கண்டு அறிவது?***

***விடை:–*** பதிவிரதையின் வீட்டில் அமைதி நிலவும். எல்லோரும் தத்தம் கடமையைச் செய்பவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய குழந்தைகளும் மேன்மக்களாக, தாய்–தந்தையரிடம் பேரன்பு கொண்டவர்களாக இருப்பார்கள். அண்டை வீட்டில் இருப்போர் மற்றும் அந்தப் பகுதியில் இருப்போர் மீது இவர்களுடைய நல்லுணர்வுகள் பதியும்.

பதிவிரதையைக் காண்பவர்களுடைய கெட்ட எண்ணங்கள் அழிந்து போகும். ஆனால், இந்த நியதி எல்லா இடத்திலும் ஒத்துவராது. ஏனெனில், பதிவிரதையைக் கண்டவுடன் நம் அந்தரங்கத்தில் நல்ல எண்ணங்களே விழித்தெழுகின்றன. எவனிடம் நல்ல உணர்வுகள், நல்ல ஸம்ஸ்காரம் இல்லையோ, அவனிடம் பதிவிரதையின் தரிசனத்தால் ஏற்படும் நல்விளைவு குறைவாகவே இருக்கும். ஒரு வேடன், தமயந்தியை மலைப்பாம்பின் பிடியிலிருந்து விடுவித்தான். ஆனால், அவள் அழகைக் கண்டு மோகித்தான். அவன் நெஞ்சில் தீய எண்ணம் தோன்றியது. தமயந்தியின் சாபத்தால் அவன் அங்கேயே சாம்பலாகிப் போனான். யுதிஷ்டிரர் பெரிய தர்மாத்மா; சாத்வீகர். ஆனால், துரியோதனனிடம் அவரது தாக்கம் ஏற்படவில்லை.

***வினா:– இன்றைய நிலையில், பதிவிரதா தர்மத்தைக் கடைப்பிடிக்க முடியுமா, என்ன?***

***விடை:–*** பதிவிரதா தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்கு இந்தக் காலம் ஓர் இடைஞ்சல் இல்லை. தன்னுடைய கடமையைக் கடைப்பிடிப்பதற்கு எல்லோருக்கும் எப்போதும் தன்னுரிமை உண்டு. தர்மத்திற்கு எதிரான செயல்களைச் செய்யும் போதுதான் சாஸ்திரம், அறம், கௌரவம் ஆகியவை தடங்கல்களாக இருக்கின்றன.

***வினா:– கணவன், மனைவியைக் கைவிட்டு விடலாமா?***

***விடை:–*** மனைவி நல்லவளாக இருக்கிறாள். நன்னடத்தை உடையவளாக இருக்கிறாள். ஆனால், கறுப்புநிறம்; அம்மாவோடு

ஒத்துப் போவதில்லை. ஒருபோதும் அம்மா சொல்வதைக் கேட்பதில்லை. ''இவளை விட்டுவிடு'' என்று அம்மா சொல்கிறார். இப்படிப்பட்ட சூழ்நிலையில் மனைவியைக் கைவிடுபவன் பெரிய பாவத்திற்கு ஆளாகிறான்; பெரிய அநியாயம் செய்கிறான். அதனால் கொடுமையான நரகத்திற்குப் போவான். இக்கால ஆண்கள், மனைவியிடம் குற்றம் கண்டு அவளைக் கைவிடுகிறார்கள். அவர்கள் தம்மளவில் எவ்வளவு பரிசுத்தமானவர்கள்? ஆகவே, மனைவியை எப்பொழுதும் கைவிடலாகாது.

***வினா:– மனைவி, கெட்ட நடத்தையுள்ளவளாக, கற்பு தவறியவளாக இருந்தால், அவளை விலக்கிவிடலாமா, கூடாதா?***

*விடை:–* இன்றைய நிலையில் கூடுமானவரை அம்மாதிரி மனைவியைத் துறந்துவிடக் கூடாதுதான். தன்னால் இயன்ற அளவுக்கு அவள் மீது ஆதிக்கம் செலுத்த வேண்டும். அவளை நல்வழிப்படுத்துவதற்கான முயற்சிகளைச் செய்ய வேண்டும். அவளுக்கு ஏதேனும் தண்டனை கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்றால், அவளுடன் பேசாமல் இரு. அவள் கையால் தயாரித்த உணவையும் சாப்பிடாதே.

***வினா:– கணவனின் புண்ணியத்தில் பாதி மனைவிக்கும், மனைவியின் பாவத்தில் பாதி கணவனுக்கும் சேருகிறது. இது ஏன்?***

*விடை:–* தன்னுடைய தாய்–தந்தையர், அண்ணன்–அண்ணி ஆகிய எல்லோரையும், தன் வீடு முழுவதையும் தியாகம் செய்துவிட்டு மனைவியாக வந்திருக்கிறாள். தியாகத்தினால் புண்ணியம் கிடைக்கிறது. அவள், தன்னுடைய வம்சாவளியையும் துறந்து, கணவனின் நெஞ்சத்தோடு தன் நெஞ்சைப் பிணைத்திருக்கிறாள். அதனால் அவள் புண்ணியத்தில் பங்கு பெறுகிறாள். கணவன், சந்தியா–காயத்ரீ செய்வதால் உண்டாகும் புண்ணியப் பலனில் அரைப்பங்கு

அவளுக்குக் கிடைக்கிறது. ஆகவே, கணவனுக்கு இரு முப்புரிகள் உள்ளன. ஒன்று தனக்காக; மற்றது மனைவிக்காக.

குழந்தைப் பருவத்தில் பெண்களுக்குக் கல்வி கற்பிப்பது தாய்–தந்தையர், சகோதரர் ஆகியோரின் பொறுப்பு. திருமணம் ஆனவுடன் போதனை அளிக்கும் பொறுப்பு கணவனுடையது. கணவனிடமிருந்து நல்ல போதனைகள் கிடைக்காததால், மனைவி பாவம் செய்தால் அதில் அரைப்பங்கு கணவனுக்குச் சேர்கிறது.

கணவன், மனைவிக்கு நல்ல புத்திமதி சொல்கிறான். ஆனால், அவள் கணவனின் சொற்களை மதிப்பதில்லை. பாவம் செய்கிறாள் என்றால், அவளுடைய பாவத்தில் பாதி கணவனை அடையாது. ஏனென்றால், அவள் தன் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டுவிட்டாள். எந்தப் பெண், கணவன் சொற்படி நடக்கிறாளோ, கணவனுடைய மேலாண்மையில் இருக்கிறாளோ, அவளே கணவனின் புண்ணியத்தில் பங்குக்கு உரியவள். எவள் கணவனுடைய சொல்லுக்கு ஏற்ப நடக்கவில்லையோ, அவள் கணவனின் புண்ணியத்தில் பங்காளி ஆகமுடியாது.

***வினா:– வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு பெண்ணை வலியப் பற்றிக்கொண்டு சென்றால், அந்தப் பெண்ணை என்ன செய்யவேண்டும்?***

***விடை:–*** அவளால் முடிந்த அளவுக்கு அவர்களிடமிருந்து விடுவித்துக் கொள்ள முயலவேண்டும். சந்தர்ப்பம் கிடைக்கும்போது அங்கிருந்து ஓடிப்போய் விடவேண்டும். எந்த வழியும் புலப்படவில்லையானால், பகவானைக் கூவி அழைக்க வேண்டும். ஏதோ ஒரு வழியில் பகவான் விடுவித்து விடுவார்.

ஒரு சமயம் வேற்று மதத்தினர், ஒரு பெண்ணின் வாயில் துணியை அடைத்து, இரு கைகளையும் முதுகுக்குப் பின்னால் சேர்த்துக்கட்டி, மேலிருந்து பர்தா அணிவித்து, ரயில் பெட்டியில் கடத்திச் சென்று கொண்டிருந்தார்கள். லக்னௌ

ரயில்நிலையத்தில் பயணச்சீட்டு பரிசோதகர் வந்து, அந்தப் பெண்ணின் எதிரே பயணச்சீட்டிற்காக நின்றபோது, அவள் அந்தப் பரிசோதகரின் காலைத் தன் காலால் அழுத்தினாள். ''இவர் ஏன் என் காலை அழுத்துகிறார்?'' என்று பரிசோதகர் சிந்தித்தார். ''இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது?'' அவர், ரயில்நிலைய காவல்படையினரை அழைத்தார். காவலர்கள், பரிசோதனை செய்து, அந்தப் பெண்ணை விடுவித்தார்கள். அவளைக் கடத்தியவர்களையும் பிடித்துக் கொண்டார்கள். இப்படியே நௌஆகாலியிலும் வேற்று மதத்தினர் ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டார்கள். அந்தப் பெண், பகவானை அழைத்தாள். இதற்கிடையில் இன்னொரு வேற்று மதக்காரன் வந்து, ''நான், இவளை என் மனைவியாக்கிக் கொள்ளப் போகிறேன்'' என்று சொல்ல ஆரம்பித்துவிட்டான். இந்த விஷயமாய் அந்த இரண்டு ஆசாமிகளுக்கும் சண்டை உண்டாகிவிட்டது. அவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டு மாண்டார்கள். அந்தப் பெண் காப்பாற்றப்பட்டாள்.

***வினா:– எவனுடைய மனைவியை வேற்றுச் சமயத்தினர் கடத்திச் சென்றுவிட்டார்களோ, அந்த ஆணின் கடமை என்ன?***

***விடை:–*** ஆணுக்கு, அவளை விடுவித்துக் கொண்டு வரும் திறன் இருந்து, அவளும் விருப்போடு வருவதாயிருந்தால், அவளைத் தன் வீட்டுக்கு அழைத்து வரவேண்டும். காரணம், அவள் மேல் பலாத்காரம் செய்யப்பட்டதால், அவள் கற்பினை இழந்தாளே தவிர, அவளுடைய தர்மம் குறைந்து விடவில்லை. தானே விரும்பி தவறு செய்யும்போதுதான் தர்மம் குலைகிறது. அச்சுறுத்தல் மூலம் யாரும், எவருடைய தர்மத்தையும் கைவிடச் செய்துவிட முடியாது. அறவழியிலிருந்து விலகியவராகவும் செய்ய முடியாது. ஒருவன் பலவந்தமாக இன்னொருவன் வாயில் பசு மாமிசத்தை வைத்துத் திணித்தாலும், அவன் இவனுடைய தர்மத்தை விட்டுவிடச் செய்ய முடியாது. ஆகவே, அந்தப்

பெண் மனத்தால் மாசற்றவளாக இருந்து, புணர்ச்சி இன்பத்தை அனுபவிக்காதவளாக இருந்தால், அவளுடைய கற்பு இழக்கப்பட்டதாக ஆகாது. அதனால், அவள் திரும்பி வந்தால், கீதை–இராமாயணம்–பாகவதம் முதலியவற்றைப் படிக்கச் சொல்லியும், கங்கா ஜலத்தால் நீராட்டியும் தூய்மைப்படுத்தி ஏற்றுக்கொள்ள வேண்டும். இவை எல்லாவற்றையும் செய்து முடித்தபின், அவளுக்கு மாதவிலக்கு ஏற்பட்டதும், அவள் எல்லாவகையிலும் சுத்தமாகிறாள். ''மாதவிலக்கினால் பெண் தூய்மையடைகிறாள்.'' – ***'ரஜஸா ஶு$_3$த்$_4$யதே நாரீ'***.

ஜமதக்னி முனிவரின் மனைவியான ரேணுகாதேவி, தன் கற்பின் ஆற்றலால் தினந்தோறும் துணியில் தண்ணீர் பிடித்துக்கொண்டு வருவது வழக்கம். ஒரு நாள் ஆற்றங்கரையில் தங்கம் போல் மின்னிக் கொண்டிருந்த அழகிய கூந்தல் ஒன்றைக் கண்டாள். ''இந்த முடியே இவ்வளவு அழகாக இருக்கும்போது, இதற்குரிய ஆடவன் எவ்வளவு அழகாக இருப்பான்?'' என்று அவள் மனத்தில் தோன்றியது. இப்படியாக மனத்தில் ஓர் அசைவு ஏற்பட்டவுடன், அவளுடைய தர்மம் குறைவுபட்டது. முன்பு செய்தது போல் துணியில் தண்ணீரை நிரப்பிக் கொண்டுவர அவளால் முடியவில்லை.

இந்திரன், கௌதம முனிவரின் உருவத்தை ஏற்று, அகல்யாவைச் சீர்குலைத்தான் எனில், அவளுடைய தர்மத்திற்குக் குறைவு ஏற்படவில்லை. மாறாக, ஒரு பதிவிரதைக்கு அழிவு ஏற்பட்டது. அவளுடைய கணவருக்குக் கோபம் ஏற்பட்டு, அதனால் அவளைக் கல்லாகப் போகும்படிச் செய்தாலும், பகவான் இராமன் அவளைப் புனிதமாக்கி விட்டார். ஏனெனில், அவர் தன்னுடைய தர்மத்தில் பிடிப்புடன் இருந்தார்.

கீதா பிரஸ்ஸின் நிறுவனர் ஸ்ரீஜயதயாள் கோயந்தகா அவர்கள், தூய்மைக்கும் புனிதத்திற்கும் தன் நெஞ்சத்தில் முதலிடம் கொடுத்திருந்தார். பிற சமயத்தினர் பலவந்தப்படுத்தி,

ஒரு பெண்ணின் கற்பைச் சூறையாடினால், அவள் தர்மம் தவறியவளாக ஆகமாட்டாள் என்று அவரும் கூறியிருக்கிறார். ஆதலால், அவர்கள் இந்து தர்மத்திற்கு வரவிரும்பினால், அவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டும். கங்கா ஸ்நானம், கீதை–இராமாயண பாராயணம் முதலியவற்றால் சுத்தப்படுத்தி ஏற்றுக்கொள்ள வேண்டும். ''இன்னொரு மதத்தைச் சேர்ந்த ஒருவர் இந்து தர்மத்திற்கு வரவிரும்பினால், அவரையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதாவது, அவரும் இந்துவாக முடியும். இந்து தர்ம முறைப்படி ஜப–தியானம், பூஜை–பாராயணம் முதலியன செய்யமுடியும்'' என்றும் அவர் கூறியிருக்கிறார்.†

***வினா:– தானே விரும்பி வேறிடம் சென்ற மனைவி திரும்பி வந்தால் என்ன செய்வது?***

---

† பிற மதத்திலிருந்து இந்துக்களாக விரும்புபவர்கள் எந்த வர்ணத்தை அடைவார்கள்? அதாவது, பிராமணன் ஆவார்களா? க்ஷத்திரியன் ஆவார்களா? வைசியன் ஆவார்களா? நான்காம் வர்ணத்தவன் ஆவார்களா? பிராமணனாக ஆவதற்கோ, க்ஷத்திரியனாக ஆவதற்கோ, வைசியனாக ஆவதற்கோ தகுதியில்லையே. இந்துக்களாக விரும்புபவர்கள் நான்காம் வர்ணத்தில் சேர விரும்ப மாட்டார்களே என்ற கேள்வி ஏற்படலாம்.

ஆனால், இந்து தர்மத்தில் 'பாகவத தர்மம்' என்று ஒன்று இருக்கிறது. அதில் வர்ணாசிரம தர்மம் அடங்கும். அதாவது, எல்லா வர்ணத்தில் உள்ளவர்களும், ஆசிரமத்தில் உள்ளவர்களும், பாகவத தர்மத்தைக் கடைப்பிடித்து, பகவானுடைய திருவடிகளை அடைந்துவிடலாம்.

ஆனால், பாகவத தர்மம் வர்ணாசிரம தர்மத்திற்கு உட்பட்டதல்ல. அதாவது, நான்கு வர்ணத்திலும், நான்கு ஆசிரமங்களிலும் உட்படாத வேடர்களும், ஹூணர்களும், மலைவாசிகளும், துருக்கர்களும்கூட பாகவத தர்மத்தைக் கடைப்பிடித்து, பகவான் திருவடிகளை அடைந்துவிடலாம் என்று ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது.

**விடை:-** அவளைத் தன் மனைவியாக அங்கீகரிக்கக் கூடாது. அவளோடு மனைவி என்ற முறையில் உறவு வைத்துக்கொள்ளக் கூடாது. மகான் கூபாஜீ மகாராஜ் அவர்களின் மனைவி, அவரை விட்டுவிட்டு வேறொருவரிடம் சென்றுவிட்டாள். அங்கே, அவளுக்குக் குழந்தையும் பிறந்துவிட்டது. ஆனால், அவளுடைய அந்தக் கணவன் இறந்துவிட்டான். அதனால் அவளுக்கு வாழ்க்கை நடத்துவதே மிகவும் கஷ்டமாகிவிட்டது. அதனால், அவள் மறுபடியும் கூபாஜீயிடமே வந்து சேர்ந்தாள். அவளுடைய வாழ்க்கைக்கு வேண்டிய உணவு–நீர்–துணிமணிக்கு கூபாஜீ ஏற்பாடு செய்தார். ஆனால், தன் மனைவியாக ஏற்கவில்லை.

---

*கிராதஹூணாந்த்$_4$ரபுளிந்த$_3$புல்கஸா*
*ஆபீ$_4$ரகங்கா யவநா: க$_2$ஸாத$_3$ய: ।*
*யேऽந்யே ச பாபா யது$_3$பாஶ்ரயாஶ்ரயா:*
*ஶுத்$_4$யந்தி தஸ்மை ப்ரப$_4$விஷ்ணவே நம: ॥*

***(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 2/4/18)***

இதைப் பிரமாணமாக எடுத்துக்காட்டி, சகல பிராணி ஸம்ரக்ஷகர்களான ஸ்ரீபகவந்நாம போதேந்திர சரஸ்வதி சுவாமிகள், பகவான் நாம பஜனத்திற்கு – பகவான் நாமம் சொல்ல – நாக்குப் படைத்திருப்பதைத் தவிர, வேறு வர்ணாசிரம தர்மங்களாலும், மற்ற விதிமுறைகளாலும் ஏற்படக்கூடிய தகுதிகள் தேவையில்லை என்பதைத் திட்டவட்டமாக நிரூபித்து இருக்கிறார்கள்.

ஆகவே, வர்ணாசிரம தர்மத்திற்கு உட்பட்டு பகவன் நாம பஜனம் செய்பவர்கள், எப்படி பகவானுடைய திருவடிகளைச் சேர்வது எவ்வளவு திண்ணமோ, அவ்வளவு திண்ணமானது, வர்ணாசிரமக் கட்டுப்பாட்டுக்கு உட்படாத எந்த மானுடனும் பகவான் நாம பஜனத்தினால் பகவானுடைய சரணங்களை அடைய முடியும் என்பது. ஆகவே, பிறமதத்தினர் இந்துக்களாக விரும்பினால், பகவான் நாம பஜனம் என்ற பாகவத தர்மத்தைக் கடைப்பிடித்து பாகவதர்கள் ஆகி, பகவானுடைய திருவடி நிழலை அடைந்துவிடலாம்.

**வினா:– கணவன் கெட்ட நடத்தையுடையவனாக இருந்தால், மனைவி என்ன செய்யவேண்டும்?**

**விடை:–** கெட்ட நடவடிக்கையுடைய கணவனை மனைவி துறந்து விடக்கூடாது. மாறாக, தன்னுடைய பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றிக் கொண்டு, அவனுக்கும் அறிவுறுத்த வேண்டும். மண்டோதரி, இராவணனுக்கு அறிவுரை சொன்னாள். அவனை விலக்கிவிடவில்லை. அதுபோல் அறிவுரை கூறவேண்டும்.

திருமணத்தின் போது கணவன்–மனைவி இருவரும், ஒருவருக்கொருவர் உறுதிமொழி கூறிக் கட்டுப்படுகிறார்கள். அந்த உறுதிமொழியின்படி, கணவனுக்கு ஆலோசனைகள் கொடுப்பதற்கு, தன் மனத்தில் தோன்றுவதைக் கணவனிடம் சொல்வதற்கு மனைவிக்கு அதிகாரம் உண்டு. காந்தாரி எவ்வளவு உயர்ந்த பதிவிரதையாக இருந்தாள்! ''எனக்கு எவருடன் திருமணம் நிகழப் போகிறதோ, அவருக்குக் கண் பார்வை இல்லை'' என்று கூறி அவள், தன்னுடைய கண்களின் மேல் துணிப்பட்டை கட்டிக் கொண்டாள். ஏனென்றால், ''என் கணவனுக்குக் கிடைக்காத இன்பத்தை நானும் பெறக்கூடாது'' என்று. ஆனால், நேரம் வந்தபோது, ''நீங்கள் துரியோதனனின் சொல்லுக்குச் செவி சாய்க்கக் கூடாது. இல்லாவிட்டால் நமது குலமே அழிந்துவிடும்'' என்று கணவனுக்கு (திருதராஷ்டிரருக்கு) நல்லுரை சொன்னாள். இப்படியாகப் பலமுறை அவள் ஆலோசனை சொன்னாள். ஆனால் திருதராஷ்டிரன், அவள் சொற்களைக் கேட்காததால், குலநாசமே ஏற்பட்டது. உட்கருத்து என்னவென்றால், கணவனுக்கு நல்ல யோசனைகள் கூறுவதற்கு மனைவிக்கு முழு உரிமை உண்டு என்பதுதான்.

உடலாலும் உள்ளத்தாலும் கணவனுக்குப் பணிவிடை செய்து, தன் கடமையை நிறைவேற்றுகிற பதிவிரதையான பெண், மரணத்திற்குப்பின், கணவன் இருக்கும் உலகத்திற்கே (கணவன் அருகிலேயே) செல்கிறாள் என்று சாஸ்திரங்களில்

வருகிறது. கணவன் கெட்ட நடவடிக்கையுடையவனாக இருந்தால், அவன் நரகலோகத்திற்குத்தான் போவான். அதனால், பதிவிரதைப் பெண்ணும் நரகலோகத்திற்குத்தானே போகவேண்டும்? ஆனால், கற்புடைய பெண் நரகங்களுக்குச் செல்லமாட்டாள். ஏனென்றால், அவள் அறநூல்களுடைய, பகவானுடைய, சாது–மகாத்மாக்களுடைய சொற்களையே கடைப்பிடித்து இருக்கிறாள். கற்பு நெறியைக் கைக்கொண்டிருக்கிறாள். அதனால் அவள், தன்னுடைய கற்பின் ஆற்றலால் கணவனை உயர்த்திவிடுவாள். அதாவது, மனைவிக்கு எந்த நல்லுலகம் உண்டோ, அதுவே கணவனுக்கும் கிடைக்கும். கருத்து என்னவென்றால், தன்னுடைய கடமையை நிறைவேற்றுகிறவன், பிறரையும் உயர்த்துபவனாக ஆகிறான் என்பதுதான்.

***வினா:– கணவன், மனைவியை விபசாரம் செய்யத் தூண்டினால், மனைவி என்ன செய்ய வேண்டும்?***

***விடை:–*** தன் மனைவியை மற்றொருவனுக்கு கொடுப்பதற்குக் கணவனுக்கு அதிகாரம் இல்லை. ஏனென்றால், மனைவியின் தகப்பனார், கணவனுக்குத்தான் அவளைத் தானமாகக் கொடுத்திருக்கிறார். உணவு, உடை முதலியவைகளைத் தானமாகப் பெறுகிறவர்கள், உணவு முதலியவற்றைப் பிறருக்குக் கொடுக்க முடியும். ஆனால், கன்னிகாதானம் பெறுகிற கணவன், தன் மனைவியைப் பிறருக்குக் கொடுக்க முடியாது. அவன் அப்படிச் செய்தால் மகாபாவத்திற்கு ஆளாகிறான். இம்மாதிரி நிலைமையில் மனைவி, கணவனின் சொல்லைக் சிறிதும் கேட்கக் கூடாது. அவள், தன் கணவனிடம் கண்டிப்பாகச் சொல்லிவிட வேண்டும். ''என்னுடைய தந்தை உங்களுக்குத்தான் கன்னிகாதானம் செய்திருக்கிறார். அதனால், பிறருக்குக் கொடுக்கும் உரிமை தங்களுக்கு இல்லை.'' இந்த விஷயத்தில் அவள் கணவனின் உத்திரவை மீறுகிறாள் என்றாலும், அவளுக்கு எந்தப் பாவமும் உண்டாவதில்லை. ஏனென்றால்,

கணவனுடைய ஆணை அநியாயமானது. அநியாயத்தை ஏற்பது என்பது, அநியாயத்திற்கு உதவுவது ஆகும். அநியாயத்திற்குத் துணை நிற்பது என்பது எல்லோருக்குமே தவறு ஆகும். மற்றொரு விஷயம், கணவனின் அறம் தவறிய ஆணைகளை மனைவி ஏற்று நடந்தால், அதன் காரணமாகக் கணவனுக்கு நரகங்கள்தான் கிடைக்கும். அதனால் கணவனை நரகத்தில் தள்ளக்கூடிய இத்தகைய ஆணைகளை மனைவி ஏற்று நடக்கலாகாது.

சாஸ்திர சட்ட–திட்டங்களுக்கு எதிராக, கணவனே மனைவியிடம் உடலுறவு கொண்டால், அது முறையற்றது; பாவகரமானது. தர்மத்தோடு கூடிய காமம், கடவுள் வடிவம். *'த$_4$ர்மாவிருத்$_3$தே$_4$ா பூ$_4$தேஷு காமோऽஸ்மி ப$_4$ரதர்ஷப$_4$ ||'* ***(கீ$_3$தா 7/11).*** அதனால், இதில் குற்றமோ, பாவமோ இல்லை. ஆனால், தர்மத்திற்கு விரோதமாக, தன் மனம் போனபோக்கில் மனைவியை நடத்துவது தவறு. மனிதன் எப்போதும் அறநூல் விதிகளின்படியே ஒவ்வொரு காரியத்தையும் செய்ய வேண்டும் (கீதை 16/24).

***வினா:– கணவன், புலால்–போதைப் பழக்கம் உடையவனாக இருந்தால் மனைவி என்ன செய்ய வேண்டும்?***

***விடை:–*** கணவனுக்குப் புத்திமதி சொல்லவேண்டும். விலக்கத்தக்க செயல்களிலிருந்து விடுவிக்க வேண்டும். கணவன் அதை ஏற்காமல் போனால் ஒன்றும் செய்யமுடியாது. ஆனால், கணவனுக்கு அறிவுறுத்துவது மனைவியின் தர்மம், உரிமை. மனைவி, தன் உணவு–பான வகைகளைத் தூயதாகவே வைத்துக் கொள்ளவேண்டும்.

***வினா:– கணவன், அடித்து உதைத்துத் துன்பப்படுத்தினால் மனைவி என்ன செய்யவேண்டும்?***

***விடை:–*** ''என்னுடைய முற்பிறவியில் செய்த வினைகளின் மாற்று விளைவு, கடன், இந்த உருவத்தில் வந்து

கணக்குத் தீர்த்துக் கொண்டிருக்கிறது. என்னுடைய பாவம் கழிந்து கொண்டிருக்கிறது. நான் பரிசுத்தமானவளாக ஆகிக் கொண்டிருக்கிறேன்'' என்று மனைவி அறிந்துகொள்ள வேண்டும். பிறந்தகத்துக்காரர்களுக்கு விஷயம் தெரிந்தால், அவர்கள் அவளைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று விடுவார்கள். ஏனென்றால், அடி–உதை வாங்குவதற்காகத் தம் பெண்ணைக் கொடுக்கவில்லை.

***வினா:– பிறந்தகத்தாரும் அவளைத் தம் வீட்டுக்கு அழைத்துச் செல்லாவிட்டால், அவள் என்ன செய்வது?***

***விடை:–*** அப்படியானால் அவள் தன் பழைய வினைகளின் பலனை அனுபவித்துத்தான் தீரவேண்டும். அதைத் தவிர போக்கற்ற அவள், வேறு என்னதான் செய்யமுடியும்? அவள், கணவனின் அடி–உதைகளைத் தைரியமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏற்றுக்கொள்வதால் பாவம் குறைந்து போகும். நாளடைவில் கணவன் அன்பு காட்டவும் கூடும். கணவனின் அடி–உதைகளை அவளால் பொறுத்துக் கொள்ள முடியாமற்போனால், கணவனிடம் சொல்லிவிட்டு, அவள் தனியே போய்விட வேண்டும். தனியாக இருந்து, தன் வாழ்க்கைக்கு வேண்டிய காரியங்களைச் செய்து கொண்டும், பகவானின் வழிபாடு–தியானம் செய்து கொண்டும் அச்சமின்றி வாழவேண்டும்.

ஆடவன், ஒருபொழுதும் பெண்ணைத் துன்புறுத்தக் கூடாது. பீஷ்மரைக் கொல்வதற்கு என்றே சிகண்டி பிறந்தார். ஆனால், போர்க்களத்தில் பீஷ்மருக்கு எதிரே வந்து நின்றபோது, பீஷ்மர் அம்பு செலுத்துவதை நிறுத்திவிட்டார். காரணம் சென்ற பிறவியில் சிகண்டி பெண்ணாக இருந்தார். இந்தப் பிறவியிலும் பெண் உருவத்திலேயே பிறந்தார். பின்னால் அவர் ஆண் உருவம் அடைந்தார். அதனால், பீஷ்மர் அவரைப் பெண்ணாகவே கருதினார். அவர் மீது பாணம் செலுத்தவில்லை.

ஏதோ ஒரு தீவினையின் பயனாகவே ஆபத்துக்கள் தோன்றுகின்றன. அந்தச் சமயத்தில் மிகுந்த ஆர்வத்துடன் கடவுள் வழிபாடு—பக்தி செய்வதால் இருமடங்கு லாபம் உண்டாகிறது. ஒன்று, பாவங்கள் அழிகின்றன. இரண்டு, இறைவனைக் கூவி அழைப்பதால், இறை நம்பிக்கை வளர்கிறது. அதனால், ஆபத்து வரும்போது பெண்கள் தைரியத்தை விட்டுவிடக் கூடாது.

ஆபத்து நேரும்போது தற்கொலை எண்ணத்திற்கு மனத்தில் இடம் கொடுக்கக்கூடாது. ஏனென்றால், தற்கொலை செய்து கொள்வதால் மிகப் பெரும் பாவம் ஏற்படுகிறது. ஒரு மனிதனைக் கொல்வதால் எவ்வளவு பாவம் ஏற்படுமோ, அதே பாவம் தற்கொலை செய்து கொள்வதாலும் நேரும். ''தற்கொலை செய்து கொள்வதால் என்னுடைய துன்பம் குறைந்து போகும்; நான் சுகவாசியாக ஆகிவிடுவேன்'' என்று மனிதன் நினைக்கிறான். இது முற்றிலும் முட்டாள்தனமான எண்ணம். ஏனென்றால், பழைய பாவமும் கழிவதில்லை. அத்துடன் புதிய பாவமும் உண்டாகிறது. தற்கொலை செய்து கொள்ள முயன்று, அதிலிருந்து உயிர் தப்பியவர்கள், ''தற்கொலை செய்து கொள்வது மிகவும் கஷ்டமான காரியம். நான் அப்படிச் செய்திருக்க வேண்டாம் என்ற கழிவிரக்கம் இப்போது உண்டாகிறது. இப்போது என்ன செய்வது?'' என்று கூறுவதைக் கேட்டிருக்கிறோம். தற்கொலை செய்து கொண்டவர்கள், பொதுவாக பூத—பிரேதங்களாக மாறுகிறார்கள். அங்கே பசிதாகத்தோடு துன்பப்படுகிறார்கள். கருத்து என்னவென்றால், தற்கொலை செய்து கொண்டவர்களுக்குத் துன்பநிலையே ஏற்படுகிறது என்பதுதான்.

***வினா:— கணவன், மனைவியைத் துறந்துவிட்டால், அவள் என்ன செய்ய வேண்டும்?***

***விடை:—*** அவள் தன்னுடைய தந்தையின் வீட்டில் தங்கவேண்டும். தந்தையின் வீட்டில் இருக்க முடியாவிட்டால், புக்ககம் அல்லது பிறந்தகத்தார் அருகே வாடகைக்கு அறை

எடுத்துக்கொண்டு கௌரவம், கட்டுப்பாடு, பிரம்மசரியம் மேற்கொண்டு, தன் தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். கடவுள் வழிபாடு, தியானம் செய்ய வேண்டும். தந்தையிடமிருந்தும் மாமனாரிடமிருந்தும் கிடைப்பதைக் கொண்டு, தன்னுடைய வாழ்க்கையை நடத்திச் செல்ல வேண்டும். பணம் இல்லாமற்போனால் வீட்டிலிருந்தபடியே, தன் கைகளால் நூல் நூற்றல், நெசவு வேலை, தைத்தல், கூடை முடைதல் போன்ற தொழில் செய்து, தன் வாழ்வைச் சமாளிக்க வேண்டும். இது கஷ்டமாகத்தான் இருக்கும். தபஸ் என்றாலே கஷ்டம்தான், சௌக்கியம் இல்லை. இவ்விதம் தவம் செய்வதால், அவளிடம் ஆன்மிக ஒளி பெருகும். அவளுடைய மனம் தூய்மை பெறும்.

தாய்–தந்தையர், சகோதரன்–அவர் மனைவி ஆகியோர், ''தமது மகள்–சகோதரிகள் அறவடிவினர். ஆதலால், அவர்களைச் சீராட்டி வளர்ப்பதனால் மிகவும் புண்ணியம் உண்டாகும்'' என்று உறுதியாக நினைக்க வேண்டும். அவர்கள் இந்த வாக்கியத்தின் ஒவ்வோர் எழுத்தையும் செயல்படுத்திக் காட்டவேண்டும். *'பி$_3$பதி கால கர ஸதகு$_3$ந நேஹா !'* ***(ஸ்ரீராமசரிதமாநஸம், கிஷ்கிந்த$_4$ா. 7/3)***. ''ஆபத்துக் காலத்தில் மகள்–சகோதரிகளிடம் நூறு மடங்கு அன்பு செலுத்தவேண்டும்'' என்பது இதன் பொருள். அவர்களால் அப்படிச் செய்ய இயலாமற்போனால், ''காட்டில் வசிக்கும் பிராணிகளுக்குக்கூட பகவான் உணவளித்துக் காப்பாற்றும்போது, என்னைக் கண்காணித்துக் காப்பாற்ற மாட்டாரா, என்ன?'' என்று, அந்தப் பெண்மணி நினைக்க வேண்டும். எல்லோருக்கும் தலைவனாக பகவான் இருக்கும்போது, நான் எப்படி அநாதையாக முடியும்? என்ற எண்ணத்தை உறுதியாகக் கொண்டு, இறைவனிடம் முழு நம்பிக்கையோடு அச்சமின்றி, கவலையின்றி, சிந்தனையின்றி, சந்தேகமின்றி வாழ வேண்டும். ஒரு விதவை சகோதரி இருந்தாள். அவளிடம் எதுவுமே இல்லை. மாமனார் வீட்டுக்காரர்கள் அவளுடைய

அணிகலன்களைப் பறித்துக் கொண்டார்கள். ஆனால் அவள், 'எனக்குக் கவலையே இல்லை' என்று சொல்வது வழக்கம். "இரு கைகளுக்குப் பின்னால் ஒரு வயிறுதான் இருக்கிறது. எனக்கு என்ன கவலை."

சிறுமியருக்குச் சிறுவயதிலிருந்தே நூல்நூற்றல், நெசவு, தையல், கூடைபின்னுதல், இவற்றுடன் கல்வியும் கற்பிக்க வேண்டும். மணமானதும் கணவனுக்கு ஆற்ற வேண்டிய பணிவிடைகளில் குறைவு வைக்கக் கூடாது. ஆனால், உள்ளத்தில் பகவானிடமே நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். உண்மையான உதவி பகவானிடமிருந்துதான் கிடைக்கிறது. இத்தகைய உதவி கணவரிடமிருந்தோ, பிள்ளையிடமிருந்தோ, உடலிலிருந்தோ கிடைக்காது. இது முற்றிலும் உண்மையான விஷயம். ஆகவே, கணவன் கைவிட்டுவிட்டால் பயந்துவிடக் கூடாது. இந்த விஷயத்தில் தன்னிடம் ஏதேனும் குறை இருந்தால், அதை அப்போதே திருத்திக் கொள்ள வேண்டும். குறை ஏதும் இல்லாமல் இருந்தால் பயமின்றி இருக்கவேண்டும். தன்னுடைய உணர்வும் நடத்தையும் சரியில்லாவிட்டால் உள்ளத்தில் தொய்வு ஏற்படுகிறது. தன் உணர்வும் நடத்தையும் சரியாக இருக்குமேயானால் உள்ளத்தில் நலிவு ஏற்படாது. அதனால், தன்னுடைய எண்ணங்களையும் நடத்தையையும் எப்போதும் தூயதாக, புனிதமானதாக வைத்துக்கொண்டு பகவானுடைய பூஜை, தியானத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும். பகவானிடத்தில் நம்பிக்கை கொண்டு வேறு எதையும் பொருட்படுத்தாமல் இருக்கவேண்டும்.

இன்றைய இளைஞர்களுக்குத் தம் மனைவிகளைக் கைவிடாமல் இருப்பதே முதற்கடமை. மனைவியைத் துறப்பது மகாபாவம்; மிகப்பெரிய அநியாயம். இப்படிச் செய்கிறவர்கள் பயங்கரமான நரகத்திற்குப் போவார்கள்.

***வினா:– ஆண்மகன் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளலாமா கூடாதா?***

***விடை:–*** முதல் மனைவியிடம் குழந்தை உண்டாகா விட்டால் பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதற்காக, அதாவது குழந்தை பெற்றுக் கொள்வதற்காக மட்டுமே, சாஸ்திர நூல்களின் விதிமுறைகளுக்கேற்ப இரண்டாவது திருமணம் செய்து கொள்ளலாம். தனது இன்பநுகர்ச்சிக்காக, அவன் மறுமணம் செய்து கொள்ளக்கூடாது. ஏனெனில், இந்த மனித உடல் தன் சொந்த இன்பநுகர்ச்சிக்காகப் பெறப்பட்டதல்ல.

மறுமணம், தன்னுடைய முதல் மனைவியின் அனுமதியோடும் சம்மதத்தோடும்தான் செய்து கொள்ள வேண்டும். பிதிர்க்கடனிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே மறுமணத்திற்கு மனைவி அனுமதி கொடுக்கவேண்டும். மறுமணம் செய்து கொண்ட பின்னரும், தன்னுடைய மூத்த மனைவியின் உரிமைகள் காப்பாற்றப்பட வேண்டும். அவளை ஒருபொழுதும் வெறுக்கக்கூடாது; நிராதரவாக விட்டுவிடக் கூடாது. மாறாக, அவளை மிக உயர்வாக மதித்து, இருவரும் அவளைக் கௌரவிக்க வேண்டும்.

பிள்ளை பிறந்துவிட்டது. ஆனால், மனைவி இறந்துவிட்டாள் என்றால் அவன் மறுமணம் செய்து கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில், அவன் முன்னோர் கடனிலிருந்து விடுதலை அடைந்துவிட்டான். ஆனால், எவனுக்கு இன்பநுகர்ச்சிக்கான ஆசை குறையவில்லையோ, அவன் மறுமணம் செய்து கொள்ளலாம். ஏனென்றால், அவன் மறுமணம் செய்து கொள்ளாவிட்டால் பிறர் மனைவியோடு புணர முனைவான்; வேசியை நாடிச் செல்வான். அதனால், அவனுக்குக் கொடூரமான பாவம் சம்பவிக்கும். ஆதலால், இத்தகைய பாவத்திலிருந்து காப்பாற்றிக் கொள்ளவும், கௌரவத்தோடு வாழ்வதன் பொருட்டும், அறநூல்களில் விதிக்கப்பட்டுள்ள முறைப்படி மறுமணம் செய்துகொள்ளலாம்.

***வினா:– முன்பு, மன்னர்கள் பல பேர்களை மணந்து கொண்டார்களே, அது சரியா?***

*விடை:–* தங்களுடைய இன்பநுகர்ச்சிக்காகப் பல பேர்களை மணந்துகொண்ட மன்னர்கள் லட்சியவான்களாக மதிக்கப்பட்டதில்லை. மன்னனாகி விட்டதாலேயே யாரும் லட்சிய புருஷனாகி விடுவதில்லை. யார் யார் சாஸ்திர நூல்களில் கூறப்பட்டபடி நடந்தார்களோ, அறத்தைக் கடைப்பிடித்தார்களோ, அந்த மன்னர்கள் லட்சிய மனிதர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டார்கள்.

உண்மையில் திருமணம் என்பது ஓர் உயர்ந்த விஷயமில்லை. அதற்கு அவசியமும் இல்லை. அவசியமானது எது என்றால் பரமாத்மாவை அடைவதுதான். இதற்காகத்தான் மனித உடம்பு கிடைத்திருக்கிறது. மணம் செய்து கொள்வதற்காக அல்ல. ஆண்–பெண் உறவு என்பது தேவதைகள் முதற்கொண்டு பூத–பிரேதம் முதலியன வரையில் நிலையான–ஊர்ந்து செல்கிற ஒவ்வொரு உயிரிலும் ஏற்படுகிறது. ஆகவே, இது ஒன்றும் பெருமைக்குரிய விஷயமில்லை. ஆனால், பரமாத்மாவை அடைவதற்கான வாய்ப்பு, உரிமை, தகுதி முதலியன மனிதப்பிறவிக்கு மட்டுமே உண்டு. பரமாத்மாவை அடைவதற்கான உரிமை மனிதனுக்குப் பிறவியிலேயே இருக்கிறது. சிந்தனை மூலமாக, தன்பாலுள்ள பொருட்பற்றையும், இன்பநுகர்ச்சி வேட்கையையும் விடமுடியாத பலவீனமான மனிதர்களுக்கே திருமணம் விதிக்கப்பட்டிருக்கிறது. புலனின்பங்களை நுகர்ந்து அவற்றில் பற்றினை விடவும், அவற்றில் வைராக்கியத்தை உண்டாக்குவதற்காகவுமே குடும்ப வாழ்க்கையில் நுழைய வேண்டும். புலனின்ப பொருட்பற்றை விடமுடியாதவர்களுக்கே பிதிர்க்கடன் உண்டு. அதாவது, உபகுர்வாண பிரம்மசாரிகளுக்கு வம்ச பரம்பரைத் தொடர் நின்று போகாமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு இருக்கிறது. நைஷ்டிக பிரம்மசாரிக்கும் இறையடியார்க்கும் இல்லை. புலனின்ப விருப்பத்தைக் குறைத்துக் கொள்ள முடியாதவர் பேரிலேயே பிதிர்க்கடன் தங்கி நிற்கும் என்பது கருத்து. எவரிடம்

புலனின்ப ஆசை இல்லையோ, அவருக்கு எவ்விதக் கடனும் இல்லை. அவர் கர்மயோகியாகவோ, ஞானயோகியாகவோ, பக்தியோகியாகவோ இருந்துவிடலாம். காரணம், வருமானத்தின் மேல்தான் வருமான வரி விதிக்கப்படுகிறது. பொருளுக்கு விற்பனை வரி உண்டு. எவரிடம் வருமானம் இல்லையோ, அவரிடம் வரிவசூல் எப்படி? பொருளே இல்லாதபோது விற்பனை வரி என்ற பேச்சுக்கே இடமில்லை.

*வினா:– பெண், ஏன் மறுமணம் செய்து கொள்ளக் கூடாது?*

*விடை:–* தாய்–தந்தையர் கன்னிகாதானம் செய்து கொடுத்துவிட்ட பிறகு, அவளுக்குக் கன்னிகை என்ற பெயரும் போய்விடுகிறது. அதனால், மறுபடியும் அவளைத் தானம் செய்வது என்பது எப்படி இயலும்? அந்த நிலைமையில் அவளுக்கு மறுமணம் என்பது மிருகநெறியே ஆகும்.

*ஸக்ருத$_3$ம்ஶோ நிபததி ஸக்ருத்கந்யா ப்ரதீ$_3$யதே ।*
*ஸக்ருத$_3$ாஹ த$_3$த$_3$ாநீதி த்ரீண்யேதாநி ஸதாம் ஸக்ருத் ॥*

***(மநுஸ்ம்ருதி 9/47; மஹாப$_4$ாரதம் வநபர்வம் 294/26)***

''குடும்பத்தில் பொருள் முதலானவைகளின் பிரிவினை ஒருமுறை ஏற்படும். கன்னிகை ஒரு தடவைதான் கொடுக்கப் படுகிறாள். 'நான் கொடுப்பேன்' – இந்தச் சொல்லும் ஒரு தடவைதான் சொல்லப்படுகிறது. மேலோர்களுக்கு இம்மூன்று செயல்களும் ஒரு தடவை மட்டுமே நிகழ்கின்றன.''

சாஸ்திரம், சமயம், உடலமைப்பு, உலக நடவடிக்கை – இந்நான்கு கோணத்திலிருந்து பார்த்தாலும் பெண்களுக்கு மறுமணம் சரியானதல்ல. சாஸ்திரங்களின் நோக்கில் பார்த்தால், சாஸ்திரங்களில் பெண்ணின் மறுமணத்திற்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கவில்லை. தர்மத்தின்படி பார்த்தால் பிதிர்க்கடன் என்பது ஆண்களையே சார்ந்தது. பெண்களுக்கு பிதிர்க்கடன் போன்ற எவ்விதமான கடனும் இல்லை. உடலமைப்பின்படி பார்த்தால் பெண்களிடம்

காமத்தைத் தடுத்து நிறுத்துவதற்கான வலிமை இருக்கிறது. உள்ளத்தில் உறுதியும் இருக்கிறது. உலக நிலவரங்களின்படி பார்த்தால் மறுமணம் செய்துகொண்டபின், அந்தப் பெண்ணின் முந்தைய குழந்தைகள் எங்கே போகும்? அவைகளை வளர்த்து ஆளாக்குவது யார்? ஏனென்றால், அவள் யாரைத் திருமணம் செய்துகொள்கிறாளோ, அவர் இந்தக் குழந்தைகளைத் தன்னுடையதாக்கிக் கொள்ளமாட்டார். அதனால், பெண்கள் மறுமணம் செய்து கொள்ளாமல் பிரம்மசரியம் ஏற்று கட்டுப்பாட்டுடன் வாழவேண்டும்.

ஒரு பெண்ணுக்கு ஆறேழு குழந்தைகள் பிறந்து, அவளுடைய கணவன் இறந்ததன் பின்னர், அவள் பிரம்மசரியம் காத்து வாழ்ந்தால், நைஷ்டிக பிரம்மசாரிகள் சென்றடையும் உயர்நிலையினையே அடைகிறாள் என்றுகூட சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கும் போது, குழந்தையே இல்லாத ஒருத்தி, கணவனின் மரணத்துக்குப்பின் பிரம்மசரியம் போற்றி வாழ்ந்தால், நைஷ்டிக பிரம்மசாரி அடையும் மேல்நிலையை அடைவாள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

***வினா:– இளம்நங்கை, கைம்மை அடைந்துவிட்டால் என்ன செய்வது?***

***விடை:–*** கணவன் உயிருடன் இருந்தபோது எந்த விஷயங்களை நல்லனவாகக் கருதினாரோ, அவருடைய மரணத்துக்குப் பின்னரும் அந்தக் கைம்பெண், அவைகளுக்கு ஏற்ற மாதிரியே நடக்கவேண்டும். 'பகவான் அருளியுள்ள இந்த ஒவ்வாதநிலை, என்னுடைய தவத்திற்காகவே' என்று அவள் நினைக்க வேண்டும். அறிந்து உணர்ந்து செய்யப்படும் தவத்தைக் காட்டிலும், இந்தத் தவம் மிகவும் மேலானது. பகவானுடைய கட்டளைப்படி செய்யப்படும் தவம்– புலனடக்கத்திற்கு மிகுந்த பெருமை உண்டு. இப்படி எண்ணிக் கொண்டு, ''நான் எப்படிப்பட்ட பாக்கியசாலி! இப்படித் தவம் செய்வதற்கான உயர்ந்த வாய்ப்பினைக் கடவுள்

கொடுத்திருக்கிறாரே!'' என்று ஒவ்வொரு வேளையிலும் மனத்தில் புத்துணர்ச்சி கொண்டிருக்க வேண்டும். பாகவதத்தில் இப்படி வருகிறது—

**தத்தேऽநுகம்பாம் ஸுஸமீக்ஷமாணோ**
**பு$_4$ஞ்ஜாந ஏவாத்மக்ருதம் விபாகம் ।**
**ஹ்ருத்$_3$வாக்$_3$வபுர்பி$_4$ர்வித$_3$த$_4$ந்நமஸ்தே**
**ஜீவேத யோ முக்திபதே$_3$ ஸ தா$_3$யப$_4$ாக் ॥**

***(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 10/14/8)***

''தங்கள் கிருபையைப் பேரார்வத்துடன் எதிர்பார்த்துத் தன் வினைப்பயனாக உண்டான சுக—துக்கங்களைப் பற்றற்று ஏற்று அனுபவிப்பவனாக, மனம், வாக்கு மற்றும் உடலால் தங்களையே வணங்குபவனாகத் தன் வாழ்நாளைக் கழிப்பவன் முக்திநிலைக்கு, தந்தையின் சொத்திற்கு மகன்போல் உரியவனாகிறான்.''

கைம்பெண் தனது நடத்தையைக் கவனத்துடன் காப்பாற்ற வேண்டும். அவள் பாவகரமான காரியத்தைச் செய்தால், தான் சார்ந்த இருகுலத்தையும் மாசுபடுத்துகிறாள்; பண்பாட்டை அழிக்கிறாள்; மரணத்துக்குப்பின் பயங்கரமான நரகத்திற்குப் போகிறாள். ஆதலால், அவள் ஓர் எல்லைக்குள் இருக்க வேண்டும்; அறத்துக்குப் புறம்பான செயல் செய்யக்கூடாது. அன்னை குந்தியைப்போல, அவள் தன்னுடைய கைம்பெண் நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். அன்னை குந்தியை நினைவுபடுத்திக் கொள்வதன் மூலம், தன்னுடைய தர்மத்தை அனுஷ்டிப்பதற்கு ஆற்றல் கிடைக்கும்.

***வினா:– பெண்களுக்கும் ஆண்களுக்கு நிகரான ஆதிக்க உரிமை அளிக்கப்பட வேண்டும் என்று இப்போது சொல்லப்படுகிறதே, அது சரியா?***

***விடை:–*** இது சரியல்ல. உண்மையைக் கூறப்போனால், மகளிர்க்கு, (ஆண்களுக்கு) நிகரான அதிகாரம் இல்லை. மாறாக, அதிகமாகவே உரிமை இருக்கிறது. காரணம், அவள்

தன்னுடைய தந்தை முதலியோரை விட்டுவிட்டுக் கணவன் வீட்டுக்கு வந்திருக்கிறாள். அதனால், வீட்டில் அவளுக்கு அதிகப்படியான உரிமை ஏற்படுகிறது. அவள் வீட்டின் தலைவி; மருமகள் எனப்படுகிறாள். வெளியே கணவனுக்கு அதிகபடியான ஆதிக்கம் இருக்கிறது. தேர் இரண்டு சக்கரங்களினால் ஊர்ந்தாலும், சக்கரம் இரண்டும் தனித்தனியே இருக்கின்றதைப்போல. இரண்டு சக்கரங்களையும் ஒன்றாகச் சேர்த்து வைத்தால், ரதம் எப்படி நகரும்? இரண்டு சக்கரங்களும் தனித்தனியே இருப்பதன் மூலமே தேர் நகர்வதைப்போல, கணவனும் மனைவியும் தனித்தனி சிறப்புரிமை பெற்றிருப்பதாலேயே குடித்தனம் நடக்கிறது. ஒரே மாதிரியான அதிகாரம் கொடுக்கப்பட்டால் பெண்மணியைப் போல ஆடவன் எவ்வாறு சூல் கொள்வான்? ஆகவே, தத்தம் அதிகாரமே சமமான அதிகாரம் ஆகும். இதில் இருவருக்கும் தன்னுரிமை இருக்கிறது.

தங்கள் தங்கள் அதிகாரமே உயர்ந்தது; மேன்மையானது. நமக்குச் சிறிதளவு உரிமைதான் கொடுக்கப்பட்டிருக்கிறது. கணவனுக்கு அதிகமான உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது – இந்த எண்ணத்தை வைத்துத்தான் மனத்திற்குள் ‘நமக்கும் சமமான உரிமை கிடைக்கவேண்டும்’ என்ற சிந்தனைப் பதிவு ஏற்படுகிறது. இந்தப் பெருவிருப்பத்திற்குக் காரணம் – அறியாமை, முட்டாள்தனம். அறிவுள்ளவராக இருந்தால், சிறிதளவு அதிகாரமே உயர்தரமாகும். கடமைகள் அதிகமாக இருக்க வேண்டும். கடமையின் ஊழியன் அதிகாரம்; அதிகாரத்திற்கு ஏவலாள் கடமையல்ல. தன் கடமைகள் தன்முனைப்போடு செயலாற்றப்பட்டால் குடும்பம், அடியவர்–மகாத்மா, அறநூல், பகவான் – இவை எல்லா அதிகாரமும் கொடுக்கின்றன.

மேலாண்மை வேண்டும் என்ற ஆசையே பிறப்பு–இறப்புக்குக் காரணம். அத்துடன் நரகத்திற்கும் இட்டுச் செல்கிறது. ஒரு கோட்டத்தைச் சேர்ந்த நாய், வேறொரு

கோட்டத்திற்குப் போனால், அந்தக் கோட்டத்தின் நாய் அதைக் கடிப்பதற்காக ஓடுகிறது. இரண்டு நாய்களும் தங்களுக்குள் சண்டையிடுகின்றன. வந்த நாய் கீழே விழுந்து, காலை மேலே தூக்கித் தாழ்மையை ஒப்புக் கொண்டால், அந்தக் கோட்டத்து நாய் அதன்மேல் ஏறி நின்று சமாதானத்தை ஏற்றுக் கொள்கிறது. காரணம், அது அந்தக் கோட்டத்தின்மேல் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறது. ஆனால், வந்து சேர்ந்த நாய், அந்தக் கோட்டத்தில் தன்னுடைய ஆதிக்கத்தைச் செலுத்துவதில்லை. அதன் எதிரில் தன் எளிமையை ஒப்புக்கொள்கிறது; சண்டை நின்று போகிறது. அதிகமான ஆதிக்க உரிமையைப் பெறவேண்டும் என்ற பேராசை நாய்களுக்குள்ளும் இருக்கிறது. இதே மாதிரியான பேராசை, மனிதர்களிடையேயும் இருக்குமானால், மானுடம் என்ன வேண்டிக் கிடக்கிறது? அதிக அதிகாரத்தைப் பெறவேண்டும் என்ற பேராசை, கீழ்மக்களுக்கு உண்டாகிறது. மேன்மக்களாக இருப்போர், தம்முடைய கடமையை மிக்க ஆர்வத்துடன் ஒருமுனைப்போடு ஆற்றுகிறார்கள். கடமையைச் செய்வதால், அவர்களுடைய அதிகாரம் தானாகவே உயர்நிலையை அடைகிறது.

ஆராய்ந்து பார்த்தால் பெண்களின் அதிகாரம் குறைவாக இல்லை. அவர்கள் வீட்டின் தலைவி, கிருகலட்சுமி எனப்படுகிறார்கள். வீட்டிலுள்ள மற்றவர்கள் வெளியே சென்று வேலை செய்கிறார்கள். அவர்கள் வந்தவுடன் பெண்களிடமே தஞ்சமடைகிறார்கள். பெண்கள் வீட்டிலுள்ள எல்லா பிராணிகளுக்கும் அடைக்கலம் அளிப்பவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் பணிவிடை செய்கிறார்கள்; எல்லோரையும் காப்பாற்றுகிறார்கள். அதனால், அவர்களுக்கு அதிக அதிகாரம் இருக்கிறது. ஆனால், எப்போது அவர்கள் தம் கடமையிலிருந்து நழுவுகிறார்களோ, அப்போதுதான், மேலும் அதிகாரம் பெறவேண்டும் என்ற பேராசை அவர்கள் மனத்தில் தோன்றுகிறது.

***வினா:– விலையேற்றமான இந்தக் காலத்தில் பெண்களும் வேலைக்குப் போவதில் என்ன குற்றம்?***

*விடை:–* பெண்ணின் இதயம் மிருதுவானது. அதனால், அவள் வேலையிலுள்ள சிரமம், ஏச்சு, அவமானம் முதலியவற்றைப் பொறுத்துக் கொள்ள முடியாது. மாறுபட்ட விஷயம் சிறிதளவு வந்தாலுமே அவளுக்குக் கண்ணீர் வந்துவிடுகிறது. பணிமனையில் வேலை என்பதை அடிமைத்தனம் என்றாலும், கட்டுப்பட்ட கூலி என்றாலும், கீழ்மை என்றாலும் – எல்லாம் ஒன்றுதான். அடிமைத்தனத்தை ஆண்மகன் பொறுத்துக் கொள்வான்; பெண் பொறுத்துக் கொள்ளமாட்டாள். ஆகவே, வேலை, விவசாயம், வணிகம் முதலியன ஆண்களின் பொறுப்பு. வீட்டுவேலை பெண்மணிகளின் பொறுப்பு. பெண்களுடைய பெருமை, கௌரவம் வீட்டுவேலை செய்வதிலேயே இருக்கிறது. வெளியே வேலைக்குச் செல்வதைப் பெண்கள் அவமதிக்கிறார்கள். மானத்தோடு வருமானம் கிடைக்குமேயானால், அதில் குற்றம் ஏதுமில்லை. அதாவது, அவள் வீட்டிலிருந்தபடியே வாழ்க்கைக்கான சம்பாத்தியம் செய்யலாம் – கம்பளிச்சட்டை (ஸ்வெட்டர்) பின்னுதல், துணி தைத்தல், ஊசி–நூல் வேலை, தையல் பூவேலை (எம்பிராய்டரி) போடுதல், பகவானுடைய படங்களை அலங்கரித்தல் முதலானவைகளைச் செய்யலாம். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதால், அவள் யாருக்கும் அடிமையாகவோ, சார்ந்திருப்பவளாகவோ ஆவதில்லை.



# 6. மகாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள்

*ப்$_3$ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் கு$_3$ர்வங்க$_3$நாக$_3$ம: ।*
*மஹாந்தி பாதகாந்யாஹு: ஸம்ஸர்க$_3$ஶ்சாபி தை: ஸஹ ॥*
*(மநுஸ்ம்ருதி 11/54)*

பிராமணனைக் கொலை செய்தல், கள் குடித்தல், தங்கம் முதலியவைகளைத் திருடுதல், குருவின் மனைவியோடு உறவு கொள்ளுதல் – இவை நான்கும் மகாபாவம். இந்த நான்கு மகாபாவங்களில் ஏதேனும் ஒரு மகாபாவத்தைச் செய்கிறவனுடன், ஒருவன் மூன்றாண்டு வரை உடனிருந்தால், அந்த மகாபாவிக்கு ஏற்படும் பலனே, அவனுக்கும் கிடைக்கும்.†

## 1. பிராமணனைக் கொலை செய்தல்

நான்கு வர்ணங்களுக்கும் ஆசார்யன் பிராமணன் – *'வர்ணாநாம் ப்$_3$ராஹ்மணோ கு$_3$ரு: ।'* பிராமண வர்ணத்தினர் மூலமாக சாஸ்திர அறிவெனும் ஒளி எவ்வளவு உண்டாகியிருக்கிறதோ, அத்தனை ஒளி வேறு எந்த வர்ணத்தினர் மூலமாகவும் ஏற்படவில்லை. அதனால், பிராமணனைக் கொல்வது மகாபாவம். இவ்விதமே, எவரால் உலகத்திற்கு நன்மை உண்டாகிறதோ, அப்படி நற்பணி புரிவோரையும், கடவுள் பக்தர்களையும், பசு முதலியவைகளையும் கொல்வது மகாபாவம். காரணம் என்னவென்றால், எவர் மூலமாக மற்றவர்களுக்கு எவ்வளவு அதிகமான நன்மை ஏற்படுகிறதோ,

---

† *ஸ்தேநோ ஹிரண்யஸ்ய ஸுராம் பிப$_3$ம்ஶ்ச கு$_3$ரோ–ஸ்தல்பமாவஸந்ப்$_3$ரஹ்மஹா சைதே பதந்தி சத்வார: பஞ்சமஶ்சாசரம்ஸ்தைரிதி ॥*
*(ச$_2$ாந்தே$_3$ாக்$_3$ய உபநிஷத்$_3$ 5/10/9)*

அப்படிப்பட்டவரைக் கொல்வதால், அந்த அளவுக்குப் பாவமும் அதிகமாக ஏற்படுகிறது.

## 2. கள் குடித்தல்

புலால், முட்டை, புகைப்பிடித்தல், போதை முதலிய தூய்மையில்லாததும் மற்றும் மயக்கம் தரும் பொருட்களை அருந்துவதும் பாவமாகும். ஆனால், கள் குடித்தல் மகாபாவமாகும். காரணம், மனிதனுடைய உள்ளத்தில் உள்ள நல்லுணர்வுகளையும், அறத்தின்பாலுள்ள ஈடுபாடு, ஸம்ஸ்காரத்தையும் குடிப்பழக்கம் அழித்துவிடுகிறது. இதனால், மனிதன் மாபெரும் வீழ்ச்சியை நோக்கிப் போகிறான்.

கள் தயாரிப்பில் எண்ணிறந்த உயிர்களின் கொலை நடக்கிறது. கங்கை நதி எல்லாவற்றையும் சுத்தப்படுத்தும். ஆனால், கங்கை நதியில் கள் வைத்திருந்த பாத்திரத்தைக் கழுவினால், அது சுத்தமாவதில்லை. கள் வைத்திருந்த பாத்திரமே இவ்வளவு கெட்டுப் போகுமானால், கள்ளைக் குடிப்பவன் எவ்வளவு கெட்டுப் போவான்? இதற்கு எல்லையே இல்லை. இஸ்லாமிய மதத்தில், இந்த விஷயம் கூறப்பட்டிருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதாவது, சரீரத்தின் எந்த உறுப்பில் கள் ஒட்டிக் கொள்கிறதோ, அந்த உறுப்பின் தோலை வெட்டி எறிந்துவிட வேண்டும்.

***வினா:–* இப்போது ஆங்கில முறை மருந்துகளில் மயக்கப்பொருள் சேர்க்கப்படுகிறது. உடல் நலத்திற்காக, மருந்து என்ற வடிவத்தில் அவைகளை அருந்துவது மகாபாவமாகிவிடுமா?**

*விடை:–* எவைகளில் மயக்கப் பொருள் உள்ளதோ, அந்த மருந்துகளை உண்பதால் மகாபாவம் ஏற்படத்தான் செய்யும்.

***வினா:–* குடும்பத்தில் ஒருவர் கள் குடிக்கிறார். அவருடன் கூடவே இருப்பதால், குடும்பத்தில் எல்லோருக்கும் மகாபாவம் ஏற்படுமா?**

**விடை:–** இல்லை. குடும்பத்தார்களின் பார்வையில், அவர் அந்தக் குடும்பத்துக்காரர். ஆதலால், அவர்கள் கள் குடிப்பவரோடு உடனிருப்பவர்கள் அல்லர். மாறாக, அவரைச் சார்ந்து இருப்பதால், அவருடன் உறவு கொண்டுள்ளார்கள். கணவன் கள் குடிக்கிறான்; மனைவி இரவு–பகலாய் அவனுடன் இருக்க வேண்டியிருக்கிறது. என்றாலும், மனைவிக்கு மகாபாவம் ஏற்படுவதில்லை. ஏனென்றால், அவள் குடிகாரனோடு உறவு கொள்ளவில்லை; ஆனால், அவனுக்குக் கட்டுப்பட்டவள். ஆதலால், அவனுடன் இருக்கிறாள். மன ஒப்புதலுடன் உறவாடுவதன் மூலமே தீய உறவின் குற்றம் ஏற்படும்.

***வினா:–* முன்பு அறியாமையினால் கள் குடித்து வந்தவன், இப்போது தெளிவு பெற்றுவிட்டான் எனில், மகாபாவத்திலிருந்து எவ்வாறு சுத்தப்படுத்திக் கொள்வது?**

**விடை:–** அவன் உண்மையான உள்ளத்தோடு வருத்தப்பட்டு, கள் குடிப்பதை அடியோடு விட்டுவிட வேண்டும். 'இன்று முதல், இனி ஒருபோதும் கள் குடிக்க மாட்டேன்' என்று உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் அவனுடைய பாவம் மன்னிக்கப்படும். ஜீவன் சுயமாகத் தூய்மையுடையது. ஆதலால், ***'சேதந அமல ஸஹஜ ஸுக₂ராஸீ ||'*** – மாசுகளைக் களைந்தவுடன் நிரந்தரமாக உள்ள, தூய்மை அடையப்பட்டு விடுகிறது; அது சுத்தமாகிறது.

## 3. களவு

எந்த ஒரு பொருளையும் திருடுவது பாவம். ஆனால், தங்கம், வைரம் முதலிய விலையுயர்ந்த பொருட்களைத் திருடுவது மகாபாவம். எந்தப் பொருளுக்கு எத்தனை அதிக விலைமதிப்பு இருக்கிறதோ, அந்தப் பொருளைத் திருடுவது, அந்த அளவுக்குப் பாவம்.

## 4. குருவின் மனைவியோடு உறவு கொள்ளல்

விந்து (பிரம்மசரிய) அழிவுக்கு எத்தனை வழிகள் உண்டோ, அவை அனைத்துமே பாவம்தான்.† அதிலும், குருவின் மனைவியைப் புணர்தல் மகாபாவம். நமக்குக் கல்வியைக் கொடுக்கின்ற, நம்முடைய வாழ்க்கையை மாசற்றதாக ஆக்குகின்ற ஆசார்யருடைய மனைவி, அன்னையைக் காட்டிலும் உயர்ந்தவர். அதனால், அவரிடம் முறைகேடாக நடப்பது மகாபாவம்.

பிற பெண்களோடு உடலுறவு கொள்வதும் பெரும் பாவம்தான். அதனால்தான் இதை விபசாரம் – விசேஷ அபிசாரம் (இம்சை) – என்று சொல்லப்பட்டிருக்கிறது. கணவன் பிற பெண்ணோடு உறவு கொண்டாலும், மனைவி வேறு ஆடவனுடன் உறவு கொண்டாலும், தாய்–தந்தை, சகோதர–சகோதரி முதல், மாமனார் வீட்டில் மாமனார், மாமியார், மைத்துனர் முதலியோருக்கும் துயரம் உண்டாகிறது.

---

† விந்துவின் ஒரு துளியில் ஆயிரக்கணக்கான உயிர்கள் உள்ளன. பெண்ணுறவில் வெளியேறும் விந்துவில் கர்ப்பப் பைக்குப் போய்ச் சேரும் உயிரணு மட்டுமே கர்ப்பமாகிறது. மற்ற எல்லா உயிரணுக்களும் இறந்து போகின்றன. அங்கு கொலைபாவம் ஏற்படுகிறது. பிள்ளை பெறவேண்டும் என்ற நோக்குடன் மட்டும், மாதவிலக்குக்குப் பின் பெண்ணுறவு கொள்வதில் பாவம் ஒட்டுவதில்லை. (பாவம் உண்டாகிறது; ஆனால், ஒட்டிக் கொள்வதில்லை.) ஏனென்றால், அது சாஸ்திரத்தின், தர்மத்தின் அனுமதி பெற்றது. ***'ஸ்வப$_4$ாவநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி$_3$ஷம் ॥'*** ***(கீ$_3$தா 18/47); 'த$_4$ர்மாவிருத்$_3$தே$_4$ா பூ$_4$தேஷு காமோऽஸ்மி' (கீ$_3$தா 7/11).*** ஆனால், இன்பநுகர்ச்சிக்காகப் பெண்ணுறவு கொண்டால், அந்த உயிரணுக்கொலையின் பாவம் ஏற்படவே செய்யும்.

***ஏக ப$_3$ார ப$_4$க$_3$ பே$_4$ாக$_3$ தே, ஜீவ ஹதை நௌ லாக$_2$ ।***
***ஜந மநோர நாரீ தஜீ, ஸூந கே$_3$ாரக$_2$ கீ ஸாக$_2$ ॥***

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதம், இரண்டு குடும்பத்தாருக்கும் துயரம் கொடுப்பது பாவம். மேலும், தடை செய்யப்பட்டுள்ள இன்பங்களை அனுபவிப்பதால், சாஸ்திரம், தர்மம், சமுதாயம், குலம் முதலியவைகளின் கௌரவத்தைக் குலைப்பதும் பாவம். இந்த இரண்டு பாவங்களும் ஒன்றாகவே நிகழ்வதால், பிற பெண்ணுறவு அல்லது பிற ஆணுறவு கொள்வது விசேஷமான அபிசாரம் (தவறு), மகாபாவம். 'வேறு பெண்ணுடன் உடலுறவு கொள்வதால், மனத்தில் உள்ள தெய்வநம்பிக்கை அழிந்து போகிறது. பேரழிவுக்கு முக்கிய காரணமான அவநம்பிக்கை வந்து சேர்கிறது' என்று தன்னுடைய அனுபவத்தை அறிவாளியான ஒரு பெரிய மனிதர் கூறியிருக்கிறார்.

இந்து, இஸ்லாமியர், கிறிஸ்தவர் ஆகிய யாராக இருந்தாலும், இப்படிப்பட்ட பெரும்பாவங்களை விலக்கிவிட வேண்டும். பின்னால் கீழ்ப்பிறவி ஏற்படாவண்ணம், பூத–பிரேத பிறவியை அடையாதவண்ணம், குறைந்தபட்சம் மகாபாவங்களிலிருந்து காத்துக் கொண்டால்தான், மனித உடல் பெற்றது பயனுடையதாகும்.

## கருச்சிதைவு, மகாபாவத்தைப்போல் இருமடங்கு பாவம்

பிராமணனைக் கொல்வது எப்படி மகாபாவமோ, அப்படியே கருச்சிதைவு செய்வதும் மகாபாவம்தான். சாஸ்திரத்தில், பிரம்மஹத்தியைப்போல் கருச்சிதைவு செய்வதும் இருமடங்கு பாவகரமானது என்று சொல்லப்பட்டிருக்கிறது—

*யத்பாபம் ப்$_3$ரஹ்மஹத்யாயா*
*த்$_3$விகு$_3$ணம் க$_3$ர்ப$_4$பாதநே ।*
*ப்ராயஶ்சித்தம் ந தஸ்யாஸ்தி*
*தஸ்யாஸ்த்யாகே$_3$ா விதீ$_4$யதே ॥*

**(பராஶரஸ்ம்ருதி 4/20)**

'பிராமணனைக் கொல்வதால் எவ்வளவு பாவம் ஏற்படுகிறதோ, அதைப்போல் இருமடங்கு பாவம் கருச்சிதைவு செய்வதால்

ஏற்படுகிறது. கருச்சிதைவு செய்வதால் ஏற்பட்ட மகாபாவத்திற்கு, எவ்விதச் சாந்திபரிகாரமும் இல்லை. ஆகவே, கருச்சிதைவு செய்யவே கூடாது.'

பகவான், ஜீவனுக்கு மிகவும் அன்புடன் மனித உடலைத் தருகிறார். கருத்தடை அறுவை சிகிச்சை, கருத்தடை உபகரணங்கள், கர்ப்பத்தடுப்பு மருந்து, கருச்சிதைவு முதலியவை மூலமாக ஜீவன், மனித உடல் எடுக்கவிடாமை; தன்னுரிமையற்ற அந்த ஜீவன், பிறப்புகூட அடையவிடாமை; பிறப்பதற்கு முன்பே அழித்துவிடுதல் – இவையனைத்தும் மிகப்பெரிய பாவச் செயல்கள். எந்தக் குற்றமும் செய்யாத அந்த ஆதரவற்ற ஜீவனை அழித்துவிடுவது, அதற்கு இழைக்கப்படும் மிகப்பெரிய அநீதி அல்லவா? அந்த ஜீவன், மனித சரீரம் எடுத்து, என்னென்ன நல்ல காரியங்கள் செய்வதாக இருந்ததோ, சமுதாயத்திற்குப் பணி செய்வதாக இருந்ததோ, தன்னை உயர்த்திக் கொள்வதாக இருந்ததோ! ஆகவே, பிறவி எடுப்பதற்கு முன்பே அதனை அழிப்பது என்பது மிகக் கொடுமையான அநீதி, மிகப்பெரிய பாவம். தன்னுடைய ஆன்மிக உயர்வு என்பது நன்மைக்கான செயல்கள் செய்யாததே குற்றமும் பாவமும் எனும்போது, மற்றவர் உயர்வுக்கான வாய்ப்பைக் கொடுக்காமலிருப்பது எவ்வளவு பெரிய பாவம்? இத்தகைய மகாபாவம் செய்கிற ஆண்–பெண்களுக்கு, அடுத்து வரும் பிறவிகளில் குழந்தைகளே பிறக்காது. அவர்கள் குழந்தை பெறாமல் பல பிறவிகளுக்கு அழுது கொண்டேயிருப்பார்கள்.

ஒரு யஜமானர், நல்ல வேலைக்காரர்களை வேலை நீக்கம் செய்து கொண்டிருந்தால், பிறகு, அவருக்கு நல்ல பணியாளர்கள் கிடைப்பதில்லை. அது போலவே, நல்ல யஜமானரைவிட்டு வேலைக்காரன் விலகிக் கொண்டிருந்தால், பிறகு, அவனுக்கு நல்ல யஜமானரே கிடைப்பதில்லை என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். நல்ல பக்தர்களையும் ஞானிகளையும் அடைந்தும், எவனொருவன், தன்னை மேம்படுத்திக் கொள்ளவில்லையோ, அவனுக்கு அப்படிப்பட்ட

நல்லுறவு கிடைக்காமல் போகும். எவர்களால் நன்மை உண்டாகியிருக்கிறதோ, அப்படிப்பட்ட மேலான துறவிகளை விலக்குகிறவன், அவர்களை இகழ்பவன், வெறுப்பவன் எவனோ, அவனுக்கு மீண்டும் அப்படிப்பட்ட பெரியோர்கள் கிடைக்க மாட்டார்கள். தாய்–தந்தையர் மகிழ்ச்சியுடன், பிள்ளைக்கு இனிப்புப் பண்டம் கொடுக்கிறார்கள். அவனோ, அந்த இனிப்புப் பண்டத்தைத் தின்னாமல் சாக்கடையில் எறிகிறான். இதற்குப் பின்னர், பெற்றோர்கள் அவனுக்கு இனிப்புப் பண்டங்களைக் கொடுப்பதில்லை அல்லவா? அதுபோலத்தான். அவ்விதமே பகவான் பேரன்புடன் மனித உடலைக் கொடுத்தும், மனிதன், அந்த உடலைக் கொண்டே பாவமும் செய்கிறான், தவறாகவும் பயன்படுத்துகிறான் என்றால், அவனுக்கு பகவான் மறுபடியும் மானிட சரீரம் கொடுக்க மாட்டார். தாய்–தந்தையர், அறியாப் பிள்ளையாயிற்றே என்று நினைத்து, குழந்தைக்கு மறுபடியும் இனிப்புக் கொடுக்கலாம். ஆனால், அறிந்து பாவம் செய்கிறவனுக்கு, பகவான் மறுபடி மனிதப்பிறவி கொடுக்க மாட்டார். இவ்விதமே, கர்ப்பச்சிதைவு செய்கிறவர்களுக்கு, பின்பு வரும் பிறவிகளில் பிள்ளைப்பேறு ஏற்படாது.

உலக உற்பத்தியின் துவக்கத்தில் பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் சின்மயீ சக்தி மூலப்பிரகிருதி (ஸ்ரீராதா), தன்னுடைய கர்ப்பத்தைப் பிரும்மாண்ட கோளத்தின் ஆழங்காண முடியாத நீர்நிலையில் எறிந்துவிட்டாள். இதைக் கண்டு பகவான், அவளுக்குச் சாபம் கொடுத்தார்— ''இன்று முதல் உனக்குப் பிள்ளைப்பேறு உண்டாகாது. இது மட்டுமல்ல. உன்னுடைய அம்சமாகப் பிறக்கும் தெய்விகப் பெண்களுக்கும் குழந்தைப்பேறு உண்டாகாது.''†

---

† *த்$_3$ருஷ்ட்வா டி$_3$ம்ப$_3$ஞ்ச ஸா தே$_3$வீ*
*ஹ்ருத$_3$யேந விபூ$_4$ஷிதா ।*
*உத்ஸஸர்ஜ ச கோபேந*
*ப்$_3$ரஹ்மாண்ட$_3$ம் கே$_3$ாலகே ஜலே ॥*

இதற்குப் பிறகு, மூலப்பிரகிருதி தேவியினுடைய நாக்கின் நுனியிலிருந்து சரஸ்வதி வெளிப்பட்டாள். பின்னர், சிறிது காலம் கழிந்ததும், அந்த மூலப்பிரகிருதி இரண்டு வடிவங்களாகத் தோற்றமளித்தாள். வலது பக்கத்தில் தோன்றியவள் 'லட்சுமி'யாகவும், இடது பக்கத்தில் தோன்றியவள் 'ராதை'யாகவும் ஆனார்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் அப்போது இரண்டு வடிவங்களில் வெளிப்பட்டார். வலது பாதியில் தோன்றியவர் 'நான்கு கைகளையுடைய விஷ்ணு'வாகவும், இடது பாதியில் தோன்றிவர் 'இரண்டு கைகளையுடைய கிருஷ்ண'னாகவும் ஆனார்கள்.‡ அப்போது பகவான் ஸ்ரீகிருஷ்ணன், லட்சுமி–சரஸ்வதி ஆகிய இருதேவியரையும் விஷ்ணுவுக்குப் பணிவிடை செய்யுமாறு ஆணையிட்டார். மூலப்பிரகிருதியிலிருந்து தோன்றியதால், லட்சுமிக்கும் சரஸ்வதிக்கும் மகப்பேறு

---

*த்$_3$ருஷ்ட்வா க்ருஷ்ணஶ்ச தத்த்யாக$_3$ம்*
*ஹாஹாகாரம் சகார ஹ ।*
*ஶஶாப தே$_3$வீம் தே$_3$வேஶ:*
*தத்க்ஷணம் ச யதே$_2$ாசிதம் ॥*
*யதோऽபத்யம் த்வயா த்யக்தம்*
*கோபஶீலே ஸுநிஷ்டு$_2$ரே ।*
*ப$_4$வத்வமநபத்யாபி*
*சாத்$_3$யப்ரப்$_4$ருதிநிஶ்சிதம் ॥*
*யா யாஸ்த்வத$_3$ம்ஶரூபா ச*
*ப$_4$விஷ்யந்தி ஸுரஸ்த்ரிய: ।*
*அநபத்யாஶ்ச தா: ஸர்வா:*
*தத்ஸமா நித்யயௌவநா: ॥*
***(ப்$_3$ரஹ்ம வைவர்த புராணம். ப்ரக்ருதி 2/50–53)***

‡ *அத$_2$ காலாந்தரே ஸா ச*
*த்$_3$வித$_4$ாரூபா ப$_3$பூ$_4$வ ஹ ।*
*வாமார்த்$_3$த$_4$ாங்க$_3$ா ச கமலா*
*த$_3$க்ஷிணார்த்$_3$த$_4$ா ச ராதி$_4$கா ॥*

ஏற்படவில்லை.† இதற்குப் பிறகு ஸ்ரீகிருஷ்ணனின் மயிர்க்கால்களிலிருந்து எண்ணற்ற கோபர்கள் வெளிப்பட்டார்கள். அவ்விதமே, ராதையின் ரோமக்கால்களிலிருந்து எண்ணற்ற கோப கன்னிகைகள் தோன்றினார்கள். பகவானுடைய சாபத்தின் காரணமாக, இந்தக் கோப கன்னிகைகளுக்கும் மகப்பேறு உண்டாகவில்லை.‡ இந்தக் கதையிலிருந்து தெளிவாகிற விஷயம் என்னவென்றால், எந்தப் பெண், கர்ப்பத்தைச் சிதைக்கிறாளோ, அவள் வருகிற பிறவிகளில் பிள்ளைப் பேறாகிய இன்பத்தைக் காண்பதில்லை.

***வினா:– கருச்சிதைவு செய்த பெண்கள் மீண்டும் கர்ப்பமுறுகிறார்கள்; குழந்தைப் பெற்றுக்கொள்கிறார்கள் என்பதைப் பார்க்கிறோம். அதனால், கருச்சிதைவு செய்து கொண்டவர்களுக்கு, மீண்டும் மகப்பேறு உண்டாகாது என்பதை எப்படி ஏற்றுக்கொள்வது?***

---

*ஏதஸ்மிந்நந்தரே க்ருஷ்ண:*
*த்$_3$வித$_4$ாரூபோ ப$_3$பூ$_4$வ ஹ ।*
*த$_3$க்ஷிணார்த்$_3$த$_4$ஶ்ச த்$_3$விபு$_4$ஜோ*
*வாமார்த்$_3$த$_4$ஶ்ச சதுர்பு$_4$ஜ: ॥*
**(ப்ரக்ருதி 2/56,57)**

† *அநபத்யே ச தே த்$_3$வே ச*
*யதோ ராத$_4$ாம்ஶஸம்ப$_4$வா: ।*
**(ப்ரக்ருதி 2/60)**

‡ *ராத$_4$ங்க$_3$லோமகூபேப்$_4$யோ*
*ப$_3$பூ$_4$வுர்கோ$_3$பகந்யகா: ।*
*ராத$_4$ாதுல்யாஶ்ச ஸர்வாஸ்தா:*
*ராத$_4$ாதுல்யா: ப்ரியம்வத$_3$ா: ॥*
*ரத்நபூ$_4$ஷணபூ$_4$ஷாட்$_4$யா:*
*ஶஶ்வத் ஸுஸ்தி$_2$ரயௌவநா: ।*
*அநபத்யாஶ்ச தா: ஸர்வா:*
*பும்ஸ: ஶாபேந ஸந்ததம் ॥*
**(ப்ரக்ருதி 2/64,65)**

*விடை:–* இந்தப் பிறவிக்கான பிராரப்த வினை தொடங்கியாகி விட்டது. அந்த பிராரப்த வினைக்கேற்ப அவர்களுக்கு மகப்பேறு உண்டாகக் கூடும். ஆனால், அடுத்தப் பிறவியில் (புதிய பிராரப்த வினை தொடங்கியதும்) அவர்களுக்குக் குழந்தைப்பேறு உண்டாகாது. இந்தப் பிறவியில் செய்யப்பட்ட கருச்சிதைவு என்னும் மகாபாவத்தின் பயனை, அவர்கள் அடுத்த ஜென்மங்களில் அனுபவிக்க வேண்டும்.

***வினா:– கரு நழுவுதல், கருச்சிதைவு, சிசுக்கொலை – இம்மூன்றுக்கும் உள்ள வேறுபாடு என்ன?***

*விடை:–* கருப்பையில் உயிரணு உடலாக உருவெடுக்கும் முன்னரே, சுக்ல–சோணிதம் வெளியேறிவிட்டால், அது 'கரு நழுவுதல்' எனப்படுகிறது. கருப்பையில் உடல் உருவாக ஆரம்பித்தபின் அதை வெளியேற்றினால், அது 'கருச்சிதைவு' எனப்படுகிறது. கருப்பையில் உள்ள உயிருக்கு கை, கால், தலை முதலிய உறுப்புக்கள் தோன்றி, இது ஆண் குழந்தை அல்லது இது பெண் குழந்தை என்ற வேற்றுமை தெளிவாக உண்டாகத் தொடங்கும்போது, அதை வீழ்த்துதல் 'சிசுக்கொலை' எனப்படுகிறது. கருக்கலைப்பு, கருச்சிதைவு, சிசுக்கொலை – இம்மூன்றையும் எந்த முறையில் செய்தாலும் மகாபாவம் ஏற்படுகிறது. ஆனால், தானாகவே கர்ப்பம் நழுவி விழுந்தால், அதனால் பாவம் ஏற்படாது. உலகத்தில் அநேக உயிர்கள் தாமாகவே இறந்து போகின்றன. ஆனால், அந்தப் பாவம் நம்மைச் சேர்வதில்லை. ஏனென்றால், நாம் அவைகளை கொல்லவும் இல்லை; கொல்ல விரும்பவும் இல்லை.

***வினா:– கருப்பையில் ஜீவன் (உயிர்) தங்கியிருக்கவில்லை; பின்னர்தான் வருகிறது. அப்படியிருக்கையில், கருச்சிதைவு என்ற பாவம் எப்படி ஏற்படும்?***

*விடை:–* ஆடவனுடைய வீரியத்தின் ஒரு துளியில் ஆயிரக்கணக்கான உயிர்கள் உள்ளன. அவைகளில் எந்த உயிர், சோணிதத்துடன் ஒட்டிக்கொண்டு கருப்பையை

அடைகிறதோ, அதுவே வளர்ந்து கருவாக ஆகிறது. உயிரணு இல்லாமல் வீரியம் சோணிதத்துடன் ஒட்டிக்கொள்ளவும் இயலாது; கரு வளரவும் இயலாது. உயிரணுவில் பிராணசக்தி முதலில் உள்ளுறையாக மறைந்திருக்கிறது. கர்ப்பப்பையில் வந்தவுடன் உயிராற்றல் திடமாக மாறுகிறது; கரு வளர ஆரம்பிக்கிறது. கரு வளரும்போது பிராணசக்தி சிறப்பாகத் தெரிய ஆரம்பிக்கிறது. கர்ப்பத்தில் அசைவு ஏற்படுகிறது. அப்போது 'கர்ப்பத்தில் உயிர் வந்துவிட்டது' என்று மக்கள் சொல்கிறார்கள்.

**வினா:–** ***ஒருத்தியினுடைய கரு, தானாகவே விழுந்து விட்டால்?***

**விடை:–** இது ஒரு நோய். இதற்கான சிகிச்சை பெற வேண்டும். ஒரு பெண்ணின் ஐந்தாறு கரு விழுந்துவிட்டது. ஒரு பெரியவர், அவளுடைய குடும்பத்தாரிடம், ''அவள் கருப்பையில் உஷ்ணம் அதிகமாக இருப்பதால் கரு வெந்துபோய் விழுந்துவிடுகிறது; இதற்கு ஒரு வழி செய். அவள் கருவுற்றதும், இம்மாதிரியாகப் பசும்பால் குடிக்கச் செய். பால் கறப்பவன் ஒரு பாத்திரத்தைத் துணியால் மூட வேண்டும்; துணியின் மேல் குழைவாகப் பொடி செய்யப்பட்ட கற்கண்டை வைக்கவேண்டும். அதன்மேல் பசுவைக் கறக்கவேண்டும். அதாவது, கற்கண்டுப்பொடி, பாலுடன் கலந்து, பாத்திரத்தை அடையவேண்டும். பசு எதிரிலேயே அமர்ந்து கறப்புச் சூட்டுடன்கூடிய பாலை அப்போதே, அந்தப் பெண் நாள்தோறும் காலையில் வெறும் வயிற்றில் ஒருமாத காலம் அருந்த வேண்டும்'' என்று கூறினார். அந்தப் பெரியவர் கூறியபடி, அந்தப் பெண் பாலைக் குடித்தாள். அவளுக்குக் கரு சிதையவில்லை; மகப்பேறும் உண்டாயிற்று. அந்தக் குழந்தை இப்போதும் உயிரோடிருக்கிறது.

இந்த நோயை நீக்குவதற்குப் பல மருந்துகள் உள்ளன. திறமையான, அனுபவம் பெற்ற ஆயுர்வேத வைத்தியரிடமிருந்து அவைகளைப் பெறவேண்டும்.

***வினா:–*** ***ஒரு நோயின் காரணமாகக் கருச்சிதைவு செய்விப்பது இன்றியமையாததாகிவிட்டால், என்ன செய்வது?***

***விடை:–*** கருச்சிதைவு செய்வதால் உண்டாகும் பாவம் ஏற்படத்தான் செய்யும். பெண் பிழைத்துக் கொள்ளவேண்டும் என்பதற்காகக் கருச்சிதைவு செய்விப்பதற்கு மக்கள் உடன்படுகிறார்கள். ஆனால், இப்படிச் செய்யாமல் தகுந்த சிகிச்சை அளிக்க வேண்டும். எது நடக்க வேண்டுமோ, அது நடக்கத்தான் போகிறது. பெண் மரணமடைய வேண்டும் என்றிருந்தால், கர்ப்பத்தைக் கலைத்தாலும் அவள் மரணமடையத்தான் செய்வாள். அவளுக்கு இன்னும் ஆயுள் இருந்தால், கர்ப்பத்திற்குச் சேதம் விளைவிக்காமல் இருந்தாலும், அவள் மரணமடைய மாட்டாள். இறப்பு என்பது உரிய காலம் வந்ததும் ஏற்படவே செய்யும், காரணம் எதுவாக இருந்தாலும் சரி. ஆகவே, ஒருபொழுதும் கருச்சிதைவு செய்விக்கக் கூடாது.

***வினா:–*** ***கன்னிப்பருவத்தில் கர்ப்பமுற்றால், அதைக் கலைக்கலாமா, கூடாதா?***

***விடை:–*** எவனுடைய உறவினால் கருத்தரித்தாளோ, அவனுக்கே திருமணம் செய்து கொடுத்துவிட வேண்டும். திருமணம் செய்ய முடியாமற்போனாலும், அந்தக் கருவை அழித்துவிடக் கூடாது. அதைப் பாதுகாத்து, குழந்தை கொஞ்சம் வளர்ந்ததும் அனாதை இல்லத்தில் சேர்த்துவிட வேண்டும். அல்லது யாரேனும் தத்து எடுத்துக்கொள்ள விரும்பினால், அக்குழந்தையைக் கொடுத்துவிட வேண்டும்.

முரடன் ஒருவன், ஒரு கன்னிப்பெண்ணிடம் வலுக்கட்டாயமாக நடந்துகொண்டால், அந்த முரடனுக்கு மிகவும் பாவம் ஏற்படுகிறது. கன்னிப்பெண், புணர்ச்சி இன்பத்தை நுகர்ந்திருந்தால், அந்த அளவுக்கு அவளுக்கும் பாவம் சம்பவிக்கும். ஏனெனில், எல்லாப் பாவமும் இன்பநுகர்ச்சி ஆசையால்தான் ஏற்படுகிறது.

கன்னிப்பெண் கர்ப்பமடைந்தால், அவளுடைய தாய்—தந்தையருக்கும், கவனக்குறைவு என்ற காரணத்தால் பாவம் ஏற்படுகிறது. ஆதலால், ஆரம்பத்திலிருந்தே பெண்ணுக்குத் தன்னுரிமை கொடுக்காமல், நன்றாகப் பாதுகாத்து மிகுந்த கவனத்துடன் இருப்பது பெற்றோரின் கடமையாகும்.

***வினா:– ஊர் மக்களுக்குத் தெரிந்துவிட்டால், அந்தப் பெண்ணுக்குக் கெட்ட பெயர் ஏற்படும். அவளை யாரும் மணந்து கொள்ள மாட்டார்கள். அப்போது அவள் என்ன செய்வது?***

*விடை:–* பாவம் செய்தாகிவிட்டது எனும்போது, அவப்பெயரைத் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். கருவைச் சிதைத்தல், தற்கொலை செய்து கொள்வது, வீட்டிலிருந்து ஓடிப்போவது ஆகிய மூன்று கொலைகளிலிருந்து (அதாவது பாவத்திலிருந்து) தப்புவதற்காகக் கெட்ட பெயரை ஏற்பதே மேல். அந்தக் கன்னியை மணந்து கொள்ள யாரும் முன் வரவில்லையென்றால், அவள் வீட்டிலே இருந்து கொண்டு பக்தி—பஜனை பண்ணட்டும். இதனால், அவளுடைய பாவத்திற்குப் பரிகாரம் செய்ததாகவும் ஆகும்.

***வினா:– திருமணமான பெண்ணிடம் வலுக்கட்டாயம் செய்து, அதனால் அவள் கருத்தரித்தால் என்ன செய்வது?***

*விடை:–* முடிந்த வரையில் அந்தப் பெண் மௌனமாக இருப்பதுதான் சிறந்தது. கணவனுக்கு விஷயம் தெரிந்து விட்டால், அவனும் மௌனமாக இருக்க வேண்டும். இவ்விஷயத்தில் இருவரும் மௌனமாக இருந்தால்தான் நன்மை. உண்மையில், இப்படிப்பட்ட சம்பவம் நிகழாவண்ணம் ஆரம்பத்திலிருந்தே கவனமாக இருந்திருக்க வேண்டும். கருவைச் சிதைப்பதை நாம் ஒருபோதும் அனுமதிக்க மாட்டோம். காரணம், கருவைக் கொல்வது மகாபாவம்.

***வினா:– கருத்தடை செய்து கொள்வதில் என்ன தவறு?***

*விடை:–* கருத்தடை செய்து கொண்டவர்களில் பெரும்பாலோருக்கு உடலும் இருதயமும் பலவீனப்பட்டுப்

போகின்றன என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அவர்களுடைய உடம்பில் பலவித நோய்கள் தோன்றியுள்ளன; இருக்கின்றன; ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும். எருதாக மாற்றப்பட்டுவிட்ட கன்றுகளிடம் ஆண்மை அழிந்து போவாதால், அவற்றின் மாமிசத்தில் எருதாக மாற்றப்படாத கன்றுகளின் மாமிசத்தில் உள்ள அளவுக்கு சக்தி இல்லை என்பதையும் காண்கிறோம். காயடிக்கப்பட்ட கன்றுகளின் மாமிசம், ஈராக், ஈரான் முதலிய நாடுகளில் மலிவாக விற்கப்படுகின்றது என்றும், காயடிக்கப்படாத கன்று மாமிசம் அதிக விலைக்கு விற்கப்படுகிறது என்றும் நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆதலால், கருத்தடை செய்து கொள்வதன் மூலமாக ஆண்மையைத் தடுத்து நிறுத்துவதால், ஆண்மையை இழப்பதால், உடம்பின் பலம் குறைகிறது; மகிழ்ச்சி, பயமின்மை முதலிய மனோபலமும் போய்விடுகிறது.

கருத்தடை மூலமாகத் தன்னுடைய ஆண் தன்மையை இழக்கச் செய்கிறவர்கள் நபும்ஸகர்கள் (அலிகள்) ஆவார்கள். அவர்கள் மூலமாக பிதிரர்களுக்குச் செய்யும் நீர்க்கடன் போய்ச் சேராது.† இத்தகைய நபர்களைப் பார்ப்பதுகூட அமங்கலமானதாகக் கருதப்படுகிறது. பிரயாணம் புறப்படும் போது இம்மாதிரி நபரைப் பார்த்தால், அது அபசகுனம் ஆகும்.

கருத்தடை செய்து கொள்ளும் பெண்களில் பெரும்பான்மையோருக்குச் சிவப்பு–வெள்ளைத் தழும்புகள் தோன்றியுள்ளன. இதற்குச் சிகிச்சையே கிடையாது. ராஜஸ்தானில் கருத்தடை செய்துகொண்டவர்களில், இதுவரை நூற்றுக்கணக்கான பெண்கள் இறந்துவிட்டிருக்கிறார்கள். பலருக்கு மேலே சொன்ன நோய் வந்திருக்கிறது. இதற்கெல்லாம் மருத்துவர்கள் பதில் சொல்லி இருக்கிறார்கள். இந்தத் தகவல் செய்தித்தாள்களிலும் வந்திருக்கிறது. கருத்தடை

---

† *அங்க$_3$ஹீநாப்ரோத்ரியஷண்ட$_4$ஶூத்$_3$ரவர்ஜம்* ।

***(காத்யாயநப்ரௌதஸூத்ரம் 1/1/5)***

செய்து கொள்வதால் பெண்களுக்கு உடல்நலம் குறைகிறது; உட்கார்ந்து–எழுந்திருக்கும் போது கண்களின் எதிரில் இருள் சூழ்கிறது; மார்பிலும் முதுகிலும் வலி தோன்றுகிறது; வேலை செய்யும் திறனும் போய்விடுகிறது. இப்படி மருத்துவர்கள் கூறுவதைக் கேட்டிருக்கிறோம்.

கருத்தடை செய்து கொள்ளும் பெண்ணுக்கு, அவளுடைய தாய்மை, அதாவது சூல்கொள்ளும் சக்தி போய்விடுகிறது. இம்மாதிரிப் பெண்களைப் பார்ப்பதும் தீமை; அபசகுனம். பகவானால் கொடுக்கப்பட்டுள்ள சக்தியை அழிப்பதற்கு யாருக்கும் உரிமை இல்லை. அதை அழிப்பது என்பது உரிமை மீறிய செயல்; குற்றம். கருத்தடை மூலமாகத் தன் தாய்மையை இழந்தவர்கள் பாவம் செய்கிறார்கள் என்பது நிச்சயம். ஆனால், கருத்தடை செய்து கொள்ளும்படி தூண்டுகிறார்களே, வற்புறுத்துகிறார்களே, அவர்கள் புதிய பாவத்தைச் செய்கிறார்கள். கீதையைப் படிப்பதால் மிக்க நன்மை ஏற்படுகிறது. ஆனால், கீதையைப் பிரசாரம் செய்வதால், அதைக் காட்டிலும் அதிக நன்மை ஏற்படுகிறது (கீதை 18/69) என்பதைப் போல, மற்றவர்களைக் கருத்தடை செய்து கொள்ளும்படி பிரசாரம் செய்கிறார்களே, அவர்கள் மிகப்பெரும் பாவம் செய்கிறார்கள். பசுவதை செய்வோரின் எண்ணிக்கையைப் பெருக்குவதில் உதவியாக இருப்பதன் மூலமாக, பசுவதைக்குண்டான பாவத்தில் பங்கு பெறுகிறார்கள். அப்பாவி சகோதரிகளுக்கு இந்த விஷயம் தெரியாது. ஆதலால், அவர்கள் அறியாமலே மிகப்பெரிய குற்றம், பாவம் செய்து விடுகிறார்கள். அவர்களை இந்தப் பாவத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்.

ஒருவன் ஏதோ ஒரு வழியில் குற்றம் இழைத்தால், அவனுடைய பிராணசக்தி விரைவில் அழிந்து போகிறது; அவனுடைய முடிவும் விரைவில் உண்டாகிறது. குற்றம், பாவம் செய்யும்போது அல்லது அப்படிச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் மனத்தில் தோன்றியதும், மூச்சு வேகமாக விட

ஆரம்பிக்கிறது; உயிர் அடங்கிப் போகிறது – இது கண்கூடான காட்சி. எவரும் இதை அனுபவித்து உணரலாம்.

கருத்தடை செய்து கொள்வது விபசாரத்திற்கு வழிகோலுவதாகும். இது மிகப்பெரிய பாவம். மிருகங்களைப் பலியிடுவது, கொலை செய்வது அபிசாரம் எனப்படுகிறது. அதைக் காட்டிலும் கொடுமையான அபிசாரத்தை, விபசாரம் என்கிறார்கள். இதனால், மனிதனுடைய தார்மிக–ஆன்மிகப்பற்று (உணர்வு) நசித்துப் போகிறது. அவனுக்குப் பெரிய வீழ்ச்சியும் ஏற்படுகிறது.

மனித உடல், பரமாத்மாவை அடைவதற்காகவே கிடைத்திருக்கிறது. அதை பரமாத்மாவை நோக்கி இட்டுச் செல்லாமல், உடலின்ப நுகர்ச்சிக்காகப் பெரிய பாவம் செய்வது, கருச்சிதைவு செய்வது, கருத்தடை செய்வது என்பது எவ்வளவு பெரிய பாவம்! கருச்சிதைவு, கருத்தடை செய்வதில், உடலின்பம் துய்த்தல் என்பதைத் தவிர வேறு என்ன இருக்கிறது? கருத்தடையால் யாருக்கேனும் ஏதாவது தார்மிக–ஆன்மிக நன்மை உண்டாகியிருக்கிறதா, உண்டாகுமா அல்லது உண்டாக முடியுமா? கருத்தடை செய்வதால் உடலின்பப் பற்றுதான் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. உடலின்பத்தில் இன்றைய மனிதனுக்கு உள்ள பெரும் ஈடுபாடு, மிருகங்களிடம்கூட இல்லை. உங்களுக்குக் குழந்தை வேண்டாம் என்றால் கட்டுப்பாட்டுடன் இருங்கள். உங்கள் உடலில் ஆற்றல் நிலைக்கும்; சுறுசுறுப்பும் இருக்கும். உங்களுக்குத் தர்மத்தில் ஈடுபாடு, ஈசுவரனிடம் நம்பிக்கை வரும். உங்களுடைய மனிதப்பிறவி பயனுடையதாக ஆகும். அடியார்கள் சொல்லியிருக்கிறார்கள்—

*கே ஶத்ரவ: ஸந்தி ந்ஜேந்த்$_3$ரியாணி*
*தாந்யேவ மித்ராணி ஜிதாநி யாநி* ॥
***(ப்ரஶ்நோத்தரீ 4)***

மனிதன் புலன்களுக்கு அடிமையாகிப் போனால், அந்தப் புலன்கள் அவனுக்கு எதிரிகளாகின்றன. அதனால், அவனுக்கு

இவ்வுலகும் அவ்வுலகும் வீணாகிறது. ஆனால், அவன் பொறிகளின் மேல் வெற்றி கொண்டால், அந்தப் பொறிகள் அவனுக்கு நண்பனாகின்றன. அதனால், அவனுடைய இவ்வுலக, அவ்வுலக வாழ்க்கை செம்மையாகிறது. பகவானும் கீதையில் கூறியிருக்கிறார்—

***உத்$_3$த$_4$ரேத$_3$ாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாத$_3$யேத் ।***
***ஆத்மைவ ஹ்யாத்மநோ ப$_3$ந்து$_4$ராத்மைவ ரிபுராத்மந: ॥***

***(கீ$_3$தா 6/5)***

''தன்னைக் கொண்டே தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும்; தன்னைத்தானே வீழ்த்திக் கொள்ளக்கூடாது. ஏனெனில், தனக்குத் தானேதான் நண்பன்; தனக்குத் தானேதான் பகைவன்.''

***வினா:– கருத்தடைச் செய்வதால் என்ன கேடு விளையும்?***

***விடை:–*** கருத்தடைச் செய்வதால் கேடான கேடு உண்டாகிறது. செயற்கையாகக் கருவை நழுவச் செய்வதாலும், கருச்சிதைவு செய்விப்பதாலும் பெண்ணின் உடம்பு கெட்டுப் போகிறது; நலக்குறைவு ஏற்படுகிறது. இளமைக்காலத்தில் உடல்நலக் குறைவினால் பாதிப்பு ஏற்படாவிட்டாலும், கொஞ்சம் வயது முதிர்ந்தபின் அது தலைகாட்டத் தொடங்கும். எதுவரையில் உடம்பில் நல்ல ரத்தம் ஓடிக் கொண்டிருக்கிறதோ, அதுவரை பலக்குறைவு தெரியாது. ரத்த ஓட்டம் குறைந்ததும் சக்திக் குறைவு தெரிய வரும். கருச்சிதைவினால் பலருக்கு வெள்ளை–வெட்டை உண்டாகின்றன. இதைத் தவிர, கருச்சிதைவு செய்வதால் ரத்தப்போக்குக்கு ஒரு வழி திறந்துவிடப்படுகிறது.

பெண்களுக்குப் பிரசவத்தால் உடம்பு நலிந்து விடுவதில்லை. ஏனெனில், பிள்ளைப்பேறு என்பது இயற்கையானது; குறிப்பிட்ட காலத்தில் ஏற்படுவது. இயற்கையான நிகழ்ச்சிகளால் நலிவு ஏற்படுவதில்லை; செயற்கையான நிகழ்ச்சியால் நலிவு ஏற்படுகிறது என்பது கருத்து.

**வினா:- ஓரிரு மகவு ஏற்பட்டதும் பெண் தாயாகிவிடுகிறாள். அதற்குப் பின் அவள் கருத்தடை செய்து கொள்வதில் என்ன தவறு?**

**விடை:-** அவள் முதலில் தாயாகிவிட்டாள் என்பது சரி. இப்போது கருத்தடை செய்துகொண்டு விட்டதும், அவளுக்குப் 'பெண்' என்ற பெயர்கூட இருக்காது. காரணம், சுக்ல– சோணிதம் சேர்ந்து, எவளுடைய வயிற்றில் கரு உருவாகிறதோ, அவளுக்குத்தான் 'பெண்' என்று பெயர். எவளால் கர்ப்பம் கொள்ள முடியாதோ, அவளுக்குப் பெயர் 'பெண்' அல்ல. அதேபோல் எவனால் கர்ப்பம் அளிக்க முடியாதோ, அவன் 'ஆடவன்' அல்ல. அறுவை சிகிச்சை மூலமாக மகப்பேற்றிற்கான சக்தியை அழித்துவிடுவதால், ஆடவனுக்குப் பெயர் 'அலி' என்றாகும். ஆனால், பெண்ணுக்கு என்ன பெயர் ஏற்படுமோ, நாம் அறியோம்!

குடும்பக்கட்டுப்பாடு, பெண்குலத்திற்குப் பெரிய அவமானம். ஏனென்றால், இதனால் பெண்குலம் வெறும் போகப் பொருளாக ஆக்கப்படுகிறது. ஒரு மனிதன் வேசியிடம் செல்கிறான் என்றால், அவனென்ன குழந்தையை விரும்பியா செல்கிறான்? ஒருவன், மனைவியிடமிருந்து குழந்தையை விரும்பவில்லை. மாறாக, இன்பம் அனுபவிக்க மட்டுமே விரும்புகிறான் என்றால், அவன் மனைவியை வேசியாக அல்லவா ஆக்கிவிட்டான்? இது என்ன, பெண்ணினத்திற்குப் பெருமை தரக்கூடிய விஷயமா? தாய்மையில்தான் பெண்ணினத்திற்குப் பெருமை இருக்கிறது; வெறும் போகப் பொருளாக இருப்பதில் அல்ல; அல்லவே அல்ல. கருத்தடை முதலியவற்றின் மூலமாக ஒரு பெண், தன் தாய்மை சக்தியை இழந்துவிட்டால், காலுக்குச் செருப்புப்போல உபயோகிக்கத்தக்க ஒரு பொருள் என்ற நிலையை அடைகிறாள். இது பெண்ணினத்திற்கு எவ்வளவு பெரிய அவமானம்; அவமதிப்பு.

**வினா:- இயற்கையாகவே மகப்பேறடையாத பெண்ணைக் குறை கூறலாமா, கூடாதா?**

**விடை:–** இயற்கையாகவே ஒருத்திக்குப் பிள்ளைப்பேறு ஏற்படவில்லையானால், அது அவளுடைய குற்றம் அல்ல. செயற்கை முறைகளால் பிள்ளைப் பேற்றுக்கான ஆற்றலை எவர்கள் அழிக்கிறார்களோ, அவர்களுக்கே பாவம் ஏற்படுகிறது.

***வினா:– கரு உருவாக முடியாதபடி, ஆணுறவுக்கு முன் மாத்திரை சாப்பிடுகிறார்களே, அந்தப் பெண்களுக்குப் பாவம் ஏற்படுமா?***

**விடை:–** ஜீவன், மனிதச் சரீரத்திற்குள் வந்து பரமாத்மாவை அடைய முடியும். தன்னையும் பிறரையும் கைதூக்கிவிட முடியும். ஆகவே, தன்னுடைய பாலுறவு ஆசைக்கு ஆட்பட்டு, அந்த ஜீவனுக்கு அப்படி ஒரு வாய்ப்பு ஏற்படாமல் செய்வது நிச்சயம் பாவம்தான். கீதையில் பகவான், 'ஆசையே – புலனின்ப வேட்கை, உல்லாச விருப்பம்தான் – எல்லாப் பாவங்களுக்கும் காரணம்' (3/37) என்று சொல்லியிருக்கிறார். இந்தப் புணர்ச்சி வேட்கைதான் எல்லாப் பாவங்களுக்கும் வேர் ஆகும். குடும்பக் கட்டுப்பாட்டின் நோக்கமே புணர்ச்சி இன்பம்தான். ஆகவே, மாத்திரைகள் சாப்பிட்டுக் குழந்தை பிறப்பதைத் தடுப்பது பாவம்தான்.

***வினா:– ஒரு மனைவி, தன் கணவனுக்குச் சொல்லாமலே கருச்சிதைவு செய்வித்துக் கொண்டால் என்ன செய்வது?***

**விடை:–** அந்த மனைவியை ஒரேயடியாக விலக்கிவிட வேண்டும் என்று அறநூல்களில் சட்டம் போடப்பட்டிருக்கிறது— ***'தஸ்யாஸ்த்யாகே$_3$ா விதீ$_4$யதே' (பராஶரஸ்ம்ருதி 4/20).***

கருச்சிதைவு செய்வது பெரிய பாவம். அதைத் தன் கணவனிடமிருந்து மறைப்பது குற்றம். மறைத்துச் செய்யப்படும் பாவத்திற்கு மிகக் கடுமையான தண்டனை கொடுக்கப்படும். குழந்தை ஆசை இல்லாவிட்டால் புலனடக்கத்தோடு இருக்க வேண்டும். புலனடக்கம் பாவம் (அநீதி) அல்ல. மாறாக, மிகப்பெரிய புண்ணியம், பெரிய தியாகம், உயர்ந்த தவம்.

***வினா:– தற்போதைய அரசு, கருச்சிதைவு, கருத்தடை ஆகியவற்றைப் பாவமாகக் கருதவில்லை. மாறாக,***

*நல்ல செயலாகக் கருதுகிறது. ஆகவே, இப்படிச் செய்கிறவர்களுக்குப் பாவம் ஏற்படாதா?*

*விடை:–* ஏற்றாலும் ஏற்காவிட்டாலும் பாவம் ஏற்படத்தான் செய்யும். எத்தனையோ பாவங்கள் ஏற்படுகின்றன. அவைகள் யாருடைய இசைவையும் இசைவின்மையையும் சார்ந்திருக்கவில்லை. பாவம் என்பது, அதாவது 'இந்தக் காரியம் பாவம்' என்ற நிர்ணயத்தில், வேதம், சாஸ்திரம், மேலோர் கூற்று ஆகியவைதான் உரைகல் ஆகும்.

பாவச் செயலைச் செய்வதால் பாவம் ஏற்படத்தான் செய்யும். அதனுடைய பலனை அனுபவிக்கவும் வேண்டும். பலி கொடுக்கப்படும் பிராணியின் பின்னங்கால்களை எந்த மரத்தில் கட்டி வைக்கிறார்களோ, அந்த மரம்கூட பாவத்தின் காரணமாகக் காய்ந்து போவதை நாம் பார்த்திருக்கிறோம். ஊதியத்தின் பொருட்டுப் பிராணிகளை வெட்டும் கசாப்புக்காரனின் கைகள் பின்னாட்களில் செயலற்றுப் போகின்றன என்பதால், அவர்கள் கையில் கத்தியைக் கட்டிக் கொண்டு பிராணியை வெட்டும் காரியத்தைச் செய்கிறார்கள். ஓநாய்க்கு ஏழெட்டுக் குட்டிகள் உண்டாகின்றன. மானுக்கோ ஓரிரு குட்டிகள் மட்டுமே. அப்படியிருந்தும் கூட்டம் என்றால் மானுக்குத்தானே தவிர, ஓநாய்க்கு அல்ல. இம்சை முதலிய பாவங்களைச் செய்கிறவர்களின் பரம்பரை நீண்டநாள் நீடித்திருப்பதில்லை என்பது இதன் கருத்து.

ஒரு சமயச் சான்றோரிடம் ஒருவன் கேட்டான்–– "எந்த சாஸ்திரத்தில், சமயப் பழக்க வழக்கத்தில் பலி கொடுப்பதற்கு, குர்பானி செய்வதற்கு ஆணை கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அந்த ஆணைப்படி செய்கிற நபர்களுக்குப் பாவம் ஏற்படாது. ஏனென்றால், அவர்கள் தம்முடைய சாஸ்திர–சம்பிரதாய ஆணைப்படியே நடக்கிறார்கள். அது சரியா, தவறா?" அவர் பதில் கூறினார்— "பலி கொடுப்பவர்களும், குர்பானி செய்பவர்களும், ஆறு மாத காலத்திற்கு மனப்பூர்வமாகப் பகவானின் பெயரை ஜபம் செய்தால், அதற்குப் பின் அவர்கள்

பலி கொடுக்க, குர்பானி செய்ய விரும்ப மாட்டார்கள்.'' தெளிந்த அந்தக்கரணம் உடைய நபர், சாஸ்திரங்களின் ஆணை இருப்பினும், பாவம் செய்யமாட்டார். ஆதலால், பலி முதலியவைகளுக்கு அனுமதி கொடுத்திருக்கும் சாஸ்திர ஆணைகளை மதிக்கக் கூடாது.

தர்மசாஸ்திரம் என்று ஒன்று; அர்த்தசாஸ்திரம் மற்றொன்று. மனிதன் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றி தர்மசாஸ்திரம் அறிவுறுத்துகிறது. அந்த ஞானத்தால் இகலோகத்திலும் பரலோகத்திலும் மேன்மை உண்டாகிறது. அர்த்தசாஸ்திரம், கண்ணால் காணக்கூடிய பலனைப் பற்றி விவரிக்கிறது. ஆசை வசப்பட்டு, கண்ணால் காணத்தக்க பலன்களை (செல்வச் செழிப்பு, மகவு, சுவர்க்கம் முதலியன அடைதல்) வேண்டி, அர்த்தசாஸ்திரக் கூற்றுக்களை ஏற்று, பாவ காரியம் செய்கிறவர்கள் பாவத்தில் பங்கு கொள்கிறார்கள். காரணம், அர்த்தசாஸ்திரத்தில் ஆசை, ஆசையோடு கூடிய உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'ஆசையே எல்லாப் பாவங்களுக்கும் அடித்தளம்' (கீதை 3/37).

நூறு வேள்விகள் செய்து இந்திரனாக ஆகிறவனுக்கும்கூட, சாஸ்திர முறைப்படி (வேத விதிப்படி) இம்சை உண்டாகிறது. அந்த இம்சைக்கான பாவ பலனை அனுபவிக்கத்தான் வேண்டும். அதனால்தான் இந்திரனுக்கு ஆபத்துக்கள் வருகின்றன. அவனுக்குத் தோல்வி ஏற்படுகிறது. அவன் அச்சத்தால் ஓடித் திரிகிறான்; மறைந்து கொள்கிறான். அவன் உள்ளத்தில் பொறாமை தோன்றுகிறது. ஆகவே, இம்சைக்கான பலன் கிடைக்கத்தான் செய்யும். ஒரு விஷயத்தைப் பற்றி தர்மசாஸ்திரம், அர்த்தசாஸ்திரம் இரண்டிலும் குறிப்பு இருந்தால், அதில் தர்மசாஸ்திரம் கூறுவதையே கேட்க வேண்டும். ஏனெனில், அர்த்தசாஸ்திரத்தைக் காட்டிலும் தர்மசாஸ்திரம் உயர்வானது; பலம் பொருந்தியது.†

---

† ***ஸ்ம்ருத்யோர்விரோதே$_4$ ந்யாயஸ்து ப$_3$லவாந்வ்யவஹாரத: ।***
***அர்த$_2$ஶாஸ்த்ராத்து ப$_3$லவத்$_3$த$_4$ர்மஶாஸ்த்ரமிதி ஸ்தி$_2$தி: ॥***

இன்றைய அரசு, கரு வெளியேற்றத்தைப் பாவமாக எண்ணவில்லை. அப்படி எண்ணாததால் பாவம் ஒட்டிக் கொள்ளாது என்று நினைக்க வேண்டாம்; பாவம் ஏற்படத்தான் செய்யும். யார் ஏற்றுக்கொண்டாலும், ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், முற்காலத்தில் அரசகுலத்தினர், தவிர்க்கப்பட வேண்டியவை என்று சாஸ்திரங்களில் கூறப்பட்ட செயல்களைச் செய்யும்படி குடிமக்களுக்கு ஆணையிட்டார்கள், தூண்டிவிட்டார்கள். அதனால் ஏற்பட்ட பாவம் அரசன்—குடிமக்கள் ஆகிய இருதரப்பினரையும் பற்றிக் கொண்டது. (எடுத்துக்காட்டாக, மன்னன் வேனன், தவிர்க்கப்பட்ட செயல்களைத் தானும் செய்தான்; குடிமக்களைக் கொண்டும் செய்வித்தான்.) இப்படி இன்றைய அரசு கருச்சிதைவு போன்ற தவிர்க்க வேண்டிய காரியங்களைச் செய்யும்படி தூண்டுகிறது என்றால், அரசாங்கத்திற்கும் பாவம் ஏற்படும். அந்தக் காரியங்களைச் செய்கிற குடிமக்களுக்கும் ஏற்படும்.

*வினா:– ஸ்ரீராமசரித மானஸத்தில்,*

**ஸமரத$_2$ கஹு(ம்) நஹி(ம்) தே$_3$ாஷு கே$_3$ாஸாஈ(ம்) ।**
**ரபி$_3$ பாவக ஸுரஸரி கீ நாஈ(ம்) ॥**

**(பால காண்டம் (69/4)**

***என்று வருகிறது. ஆகவே, யாருக்கு அரசாட்சி கிடைத்திருக்கிறதோ, பெரிய பதவி கிடைத்திருக்கிறதோ, அவர்கள் (அரசன், அரசு) வலிமை பொருந்தியவர்கள். அப்படியிருக்கும்போது, அவர்களைப் பாவம் எவ்வாறு பற்றும்?***

*விடை:–* அவர்கள் வலிமையுடையவர்கள் அல்லர். பிறருடைய குறைகளைத் தொலைப்பதற்கு ஆற்றல் பெற்றவர்களே வலிமையுடையவர்கள் ஆவர். எப்படியென்றால், சூரியன் துர்நாற்ற நீரை உறிஞ்சி எடுத்துக் கொள்கிறது; புனிதமற்றதைப் புனிதமாகவும், மாசு நிறைந்ததைத் தூயதாகவும் ஆக்குகிறது. எல்லாவற்றிலிருந்தும் நீர்ப்பகுதியை உறிஞ்சி விடுகிறது. சமுத்திரத்தின் உப்பு நீரை உறிஞ்சி

எடுத்து, சுவையான நீராக ஆக்கித் தருகிறது. ஆனால், இப்படிச் செய்யும் சூரியன் ஒருபோதும் தூய்மையற்றதாக, புனிதமற்றதாக ஆவதில்லை. அக்னி, எல்லாக் குப்பைகளையும் கொளுத்திவிடுகிறது; எல்லாவற்றையும் தன்னுள் கிரகித்துக் கொள்கிறது; எல்லாவற்றையும் சுத்தப்படுத்துகிறது. ஆனால், அது அசுத்தமாவதில்லை. அதற்கு மாசு ஏதும் ஏற்படுவதில்லை. கங்காதேவி, மாசு படிந்த நீரைப் புனிதப்படுத்திவிடுகிறாள்; பாவங்களைப் போக்கிவிடுகிறாள். ஆனால், அவளுக்குக் குறை ஏதும் நேர்வதில்லை. அசுத்தத்தைச் சுத்தமாக்கிக் கொடுப்பது, அதிலுள்ள மாசுக்களைப் போக்குவது, அப்படிச் செய்யும் தான்மட்டும் முன்னைப்போல அப்படியே இருப்பது – இதுதான் வலிமை. எவருக்கு அரசாட்சி, பெரும் பதவி கிடைத்திருக்கிறதோ, அவர் வலிமையுடையவர் என்பது சரியல்ல.

உலகை ஆளும் பதவி, அதிகாரம், பெருமை முதலியன கிடைப்பதால், மனிதன் வலிமையுடையவனாக ஆவதில்லை. ஏனெனில், அவனுடைய வலிமையானது பதவி, அதிகாரம் ஆகியவற்றைச் சார்ந்துள்ளது. அவன் பதவி, அதிகாரம் முதலியவற்றிற்கு அடிமை; ஊழியன்; கட்டுப்பட்டவன். அதனால் அவன், தானே பலசாலியாக எப்படி ஆவான்? அதாவது, தனக்குக் கிடைத்தப் பொருளினால் தன்னைப் பலசாலியாக எண்ணிக் கொள்பவன், உண்மையில் வலு இல்லாதவன். ஏனெனில், அவனிடம் என்ன வலிமை காணப்படுகிறதோ, அது அந்தப் பொருளுக்குரியது; அவனுடையதல்ல. எவர்கள் உண்மையில் வலிமை உடையவர்களோ, அவர்களுடைய வலிமை வேறொன்றின் கட்டுப்பாட்டில் இருப்பதில்லை; தன்னுடைய வசத்திலேயே உள்ளதாக இருக்கும். சூரியன், அக்னி, கங்காதேவி – இவற்றின் வலிமை வேறொருவரின் கட்டுப்பாட்டில் இல்லை; அவற்றிடமே இருக்கிறது. ஆதலால், ஆட்சி–பதவி மயக்கத்திற்குள்ளாகி, யார் பாவம் செய்கிறார்களோ, செய்விக்கிறார்களோ, அவர்கள் தமது வலிமையைத் தவறாகப்

பயன்படுத்துகிறார்கள். அதற்கான தண்டனையை அவர்கள் அனுபவிக்கத்தான் வேண்டும். அவர்களுடைய வலிமை, பாவங்களை விலக்குவதாக இல்லாமல், பாவத்தைச் செய்விப்பதாக இருக்கிறது. ஆதலால், உண்மையில் வலிமையற்ற அரசாங்கத்தை வலிமையுடையதாகக் கருதி, அதன் தூண்டுதலால், பாவத்தை ஒருபொழுதும் மனிதன் செய்யக்கூடாது.

***வினா:– அரசாங்கத்தின் உத்தரவுப்படி, மருத்துவர்கள், கருச்சிதைவு, கருத்தடை செய்கிறார்கள். அதனால், அவர்களுக்குப் பாவம் ஏற்படுமா?***

***விடை:–*** அவர்களுக்குக் கட்டாயம் பாவம் ஏற்படும். பாவத்தின் தந்தை பேராசை. இகழ்ச்சிக்குரிய பேராசை காரணமாக, அவர்கள் எத்தனை ஜீவன்களை அழித்து விடுகிறார்கள்! இந்த வெறுக்கத்தக்கக் காரியத்தைச் செய்து, மகாபாவம் செய்து சம்பாதிக்கப்பட்ட பணத்தைக் கொண்டு உணவு உண்பதால், அவர்களுக்கு மிக்க துன்பநிலை ஏற்படும்.

கருச்சிதைவு செய்பவர்களின் பார்வை பட்ட உணவு, உண்ணத்தகாததாகிறது என்று சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது—

***ப்$_4$ரூணக்$_4$நாவேக்ஷிதம் சைவ***
***ஸம்ஸ்ப்ருஷ்டம் சாப்யுத$_3$க்யயா ।***
***பதத்ரிணாऽவலீட$_4$ம் ச***
***ஶுநா ஸம்ஸ்ப்ருஷ்டமேவ ச ॥***

***(மநுஸ்ம்ருதி 4/208)***

'கர்ப்பச்சிதைவு செய்பவனால் பார்க்கப்பட்டது, மாதவிலக்கில் இருக்கும் பெண்ணால் தொடப்பட்டது, பறவையால் சாப்பிடப்பட்டது, நாயினால் தொடப்பட்டது – இந்த உணவை உண்ணக்கூடாது.'

வேலைக்காரர்கள், தம்முடைய நேரத்தைக் கொடுத்து, வேலை செய்து, பணம் பெற்றுச் செல்கிறார்கள். தங்கள்

தர்மம், கடமை, நற்செயல் ஆகியவற்றைக் கொடுத்துப் பணத்தைப் பெற்றுச் செல்வதில்லை. பாவம், அநியாயம், கொலை, துன்புறுத்தல் முதலியன செய்து, பணம் பெறுவது அப்பழுக்கற்ற பாவம். ஆகவே, பாவம், அநியாயம் செய்யும்படி ஒரு யஜமானன் சொன்னால், வேலைக்காரன் வணக்கத்துடன் அந்த யஜமானனிடம் இப்படிக் கூறிவிடவேண்டும்— ''நான், தங்கள் சேவைக்காக ஒரு மணியோ, இரண்டு மணியோ அதிக நேரம் கொடுக்க முடியும். ஆனால், என்னுடைய தர்மத்திற்கு எதிராக, பாவம், இம்சை செய்வதற்கு நான் கடமைப்பட்டவன் அல்லன். நீங்கள், என்னை வேலையில் வைத்துக் கொள்வதும், வைத்துக் கொள்ளாததும் உங்கள் விருப்பம்.''

கருச்சிதைவு, கருத்தடை போன்ற காரியங்களைச் செய்ய ஒருவர் இணங்காததால், அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அவர் வழக்குத் தொடுத்து, அதில் வெற்றி பெற்றார். அதனால், அவரை மீண்டும் வேலையில் வைத்துக் கொள்ளும்படி ஆயிற்று. அரசாங்கம் இப்படி ஓர் உத்தரவு போடுமானால், அது கிறிஸ்தவர், இஸ்லாமியர், பார்ஸி ஆகிய எல்லா மதத்தினருக்கும் பொருந்துவதாக இருக்க வேண்டும். இந்துக்களுக்கு மட்டும் என்று இருக்கக்கூடாது. ஒரு ஜாதியை, ஒரு குலத்தினரைக் கொடுமைப்படுத்தி, பாவம் செய்யும்படி அவர்களைக் கட்டாயப்படுத்துவது, பாவம் செய்வதற்கான சட்டம் போடுவது அரசுக்கு ஏற்றதல்ல.

***வினா:–* தவறுதலாக, அறியாமையினால் ஒருத்தி கருத்தடை செய்து கொண்டுவிட்டாள். இப்போது அவள் என்ன செய்வது?**

*விடை:–* அறுவை சிகிச்சையில் நரம்பு மட்டுமே துண்டிக்கப்பட்டிருந்தால், அதை மறுபடியும் சேர்த்துவிட முடியும் என்று டாக்டர்கள் சொல்கிறார்கள். ஆனால், கருப்பையே நீக்கப்பட்டிருந்தால், அதற்குப் பரிகாரமே இல்லை. ஆதலால், வெறும் நரம்புத் துண்டிப்பு கருத்தடை செய்யப்பட்டிருந்தால், அதை மீண்டும் சரிப்படுத்திக்

கொண்டுவிடலாம். இம்மாதிரி நடந்திருக்கிறது. இப்படிச் செய்து கொண்டவர்களுக்குக் குழந்தையும் பிறந்திருக்கிறது.

இவ்விதம் கருத்தடையை நீக்கி, தன்னுடைய ஆண்தன்மை–பெண்தன்மையை மீண்டும் பெற்று, முன்பு செய்துவிட்ட குற்றத்திற்காக மிகவும் வருந்தினால், அப்படிப்பட்டவர்கள் கையால் கொடுக்கப்படும் பிண்டம்–நீர்க்கடன் பிதிரர்களைச் சென்றடையும். அவர்கள் பிரம்மசரியத்தை அனுஷ்டிப்பார்களேயானால், தேசு பெருகும்; உள்ளாற்றல் பெருகும்; சுறுசுறுப்பு பெருகும்.

***வினா:– அறியாமையினால் ஒருத்தி கருச்சிதைவு செய்துவிட்டாள். இப்போது அவள் என்ன பிராயச்சித்தம் செய்வது?***

***விடை:–*** அவள், ஓர் ஆண்டுகாலம் நாள்தோறும் நாள் முழுவதும் 'ராம நாம ஜபம்' செய்யவேண்டும். ஆனால், விஷயம் புரிந்தே கருச்சிதைவு செய்து கொண்டவள், இப்படி நாம ஜபம் செய்தால், அவளுடைய பாவத்திற்குப் பிராயச்சித்தமாகாது. அவள் பாவத்திற்கான தண்டனையை அனுபவிக்கவே வேண்டும். காரணம், எந்த நாமம் மகாபாவங்களை அழிக்கவல்லதோ, அந்தப் புனிதமான பெயரின் உதவி கிடைக்கும் என்பதால் பாவம் செய்தால், அது அவரைக் காப்பாற்றாது. அதனால், அவருடைய பாவம் குறைந்து போவதில்லை. மாறாக, பசையாக ஒட்டிக் கொள்கிறது. முன்பு நாம மகிமை தெரியாதபோது, பாவம் செய்வதில் அச்சம் இருந்தது. இப்போது நாமத்தின் துணை உண்டு என்பதால் பாவம் செய்வதில் அச்சம் போய்விட்டது என்றால், அது நாமத்தைத் தவறான முறையில் பயன்படுத்துவதாகும். நாமாபராதம் ஆகும். அதற்கான தண்டனையை அவர் பெற்றே ஆகவேண்டும்.

***வினா:– குடும்பக்கட்டுப்பாடு செய்துகொள்ளாவிட்டால், மக்கட்தொகை மிகவும் பெருகிப் போகும். மக்களுக்கு உணவு கிடைக்காது என்றால் மக்கள் வாழ்வது எப்படி?***

*விடை:–* இந்தக் கேள்வி கொஞ்சம்கூடப் பொருத்தமில்லாதது. காரணம், எங்கே மனிதர்கள் பிறக்கிறார்களோ, அங்கே உணவும் தோன்றுகிறது. 'மனிதர் உற்பத்தியாகட்டும்; உணவு உற்பத்தி வேண்டாம்' என்ற குருட்டுத்தனமான எண்ணம் கடவுளிடம் இல்லை.

***ப்ராரப்$_3$த$_4$ பஹலே ரசா, பீசே$_2$ ரசா ஸரீர |***
***துலஸீ சிந்தா க்யோ(ம்) கரே, ப$_4$ஜ லே ஸ்ரீரகு$_4$வீர ||***

அன்னையின் மார்பில் முதலில் பால் தோன்றிவிடுகிறது; குழந்தை பின்புதான் பிறக்கிறது. இதிலிருந்து என்ன தெரிகிறது? குழந்தை பிறந்தவுடன் அன்னையின் மார்பிலிருந்து பழைய பாலை வெளியேற்றிவிட்டுக் குழந்தைகளுக்குப் புதுப்பால் ஊட்டுகிறார்கள். நாமும் வெளியே போக வேண்டுமானால், முதலில் அங்கே ஏற்பாடு செய்யப்படுகிறது; பின்னர்தான் நாம் போய்ச் சேருகிறோம். பேச்சாளர் உரை முதலில்; பின்னால் பந்தல் போடலாம் – இப்படி நடைபெறுகிறதா? திருமணத்திற்கு வந்துள்ளோர் தங்குவதற்கு இடம் முதலில் நிச்சயிக்கப்படுகிறதா? இல்லை, ஊர்வலம் வந்து சேர்ந்த பிறகா? ஒரு விழா நடைபெறுகிறது என்றால் அதற்கான ஏற்பாடு முன்பாகவே செய்யப்படுகிறது. முதலில் விழா; பின்னர் ஏற்பாடு – இப்படி நடப்பதில்லை. எங்கே மரங்கள் அதிகமாக இருக்கின்றனவோ, அங்கே மழை அதிகமாகப் பெய்கிறது என்பதைக் காண்கிறோம்; விஞ்ஞானிகளும் சொல்கிறார்கள். எங்கே மரம் இல்லையோ, அங்கே மழை குறைவாகப் பெய்கிறது. இவ்விதமே, மனிதர்கள் அதிகமாகிப் போனால், உணவுப்பொருளும் அதிகமாக உற்பத்தியாகும். உணவுப்பொருள் பற்றாக்குறை எப்படி வரும்? மனிதர்கள், மரங்களைக் காட்டிலும் கீழ்மையானவர்களா?

***வினா:–* இன்றைக்கு உணவுப்பொருள்கள் ஏன் இவ்வளவு பற்றாக்குறையாக இருக்கிறது?**

*விடை:–* யோசித்துப் பார்த்தால், எப்போதிருந்து இந்தக் குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டம் செயல்பட ஆரம்பித்ததோ,

அது முதல் உணவுப் பண்டங்கள் விலை ஏற ஆரம்பித்தது; தட்டுப்பாடும் ஆரம்பித்தது – என்பது தெரியவரும். மக்கட்தொகை குறைந்து போனால், அப்புறம் உணவுப்பொருள் உற்பத்தி எப்படி அதிகமாகும்? அதாவது, குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டம் நடைமுறைப்படுத்தப் பட்டதிலிருந்துதான், மோசமான இந்த நிலை உண்டாகியிருக்கிறது.

இன்று, 'புலால் சாப்பிடு, மீன் சாப்பிடு, முட்டை சாப்பிடு' என்று பிரசாரம் செய்யப்படுகிறது. அப்படியானால், மழையும் விவசாயமும் எதற்கு? காரணம், புலால் உண்பதால் ஆடு, மாடுகள் இல்லாமற்போகும். பின்பு அவைகளுக்காக புல் தேவைப்படாது. மனிதர்கள் மாமிசம் உண்கிறார்கள் என்றால் அவர்களுக்கு உணவுப்பொருள் தேவையில்லை. அப்புறம் உபயோகமில்லாமல் புல்லையும் உணவுப்பொருளையும் ஏன் பயிரிடவேண்டும்?

எப்போது மக்கள் அதிகமாகவும், பண்டங்கள் குறைவாகவும் இருக்கின்றனவோ, அப்போது விலையேற்றம் ஏற்படுகிறது. மக்கள் வேலை செய்யாமல் சோம்பேறித்தனமாய், எதையும் பொருட்படுத்தாமல் இருக்கும்போதுதான் பண்டங்களின் தட்டுப்பாடு ஏற்படுகிறது. இப்போது இதே நிலைமைதான். மக்கள் குறைவாக வேலை செய்கிறார்கள்; அதிகமாகச் செலவு செய்கிறார்கள். அதனால், அதிகமாக பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது. வேலை குறைவாகச் செய்தால் பண்டங்களும் குறைவாக உற்பத்தி ஆகும்தானே? ஆகவே, விலையேற்றத்திற்குக் காரணம் மக்கட்தொகை அதிகரிப்பு அல்ல. மாறாக, மக்களிடம் வேலை செய்யாமை, சோம்பல், கவனக்குறைவு ஆகிய குற்றங்கள் பெருகியிருப்பதுதான். அரசுக் கட்டுப்பாடின்மையும் இதற்குக் காரணம்.

***வினா:– நமக்கு வேலை, தொழில் எதுவும் கிடைக்காவிட்டால், நாம் என்ன செய்வது?***

*விடை:–* மனிதன் எந்த இடத்தில் அல்லது தொழிற்கூடத்தில் சேருகிறானோ, அங்கே அவன் தன் கடமைகளைச் சரியானபடி

நிறைவேற்றாமல், சோம்பியும் குழம்பியும் தன் நேரத்தை வீணாக்குவதுதான் வேலை கிடைக்காததற்குக் காரணம். உண்மையில், வேலைக்குத் தட்டுப்பாடு இல்லை. மாறாக, வேலை செய்வோர்களின் தட்டுப்பாடுதான் இருக்கிறது. வேலை நிறைய இருக்கிறது. ஆனால், நேர்மையோடு, ஆழ்ந்த ஈடுபாட்டோடு வேலை செய்கிறவர்கள் குறைவாக இருக்கிறார்கள். நேர்மையான ஒருவனுக்கு வேலை கிடைக்கவில்லை என்பது ஒருக்காலும் இல்லை. சோம்பல், கவனமின்மை, வேலை செய்வதில் விருப்பமின்மை ஆகிய குறைகள் இருக்கும்வரை, அவனுக்கு வேலை கிடைக்காது.

***வினா:– உணவு பற்றாக்குறையான இந்தக் காலத்தில், அதிகக் குழந்தைகள் உண்டானால், அவைகளை வளர்த்து ஆளாக்குவது எப்படி?***

***விடை:–*** நீங்களே எண்ணிப் பாருங்கள். தேவைதான் புதிய கண்டுபிடிப்புகளுக்குத் தாய். ஆகவே, குழந்தைகள் அதிகமாகும், மக்கட்தொகை பெருகும் என்றால் அவைகளுக்கு உணவு–உடைக்கான ஏற்பாடும் கட்டாயம் கண்டுபிடிக்கப்படும். எந்த ஆண்டில் வெட்டுக்கிளிகள் அதிகமாக வந்தனவோ, அந்த வருஷம் விவசாயம் நன்றாக நடந்தது; பஞ்சம் ஏற்பட்டதில்லை என்பது முன்னாட்களில் நம்மால் பார்க்கப்பட்ட விஷயம். வெட்டுக்கிளிகள் வந்ததும் மகிழ்ச்சியோடு மக்கள் சொல்வார்கள்— ''இந்தத் தடவை நிறைய மழை பெய்யும். ஏனெனில், இத்தனை உயிர்கள் வந்திருக்கின்றன என்றால் அவற்றின் உணவுக்கும் (விவசாயம்) நல்லபடியாக ஏற்பாடு ஆகியிருக்கும்.'' பகவானுடைய முந்தைய ஏற்பாடு இன்றைக்கும் கட்டாயம் நடக்கும். நீங்கள் குடும்பக்கட்டுப்பாடு செய்கிறீர்கள். அதனால், திட்டங்களின் பொறுப்பை உங்கள் மேல் சுமத்திக் கொள்கிறீர்கள். இதன் விளைவு என்னவென்றால், இன்றைய தினம் திட்டங்கள் போடுவதில் சிரமம் உண்டாகிறது. ஆகவே, நீங்கள் உங்கள் மேல் பொறுப்பைச் சுமத்திக் கொள்ளாமல் தன்னுடைய கடமைகளில் முழுமூச்சுடன் ஈடுபட்டால்,

உங்களையும், உங்கள் குடும்பத்தினரையும் வளர்க்கும் ஏற்பாடு பகவானின் தரப்பிலிருந்து கட்டாயம் செய்யப்படும்.

முன்பு, மன்னர்–மாமன்னர் வீடுகளில் ஆயிரக்கணக்கான குழந்தைகள் பிறந்து கொண்டிருந்தன; அவைகளின் பாதுகாப்பும்–வளர்ப்பும் நடந்து கொண்டிருந்தது. ஸகர மன்னனுக்கு அறுபதாயிரம் புத்திரர்கள் இருந்தார்கள். மன்னர் அக்ரஸேனருக்கு அநேக பிள்ளைகள் தோன்றினார்கள். அவர்களுடைய வம்சத்தில் தோன்றியவர்கள் இன்று அகர்வால் என்று அழைக்கப்படுகிறார்கள். திருதராஷ்டிரனுக்கு நூறு பிள்ளைகள் இருந்தார்கள். இவ்விதம் ஒரே மனிதருக்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான குழந்தைகள் உண்டாகி இருக்கிறார்கள். ஒரு சில கிராமங்களில், ஒரே மனிதரின் குழந்தைகளே வசிக்கிறார்கள் என்பதை யாரேனும் என்னிடம் விரும்பிக் கேட்டால் நான் கூறுவேன்.

உண்மையாகவே பற்றுக்களைத் துறந்து அடியார்களாக இருப்பவர்கள், தங்கள் ஜீவனத்தைப் பற்றி அக்கறை கொள்ளாதவர்கள், அதற்கான முயற்சிகூட செய்யாதவர்கள் – இவர்கள் வாழ்க்கைக்கான திட்டங்களை மக்கள் சமுதாயம் செய்துவிடுகிறது என்பது கண் முன்னால் காணக் கிடைக்கிறது. தங்கள் வாழ்க்கைக்கான செயல்களில் ஈடுபடுகின்றவர்களைக் காட்டிலும், பற்றற்ற பெரியோர்களின் பராமரிப்பிற்கான ஏற்பாடு நன்றாகவே உள்ளது.

நீங்கள் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்: இஸ்லாமிய சகோதரர்கள் இருக்கிறார்களே, அவர்கள் பல பெண்களை மணம் செய்து கொள்கிறார்கள். ஒரு சகோதரருக்கு நூற்றைம்பது குழந்தைகள் பிறந்தன. ஒரு சகோதரருக்குப் பத்தொன்பது குழந்தைகள் பிறந்து, அவற்றில் இரண்டு மரிக்க, பதினேழு குழந்தைகள் இருக்கிறார்கள் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இவ்விதம் பொதுவாக அவர்கள் குடும்பக்கட்டுப்பாடு செய்வதில்லை. ஆனாலும், அவர்களுடைய குழந்தைகளின் பராமரிப்பு நடந்து கொண்டுதான் இருக்கிறது.

இந்துக்கள் மட்டும்தானா உணவு சாப்பிடுகிறார்கள், உடை உடுத்திக் கொள்கிறார்கள், கல்வி கற்கிறார்கள்? ஏனைய மக்களென்ன உணவு உண்பதில்லையா, உடை உடுத்துவதில்லையா, கல்வி கற்பதில்லையா? ''குழந்தைகள் பிறப்பது கடவுளின் கட்டளை. அதைத் திருத்தும் அதிகாரம் மனிதனுக்கு இல்லை'' என்று, இஸ்லாமிய சகோதரர்கள் சொல்கிறார்கள். எவர்கள் கடவுளின் சட்டத்தைத் திருத்துகிறார்களோ, அவர்கள் உரிமையில்லாத செயலைச் செய்கிறார்கள். உண்மையில் குடும்பக் கட்டுப்பாடு செய்பவர்களின் மக்கட்தொகை குறைந்து போகிறது. ''குடும்பக் கட்டுப்பாடு செய்யாவிட்டால், நமது மக்கட்தொகை பெருகும்; மக்கட்தொகை பெருகுவதால் அரசாங்கம் நம்முடையதாகிவிடும். ஏனெனில், ஒட்டுமொத்தமான வாக்குகள் கிடைக்கும்'' என்று இஸ்லாமியர் எண்ணியுள்ளார்கள். ஆதலால், அவர்கள் தங்கள் எண்ணிக்கையைப் பெருக்குவதிலேயே அக்கறை கொண்டுள்ளார்கள். ஆனால், இந்துக்கள் தங்களுடைய சிற்றின்பத்திற்காகக் கருத்தடை, கருச்சிதைவு முதலிய மகாபாவங்களைச் செய்வதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். தங்களின் எண்ணிக்கை வேகமாக குறைந்து கொண்டிருக்கிறது என்றவிதமான பார்வை இல்லை; மேலுலகத்தில் இந்த மகாபாவத்திற்கான கடுமையான தண்டனை அனுபவிக்க நேரிடும் என்றவிதமான பார்வையும் இல்லை. உணவு கொள்ளல், குடித்தல், சுகத்தை அனுபவித்தல் என்பதில் மிருகங்களும் பார்வை செலுத்துகின்றன. இதே பார்வை மனிதனுக்கும் இருக்குமேயானால், அது மனிதத்தன்மை இல்லையல்லவா!

இந்து தர்மத்தில், மனிதப்பிறவி அடைய முடியாதது என்றும், மகிழ்ச்சி எளிதாக அடையக் கூடியது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், இந்து தர்மத்தில் ஓர் உயிர் மனிதப் பிறவியாக உருவாகியிருந்தால், அதனைத் தடுக்கக் கூடாது. நீங்கள் அதைத் தடுத்துவிட்டால், அந்த ஜீவன் வேறு தர்மத்தைச் சேர்ந்தவர்கள் வீட்டில் பிறந்து, உங்கள் தர்மத்தை,

அதாவது இந்துக்களை அழித்துவிடும். ஏனெனில், ஜீவனின் கடன்உறவு ஒருத்தனோடு மட்டும் இல்லை. மாறாக, பலருடனும் ஏற்படுகிறது.

கௌரவர், பாண்டவர் ஆகிய இருதரப்பினருக்கும் ஒன்பது ஒன்பது அக்குரோணிவிதம் படைகள் இருந்தன. ஆனால், ஒரு அக்குரோணி நாராயணி சேனையும், ஒரு அக்குரோணி சல்யனின் படையும் கௌரவர்கள் பக்கம் சென்றதால், கௌரவர்களின் படை, பாண்டவர்களின் படையைக் காட்டிலும் நான்கு அக்குரோணி அதிகமாகிவிட்டது. அதாவது, பாண்டவர்களின் படை ஏழு அக்குரோணியாகவும், கௌரவர்களின் படை பதினோரு அக்குரோணியாகவும் ஆகிவிட்டது. இவ்விதமே, இந்துக்கள் கருச்சிதைவு, கருத்தடை முதலியவற்றால் மகப்பேற்றைத் தடுத்துவிட்டால், அவர்கள் வீட்டில் பிறக்க வேண்டிய குழந்தை வேறு தர்மத்தைச் சேர்ந்தவர் வீட்டில் போய் பிறக்கும். இதுவரை, இந்துக்கள் வீட்டில் ஏறக்குறைய பன்னிரெண்டு கோடி குழந்தைகளின் பிறப்பு தடுக்கப்பட்டிருக்கிறது.† அந்தப் பன்னிரெண்டு கோடி குழந்தைகள், வேற்று மதத்தவர்களின் வீட்டில் பிறப்பார்கள். ஆதலால், வேற்றுமதத்தினரின் எண்ணிக்கை இந்துக்களின் எண்ணிக்கைக்கு மேல் இருபத்து நான்கு கோடி அதிகமாகிவிடும். வேறு தர்மங்களைச் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை பெருகினால், அவர்கள் இந்துக்களை அழித்துவிடுவார்கள். ஆகவே, இந்துக்கள் தங்கள் சந்ததித் தொடரை நசித்துவிடக் கூடாது; பிற மதத்தினரின்

† மகப்பேற்றைத் தடுத்து நிறுத்தும் உபாயங்களைச் செய்து கொண்டவர்களுக்கு, இனிமேல் ஏற்படுவதாக இருந்த பல குழந்தைகளுக்கும் தானாகவே தடுப்பு உண்டாகியுள்ளது. ஒவ்வொரு நபருக்கும், இனி ஏற்படுவதாக இருந்த இரண்டு அல்லது மூன்று குழந்தைகள் தடுக்கப்பட்டுள்ளதாகக் கணக்கிட்டால், இந்த எண்ணிக்கை இருபத்து நான்கு அல்லது முப்பத்தாறு கோடி வரை செல்லும்.

எண்ணிக்கையைப் பெருக்கி, பசுக்கொலை போன்ற பாவத்தில் பங்குதாரர்களாக ஆகக்கூடாது.

**வினா:– குழந்தைகள் குறைவாக இருந்தால், அவைகளின் பராமரிப்பு நன்றாக இருக்கும்; குடும்பம் நலமாக இருக்கும். ஆகவே, குடும்பக்கட்டுப்பாடு செய்வதில் என்ன தவறு?**

விடை:– குழந்தைகள் குறைவாக இருந்தால் குடும்பம் நலமாக இருக்கும் என்பது சரியல்ல. எவர்களுக்குக் குழந்தைகள் இல்லையோ, அவர்களும் துக்கப்படுகிறார்கள். எவர்களுக்குக் குழந்தைகள் குறைவாக இருக்கின்றனவோ, அவர்களும் துக்கப்படுகிறார்கள். எவர்களுக்கு நிறையக் குழந்தைகள் இருக்கின்றனவோ, அவர்களும் துக்கப்படுகிறார்கள். குழந்தை இல்லாதவர்களையும் நாம் பார்த்திருக்கிறோம்; குறைந்த அளவு குழந்தை உடையவர்களையும் பார்த்திருக்கிறோம்; நிறையக் குழந்தை உடையவர்களையும் பார்த்திருக்கிறோம். அப்படியே, அவர்களுடன் பேசியும் இருக்கிறோம். உண்மையில் குழந்தைகளின் கூடுதல்–குறைச்சல், சுக–சுக்கத்திற்குக் காரணம் அல்ல. உலகம் முழுவதிலுமிருந்தும், குறைவாகக் குழந்தைகள் உள்ளதால் நலமாக இருக்கும் ஒரு மனிதரையேனும் காட்டுப் பார்ப்போம். உலகத்தில் என்ன, படைப்பிலேயே இல்லை! துக்கத்திற்குக் காரணம் சிற்றின்ப வேட்கைதான். சிற்றின்பப் பற்றுள்ள மனிதன் ஒருபோதும் மகிழ்ச்சியுடைவனாக ஆகமாட்டான்; ஆகவே மாட்டான். எவன் புலனின்பப் பற்றுள்ளவனோ, அவனுக்குக் குழந்தைகளின் எண்ணிக்கை நிறையவோ, குறைவோ அல்லது இல்லவே இல்லையோ, அவன் துக்கப்பட்டுக் கொண்டுதான் இருப்பான். ***'யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா பே$_4$ாக$_3$ா து$_3$:க$_2$யோநய ஏவ தே ।' (கீ$_3$தா 5/22).***

திருமணத்திற்குப் பிறகு, துவக்கத்தில் பெண்ணிடம் ஆடவனுக்கும், ஆடவனிடம் பெண்ணுக்கும் தனிப்பட்ட கவர்ச்சி இருக்கிறது. ஆதலால், முதலில் தோன்றுகிற குழந்தை சிற்றின்ப வேட்கையிலேயே உண்டாகிறது. சிற்றின்ப

வேட்கையால் தோன்றிய குழந்தை பொதுவாக நல்லவனாக இருப்பதில்லை; பற்றுள்ளவனாகவே இருப்பான். இன்றைக்கு எவ்வளவு நல்ல கருத்துக்களின் பிரசாரம் நடைபெற்றிருக்கிறதோ, சமுதாயம் உயர்த்தப்பட்டிருக்கிறதோ, அது எல்லாம் நல்லோர்களின் மூலமாகவே நடைபெற்றிருக்கிறது. இன்ப நாட்டமுள்ளவன், பேராசைக்காரன், திருடன், கொள்ளைக்காரன் முதலியவர்களால் சமுதாய முன்னேற்றம் எப்போதாவது ஏற்பட்டிருக்கிறதா? அவர்கள் மூலம் சமுதாய முன்னேற்றம் நிகழ்வதற்கான வாய்ப்பாவது உண்டா? ஆகவே, குழந்தைகள் குறைவாக இருக்கவேண்டும் என்றால், அநேகமாக இன்பப் பற்றுடைய குழந்தையே பிறக்கும். அதனால் சமுதாய வீழ்ச்சியே ஏற்படும்.

***வினா:– பகவான் இராமனும் பரதனும்கூட குடும்பக் கட்டுப்பாடு செய்திருந்தார்கள். அதாவது, 'து$_3$இ ஸுத ஸுந்த$_3$ர ஸீதா(ம்) ஜாஏ', 'து$_3$இ து$_3$இ ஸுத ஸப$_3$ ப்$_4$ராதந்ஹ கேரே' (ஸ்ரீராமசரிதமாநஸம், உத்தர. 25/3,4) என்று இருப்பதால் இரு குழந்தைகள் மட்டும் பெற்றுக் கொண்டால் என்ன தவறு?***

*விடை:–* ஸ்ரீராமன் கருத்தடை செய்து கொண்டார் என்றோ, சீதாதேவி கருத்தடை செய்து கொண்டாள் என்றோ, எந்த இராமாயணத்திலும் சொல்லப்படவில்லை. இந்த கருத்தடை செய்துகொள்வது, நம் கண்ணெதிரே இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கின்றன. இது வெளிநாட்டுச் சரக்கு; நமது நாட்டுத் தொழில் அல்ல. இராமன், பரதன், இலட்சுமணன், சத்ருக்னன் ஆகிய அவர்களே நான்கு சகோதரர்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணனுடைய பதினாறாயிரத்து நூற்றியெட்டு ராணிகளில் ஒவ்வொருவருக்கும் பத்து மகன்களும், ஒரு மகளும் பிறந்தார்கள். சிற்சிலருக்கு இயற்கையாகவே குழந்தைகள் குறைவாகப் பிறக்கின்றன; சிற்சிலருக்கு இயற்கையாகவே குழந்தைகள் அதிகமாகப் பிறக்கின்றன.

***வினா:– குழந்தைகள் அதிகமாகப் பிறந்துவிட்டால், எல்லாப் பொழுதும் அவர்களைச் சீராட்டிப் பராமரிப்பதிலேயே கழிந்துவிடும். அப்புறம், பகவானை வழிபடுவது எப்போது?***

*விடை:–* நம்முடைய கருத்து என்னவென்றால், நீங்கள் அதிகமாகக் குழந்தைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதல்ல. மாறாக, செயற்கை முறைகளினால் குழந்தை பிறப்பதைத் தடுத்துவிட்டு, ஏதோ சிறிது இன்பத்திற்காகத் தங்களுடைய உடல், பலம், சுறுசுறுப்பு ஆகியவற்றைப் பாழாக்காதீர்கள் என்பதுதான். விவசாயம் செய்வோம்; ஏர் உழுவோம்; ஆனால், விதை விதைக்க மாட்டோம் – இது அறிவுடைமையா என்ன? ***'ஹதம் மைது$_2$நமப்ரஜம்'*** – குழந்தை உற்பத்தி ஆகாவிட்டால், மனைவியுடன் உறவு கொள்வது வீண். ஆகவே, நம்முடைய நோக்கம், ''நீங்கள் புலன்களுக்கு அடிமையாகாதீர்கள்; அவற்றின் ஆதிக்கத்திற்கு உட்படாதீர்கள். அதற்குமாறாக சுதந்திரமாக இருங்கள்'' என்பதுதான்.

***வினா:– அதிகமான குழந்தைகளை விரும்பவில்லை; புலனடக்கத்தோடும் இருக்க முடியவில்லை. இந்த நிலைமையில் என்ன செய்வது?***

*விடை:–* இப்படிச் சொல்வது சரியல்ல. நீங்கள் புலனடக்கம் செய்ய விரும்பினால், அடக்கம் அவசியம் உண்டாகும். நான் வெகுகாலத்திற்கு முன் 'பிரம்மசரியமே வாழ்க்கை' என்ற பெயருடைய ஒரு நூலைப் படித்திருக்கிறேன். அதை எழுதியவர் சிவானந்த் என்ற பெயருடைய ஒரு நபர். அவர் அந்த நூலில் இப்படி எழுதியிருந்தார்— ''நான் திருமணம் ஆனவன். ஆனால், இருவரும் (நானும் மனைவியும்) ஆலோசனை செய்து, பிரம்மசரியத்தைக் கடைப்பிடித்தோம். அதனால், எனக்கு மிகுந்த நன்மை உண்டாயிற்று. அந்த நன்மை எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதற்காக, நான் இந்த நூலை எழுதியிருக்கிறேன்!'' ஒரு பெண்மணி

எம்மிடம் கூறினார்— ''எங்கள் அண்மை வீட்டில் ஒரு ஜைனர் குடும்பம் இருந்தது. தினந்தோறும், இரவில் அவர்கள் பேச்சுக்குரல் கேட்டு வந்தது. 'நீங்கள் இரவு நேரத்தில் தினமும் பேசிக் கொண்டிருக்கிறீர்களே, தூங்குவதில்லையா?' என்று ஒரு நாள், அவர்களைக் கேட்டேன். 'எங்களில் ஒருவர் கிருஷ்ணபட்சத்திலும், மற்றவர் சுக்லபட்சத்திலும் பிரம்மசரியம் காப்பது என்று திருமணத்திற்கு முன்பே சபதம் செய்திருந்தோம். இப்போது மூன்றாவது பட்சத்தை எங்கிருந்து கொண்டு வருவது? ஆதலால், ஒரே அறையில் இருந்தாலும், நாங்கள் எங்களுக்குள், தர்மத்தைப் பற்றிப் பேசுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறோம்' என்று கூறினார்கள்.'' இதன் கருத்து என்னவென்றால், நீங்கள் குடும்ப வாழ்க்கையில் இருந்து கொண்டே, புலன் கட்டுப்பாடு செய்யமுடியும். நீங்கள் முனைப்போடு இருங்கள், தைரியத்தைக் கைவிடாதீர்கள்; 'நம்மால் புலனடக்கம் செய்யமுடியாது' என்று ஊக்கத்தைக் கைவிடாதீர்கள். நீங்கள் புலனடக்கம் செய்யாவிட்டால் வேறு யார் செய்வார்கள்? உறுதி இருந்தால், நடக்கக் கூடாததுகூட நடந்துவிடும்.

*ஹிம்மத மத ச$_2$ா(ம்)டே$_3$ா நரா(ம்),*
*முக$_2$ தே கஹதா(ம்) ராம ।*
*ஹரியா ஹிம்மத ஸே கியா,*
*த்$_4$ருவ கா அடல த$_4$ாம ॥*

ஆகவே, ஊக்கத்தோடு இருங்கள்; பகவானிடம் நம்பிக்கை வையுங்கள். அவரிடம் பிரார்த்தனை செய்யுங்கள்— ''இறைவனே! புலனடக்கத்தோடு இருப்பது என்று நாங்கள் உறுதி பூண்டிருக்கிறோம். நீங்கள் சக்தியை அருளுங்கள்.'' இவ்விதம் நீங்கள் எவ்வளவு ஈடுபாடு கொண்டுள்ளீர்களோ, பகவானிடம் நம்பிக்கை வைக்கிறீர்களோ, அவ்வளவுக்கு அபூர்வமான அற்புதக் காட்சிகள் தென்படும். அவ்விதம் இதன் உண்மையை அறிந்து கொள்ளுங்கள்.

முற்காலத்தில் கருத்தடை உபாயங்கள் இல்லை. அந்தக் காலத்தில் மக்கள் புலனடக்கம் கொண்டிருந்தார்கள் என்றால், இப்போதும் புலனடக்கம் சாத்தியமே. தற்காலத்தில், புலனடக்கம் முதலிய குணங்களையும், தெய்விக சக்திகளையும் தன்னிடம் கொண்டு வருவதில் கஷ்டம் அனுபவிக்க நேரிடுகிறது என்றால், அதற்குக் காரணம் முன்னதாக அடக்கமின்மை முதலிய அசுர சக்திகளின் இயல்பு நன்றாகப் படிந்துவிட்டது என்பதுதான்.

உண்மை பேசுகிற நபரிடம், ''நான் உங்களுக்கு பெருந்தொகை தருகிறேன். நீங்கள் பொய் பேசுங்கள்'' என்று சொன்னால், அவர் பொய் பேசமாட்டார். ஆனால், எவர்கள் பொய்–உண்மையைப் பற்றிச் சிந்திக்காதவர்களோ, அவர்களிடம் ''நான் உங்களுக்கு சிறுதொகை தருகிறேன்; நீங்கள் உண்மை பேசுங்கள்'' என்றால், அவர்கள் உண்மை பேசிவிடுவார்கள். எவர்கள் புலால் உண்பதில்லையோ, அவர்களிடம், ''நாங்கள் உங்களுக்கு பெருந்தொகை தருகிறோம். நீங்கள் புலால் சாப்பிடுங்கள்'' என்றால், அவர்கள் இறந்தாலும் இறப்பார்களேயொழிய மாமிசம் உண்ண மாட்டார்கள். ஆனால், எவர்கள் புலால் உண்கிறார்களோ, அவர்களிடம் நீங்கள் புலால், மீன் சாப்பிடாதீர்கள். கண்ட இடத்தில் உணவு அருந்தாமல், எங்கள் வீட்டிலேயே சைவ உணவு சாப்பிட்டால், உங்களுக்கு நாள்தோறும் ஒரு சிறுதொகை தருவோம்'' என்றால், அவர்கள் மாதம் முழுவதும் உங்கள் வீட்டில் உணவு கொள்வார்கள். கள் முதலிய குடிப்பழக்கம் இல்லாதவர்களைப் பயமுறுத்தியும் ஆசை காட்டியும் 'கள் குடியுங்கள்' என்று சொன்னால், அவர்கள் கள்ளுண்ண மாட்டார்கள். ஆனால், எவர்களுக்குக் குடிப்பழக்கம் உண்டோ, அவர்கள் பக்தர்கள்–மகாத்மாக்கள் சேர்க்கையால், நோயற்ற வாழ்விற்கு ஆசைப்பட்டுக் குடிப்பழக்கத்தை விட்டுவிடுகிறார்கள். கருத்து என்னவென்றால், உண்மை பேசுதல், புலால்–குடி மறுத்தல் எளியது. ஆனால்,

பொய் பேசுதல், புலால்–குடி பழகுவது கஷ்டமானது. அதேபோல புலனடக்கத்தை விட்டுவிடுதல் கடினமானது. புலனடக்கத்தோடு இருப்பது கடினமல்ல. இது அனுபவத்தால் உறுதியாக்கப்பட்ட உண்மை.

மற்றொரு விஷயம் என்னவென்றால், புலனடக்கம் என்பது தனக்குத்தானே விளக்கமாய் நிற்பது. அடக்கமின்மை என்பது செயற்கையானது, தவறானது. தனக்குத்தானே விளக்கமாய் இருக்கும் ஒரு விஷயம் ஏன் கடினமாகப்படுகிறது? என்று சிறிது எண்ணிப் பாருங்கள். எவர்கள் புலனடக்கத்தை விட்டுவிட்டு, தங்கள் வாழ்க்கையைப் பொறிகள் வழியிலேயே கழித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு மறுபடியும் புலனடக்கத்தைக் கைக்கொள்வது சிரமமாகிவிடுகிறது. ஆனால், முதலிலிருந்தே கட்டுப்பாடான வாழ்க்கை அமைத்துக் கொண்டால், கெட்ட பழக்கங்களையும், தீய குணங்களையும் விடுவதனால் மனிதனுக்கு தீர–வீரம், மகிழ்ச்சி ஏற்படுகிறது; சாந்தி உண்டாகிறது. புலனடக்கத்தோடு இருக்கும்போது எந்த அளவுக்கு முகமலர்ச்சி, நோயின்மை, சக்தி, தைரியம், மகிழ்ச்சி அடைகிறோமோ, அந்த அளவுக்குக் கட்டுப்பாடு இல்லாதபோது ஏற்படுவதில்லை. நீங்கள் சில நாட்கள் நல்லோர் கூட்டத்தில் இருந்து புலனடக்கம் கைக்கொண்டால், புலனடக்கத்தால் எவ்வளவு நன்மை ஏற்படுகிறது? என்பதை அனுபவபூர்வமாக உணரலாம்.

உலகத்தில் எத்தனை வியாதிகள் உண்டோ, அவையனைத்தும், அநேகமாய் புலன் கட்டுப்பாடு இல்லாததாலேயே உண்டாகின்றன. மேலும், விதி வசத்தால் வியாதிகள் மிகக்குறைந்த அளவே உண்டாகின்றன. புலனடக்கத்தோடு இருப்பவர்களுக்கு வியாதி மிகவும் குறைவு. அடக்கமுடையவர் கவலையில்லாமல் இருக்கிறார். ஆனால், கட்டுப்பாடற்ற மனிதர்களுக்குக் கவலை, அச்சம் முதலியன மிகவும் அதிகமாக ஏற்படுகின்றன. எப்படியென்றால், புலனடக்கமில்லாத இராவணன், சீதையைத் தூக்கிக் கொண்டு

வருவதற்காகச் சென்றபோது அச்சத்தால் பீடிக்கப்பட்டு இங்குமங்கும் பார்க்கிறான்.

***ஸோ த$_3$ஸஸீஸ ஸ்வாந கீ நாஈ(ம்) ।***
***இத உத சிதஇ சலா ப$_4$டி$_3$ஹாஈ(ம்) ॥***

***(ஸ்ரீராமசரிதமாநஸம், ஆரண்ய. 28/5)***

ஆனால், பொறிவயப்படாத சீதை, ராட்சஸர்களின் ஊரில், ராட்சஸர்களின் மத்தியில் உட்கார்ந்திருந்தபோதும் அச்சமின்றி இருக்கிறாள். தனியாகவும், பெண்ணினமாகவும் இருந்தும்கூட, அவளுக்கு எவரிடமும் பயமில்லை. அவள் இராவணனைக் கீழ்மகன், வெட்கங்கெட்டவன் என்று சொல்லித் திட்டும் அளவுக்கு அச்சமற்றிருந்தாள்.

***ஸட$_2$ ஸூநே(ம்) ஹரி ஆநேஹி மோஹீ ।***
***அத$_4$ம நிலஜ்ஜ லாஜ நஹிம் தோஹீ ॥***

***(ஸ்ரீராமசரிதமாநஸம், ஸுந்தர. 9/5)***

நமது சாஸ்திரங்களில் பிரம்மசரியம் மிகவும் போற்றப்பட்டுள்ளது. அயல்நாட்டுப் பெரியோர்களும் இதனை ஆதரித்துள்ளார்கள். முழு வாழ்க்கையில் ஒரே ஒரு முறைதான் கணவன், மனைவியோடு உறவு கொள்ளவேண்டும் என்று அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஒரு முறை போதாவிட்டால், ஆண்டுக்கு ஒரு முறை; ஆண்டுக்கு ஒரு முறை போதாவிட்டால், மாதத்திற்கு ஒரு முறை, அதாவது மனைவியின் மாதவிலக்குக்குப் பின்பு. இப்படி இருக்க முடியாவிட்டால், தன்னுடைய இறுதிப் பயணத்திற்கான புதுத்துணியை, இப்பொழுதே வாங்கி வைத்து விடலாம்! காரணம் அடிக்கடி புணர்வதால் ஆயுள் விரைவில் வீணாகிறது. மனிதன் விரைவில் (குறைந்த வயதில்) இறந்து போவதற்குப் பல காரணங்கள் இருந்தாலும், அவற்றில் ஆண்மை இழப்பே முக்கிய காரணமாகும். ஆகவே, நீண்ட நாள் உயிர் வாழவும், உடல் நலத்தை முன்னிட்டும், நோயின்றி வாழவும் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிப்பது மிகவும் அவசியம். சிங்கம் வாழ்நாள் முழுவதும் ஒரே ஒரு முறைதான்

பெண் சிங்கத்தோடு உறவு கொள்கிறது. ஆதலால், அதனிடம் வீர்யம் அதிகமாகக் காப்பாற்றப்படுவதால், அதிகமான உடலாற்றல் அதற்கு இருக்கிறது. ஆகவே, அது தன்னைக்காட்டிலும் மிகப்பெரிய யானையையும் வீழ்த்திவிடுகிறது. ஆனால், எந்த மனிதன் அடிக்கடி பெண்ணுறவு கொள்கிறானோ, அவனிடம் உடலாற்றல் இருப்பதில்லை. மாறாக, பலக்குறைவு ஏற்படுகிறது.

பிரம்மசரியத்தைக் கடைப்பிடிப்பதால் பெரிய பெரிய வியாதிகள் பீடிப்பதில்லை. பிரம்மசரியத்தைக் கடைப்பிடிப்போரின் குழந்தைகள் ஒளிமிக்கவர்களாகவும் நோயற்றவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால், பிரம்மசரியத்தைக் கைக்கொள்ளாத வர்களின் குழந்தைகள் ஒளியற்றவர்களாகவும் நோயுற்றவர் களாகவும் இருக்கிறார்கள். அடிக்கடி உடலுறவு கொள்வதால் சுக்ல–சோணிதத்தில் முழுமையான சக்தி இருப்பதில்லை. சிற்றின்பப் பற்றினால் தோன்றும் குழந்தைகள், இன்பப் பற்றுடையவர்களாகவும் நோயுற்றவர்களாகவும் ஆகிறார்கள். ஆதலால், தர்மத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து, மகப்பேற்றுக்கு முனைந்தால், அந்தக் குழந்தைகள் அறப்பண்புடனும் நோயற்றவர்களாகவும் பிறப்பார்கள். கீதையில் பகவானும், *‘த$_4$ர்மாவிருத்$_3$தே$_4$ா பூ$_4$தேஷு காமோऽஸ்மி’* **(7/11)** – ‘தர்மத்தோடு கூடிய காமமாக நான் விளங்குகிறேன்’ என்று கூறியிருக்கிறார்.

எவன் சாஸ்திரத்தின் மீதுள்ள மதிப்புக் காரணமாக, அதை அனுசரித்து, குழந்தை பிறக்கவேண்டும் என்று, மாதவிலக்குக்குப் பின் மனைவியோடு கூடுகிறானோ, அவன் குடும்பத்தில் இருந்தாலும் பிரம்மசாரியாகக் கொள்ளத்தக்கவன். ஆனால், எவன் சிற்றின்ப ஆசை, சுகத்தில் பற்றுக் காரணமாகத் தன் மனைவியோடு உறவு கொள்கிறானோ, அவன் பாவம் செய்கிறான். கீதை, ‘பொருள் நுகர்ச்சி பற்றி எண்ணுவதாலேயே வீழ்ச்சி ஏற்படும்’ (2/62,63) என்று சொல்கிறது. ‘காமம், எல்லாப் பாவங்களுக்கும் ஆதாரம்;

நரகத்தின் நுழைவாயில்' (3/36, 16/21) என்றும் சொல்லியிருக்கிறது. கருத்து என்னவென்றால், சிற்றின்ப நுகர்ச்சி வேட்கையோடு, தன் மனைவியோடு உறவு கொள்வது, நரகங்களுக்கு நுழைவாயில் போலாகும். பாவங்களுக்கும் விபரீதங்களுக்கும் காரணமாகும்.

தீவிரமாக எண்ணிப் பார்த்தால், பிரம்மசரியம் மேற்கொள்வது கஷ்டமானது அல்ல. பிரம்மசரியம் காப்பது, மனிதகுலத்துக்கே உரிய விஷயம். மனிதன் புலனடக்கம் செய்யாவிட்டால் அவன் மிருகங்களைக் காட்டிலும் இழிந்தவனாகிறான். பிராணிகளில் கழுதை, நாய் இழிவானதாகக் கருதப்படுகிறது. ஆனால், வருடத்தில் ஒரு மாதம் மட்டுமே அவைகளுக்கு உறவு கொள்வதற்கான காலம். அந்த மாதத்தில் அவைகளை அடைத்து வைத்துவிட்டால், அவைகளின் பொறிகள் அடங்கிப் போகின்றன. அதாவது சிராவண மாதத்தில் கழுதையையும், கார்த்திகை மாதத்தில் நாயையும், மாசி மாதத்தில் பூனையையும் அடக்கிவிட்டால், அவைகளுக்குப் புலன் கட்டுப்பாடு ஏற்பட்டுவிடுகிறது. ஆனால், மனிதனுக்குப் பன்னிரெண்டு மாதங்கள் திறந்திருக்கின்றன. அதனால், மற்ற யாரும் அவனைக் காப்பாற்றிக் கொண்டிருக்க முடியாது. விரும்பினால், அவன் தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும். ஆகவேதான் சாஸ்திரங்களில் மனிதன் பிரம்மசரியம் கடைப்பிடிக்க வேண்டும் என்று கட்டளை இடப்பட்டிருக்கிறது. பிரம்மசரியத்தைக் கடைப்பிடிப்பதால் பிரம்மவித்தையை அடைய முடிகிறது, பேரின்பத்தை அடைய முடிகிறது.

***வினா:–* கணவன் புலனடக்கத்தோடு இருக்கிறான். ஆனால், மனைவி புலனடக்கம் கொள்ளவில்லை என்றால் என்ன செய்வது?**

***விடை:–*** மனைவி புலனடக்கம் கொண்டிருக்கவில்லை என்பது ஏற்கத்தக்கதல்ல. உண்மையில் கணவன்தான் மனைவியைக் கெடுக்கிறான். காம வேகத்தைத் தடுக்கும் சக்தி

பெண்களிடம் எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு சக்தி ஆண்களிடம் இருப்பதில்லை.

முதலிலிருந்தே புலனடக்கம் கொள்ளப்பட்டிருந்தால், புலனடக்கம் எளிதாக ஏற்படும். புணர்ச்சிப்பற்று அதிகமான பின்னர், புலனடக்கம் கொள்வது கஷ்டமாகிறது. ஆகவே, எப்போது காமத்தின் துடிப்பு இல்லையோ, அப்போது கணவன்–மனைவி இருவரும் அமைதியான உள்ளத்துடன், 'நாம் அதிகக் குழந்தைகளை விரும்பவில்லை என்றால் நாம் புலனடக்கத்தோடு இருக்கவேண்டும். அதனால், நமது உடல், உடல்நலம் நன்றாயிருக்கும்' என்று சிந்தனை செய்து, இரவு வேளைகளில் இருவரும் தனித்தனியே இருக்கவேண்டும்.

மனிதன் எப்போதும் புலனடக்கத்தோடு இருக்க முடியும். ஆனால், எப்போதும் புணர்ந்து கொண்டிருக்க முடியாது. இது தனக்குத் தானே நிரூபணமான விஷயம். ஆகவே, புலனடக்க முயற்சியில் மனம் தளரக்கூடாது. கருச்சிதைவு, கருத்தடை போன்ற மகாபாவங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும்.

எந்த நாள் வரை, இந்த இந்து சமுதாயம் கருச்சிதைவு போன்ற மகாபாவங்களிலிருந்து காத்துக் கொள்ளவில்லையோ, அந்த நாள் வரை இந்தச் சமுதாயம் மேம்பாடு அடையாது. ஏனெனில், தன்னுடைய பாவமே, தன்னைக் காவு வாங்கிவிடும். இந்தச் சமுதாயம் தன்னுடைய முன்னேற்றத்தையும் பெருக்கத்தையும் விரும்பினால், இந்தக் கொடுமையான மகாபாவத்திலிருந்து, அதாவது பிரம்மஹத்தியிலும் இரு மடங்கு பாவத்திலிருந்து காப்பாற்றப்பட வேண்டும். பாரதத்தில் பல லட்சம் கருச்சிதைவுகள் செய்யப்பட்டதாக ஒரு சகோதரர் நம்மிடம் கூறினார். இப்படியாக இவ்வுலகத்தையும் மேலுலகத்தையும் இழக்கச் செய்யும் மாபெரும் கொலையினால் சமுதாயத்திற்கு என்ன நிலை ஏற்படப் போகிறதோ, பகவானுக்கே வெளிச்சம்! தர்மப் பற்றுடைய பாரதத்தில் தர்மத்திற்கு எதிரான எத்தனை செயல்கள் நடந்து

வருகின்றன – இதற்கு ஓர் எல்லையே இல்லையே! இதன் விளைவு மிகவும் பயங்கரமானதாக இருக்கும். எனவே, காலம் மீறிப் போவதற்குள் நாம் விழித்துக்கொள்ள வேண்டும்.

*கா ப$_3$ரஷா ஸப$_3$ க்ருஷீ ஸூக$_2$ாநே(ம்) ।*
*ஸமய சுகே(ம்) புநி கா பசி$_2$தாநே(ம்) ॥*

யாரையும் திட்டுவதோ, இழித்துக் கூறுவதோ, நம்முடைய நோக்கம் அல்ல. மனித உடலைப் பெற்றபின், குறைந்தபட்சம் கருச்சிதைவு போன்ற மகாபாவங்களிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதே நாம் கூறுவது.

*ப$_3$டே$_3$ ப$_4$ாக$_3$ மாநுஷ தநு பாவா ।*
*ஸூர து$_3$ர்லப$_4$ ஸப$_3$ க்$_3$ரந்த$_2$ந்ஹி க$_3$ாவா ॥*
*(ஸ்ரீராமசரிதமாநஸம், உத்தர. 43/4)*

*கப$_3$ஹு(ம்)க கரி கருநா நர தே$_3$ஹீ ।*
*தே$_3$ந ஈஸ பி$_3$நு ஹேது ஸநேஹீ ॥*
*(ஸ்ரீராமசரிதமாநஸம், உத்தர. 44/3)*

*து$_3$ர்லபே$_4$ா மாநுஷோ தே$_3$ஹோ*
*தே$_3$ஹிநாம் க்ஷணப$_4$ங்கு$_3$ர: ।*
*(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 11/2/29)*

*லப்$_3$த்$_4$வா ஸூது$_3$ர்லப$_4$மித$_3$ம் ப$_3$ஹுஸம்ப$_4$வாந்தே*
*மாநுஷ்யமர்த$_2$த$_3$மநித்யமபீஹ தீ$_4$ர: ।*
*(ஸ்ரீமத்$_3$ப$_4$ாக$_3$வதம் 11/9/29)*

இவ்விதம் கிடைத்தற்கரியது† என்று அறநூல்களில் பலகாறும் போற்றப்பட்டுள்ள மனித உடலுக்குள் ஒரு ஜீவனை வராமல் தடுப்பது, ஜீவனுக்கு இவ்வளவு துர்லபமான உடல் கிடைக்காமல் செய்வது என்பது எத்தகைய மகத்தான பாவம்! ஆகவே, இந்த மகாபாவங்களிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.



† அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது.

# 7. சண்டை–சச்சரவுக்குத் தீர்வு

***வினா:–*** **குடும்பத்தில் மனவேற்றுமை, சச்சரவு, கவலை முதலியன தோன்றுவதற்குக் காரணம் என்ன?**

***விடை:–*** ஒவ்வொரு பிராணியும் தன் இஷ்டப்படியே பிறர் நடக்கவேண்டும் என்று விரும்புகிறது. தனக்குச் சாதகத்தை விரும்புகிறது. தன்னுடைய சுகம்–மகிழ்ச்சியை விரும்புகிறது. தன் கௌரவத்தை விரும்புகிறது. தன் சுயநலத்தைச் சாதித்துக் கொள்ள விரும்புகிறது. இவ்விதம் தன்னிடத்துள்ள தன்னலம் காரணமாகவே குடும்பத்தில் மனவேற்றுமை, சச்சரவு, கவலை முதலியன தோன்றுகின்றன. எப்படியென்றால், நாய்கள் மிகுந்த அன்புடன் தங்களுக்குள் விளையாடுகின்றன; ரொட்டித் துண்டு எதிரே வந்ததும், சண்டை ஆரம்பமாகிவிடுகிறது. ஆகவே, சண்டைக்குக் காரணம் ரொட்டித் துண்டு அல்ல. மாறாக, தன்னிடத்தேயுள்ள சுயநலம்தான்.

குடும்பத்தில் எவன் தன்னுடைய சுக–சௌக்கியத்தை விரும்புகிறானோ, அவன் குடும்பி அல்லன். அவன் வெறும் ஒரு நபர். குடும்பத்திலுள்ள பெரியவர்கள், சிறியவர்கள், சம வயதுக்காரர்கள் ஆகிய எல்லோருடைய நன்மையையும் விரும்புகிறவன், நலன் செய்கிறவன் எவனோ, அவனே குடும்பியாகிறான். ஆகவே, எவன் குடும்பத்தில் அமைதியை விரும்புகிறானோ, சச்சரவை விரும்பவில்லையோ, அவன் தன் கடமையிலும், பிறருடைய உரிமையிலும் கவனமாக இருக்கவேண்டும். அதாவது, தன்னுடைய கடமையைச் செய்யவேண்டும். மற்றவர்களுக்கு உகந்ததைச் செய்ய வேண்டும். மற்றும் அவர்களுக்கு மரியாதை, மகிழ்ச்சி, ஓய்வு கொடுக்கவேண்டும்.

***வினா:–*** **சகோதரர்கள் தங்களுக்குள் சண்டையிட்டால், தாய்–தந்தையர் என்ன செய்யவேண்டும்?**

***விடை:–*** தாய்–தந்தையர் நியாயத்தை எடுத்துச் சொல்ல வேண்டும். இளைய மகனிடம், ''பரதன், லட்சுமணன்,

சத்ருக்னனைப் பார். அவர்கள் இராமனிடம் எப்படி நடந்து கொண்டார்கள்? பீமன், அர்ஜுனன் முதலியோர் தங்கள் மூத்த சகோதரன் யுதிஷ்டிரரிடம் எவ்வாறு நடந்து கொண்டார்கள்?'' என்று சொல்ல வேண்டும். மூத்த பிள்ளையிடம், ''நீ இராமனைப் பார். அவர் தன்னுடைய இளைய சகோதரர்களிடம் எவ்வாறு நடந்து வந்தார்? யுதிஷ்டிரர், தன்னுடைய இளைய சகோதரர்களிடம் எந்த முறையில் பழகினார்? ஆகவே, நீங்கள் எல்லோரும் அவர்களுடைய நடத்தையை லட்சியமாகக் கொண்டு, அவைகளை உங்களது நடைமுறையிலும் கொண்டு வாருங்கள்.''

***வினா:–*** ***சகோதர–சகோதரிகள் தங்களுக்குள் சண்டையிட்டால் தாய்–தந்தையர் என்ன செய்வது?***

*விடை:–* தாய்–தந்தையர் பெண்ணின் கட்சியில் சேர வேண்டும். ஏனென்றால், அவள் சுவாஸினீ; தானமாக கொடுக்கப்படும் பொருள்;† சில நாட்கள் இருக்கப் போகிறவள். ஆகவே, அவள் ஆதரவு காட்டப்பட வேண்டியவள். மகனோ, குடும்பத்திற்கு உரிமையாளன்; வீட்டிலேயே இருப்பவன். தனிமையில் மகனுக்கு அறிவுறுத்த வேண்டும். ''மகனே! சகோதரியை ஆதரவற்றவளாகச் செய்துவிடாதே. அவள் இந்த வீட்டில் வசிக்கிறவள் அல்லள். இவளோ தன் வீட்டுக்குப் போய்விடப் போகிறாள். நீயோ இந்த வீட்டுக்கு உரிமைக்காரன்.''

சகோதரி, சகோதரனிடமிருந்து எதனையும் பெறுவதற்கு ஆசைப்படக் கூடாது. சகோதரன் எவ்வளவு கொடுக்கிறானோ, அதிலிருந்து கொஞ்சம் எடுத்துக் கொள்ளவேண்டும். ''சகோதரன் வீட்டிலிருந்து எடுத்துச் செல்வதால், அப்பொருள் நமக்குச் சிறிதுகூட உதவாது. நம் வீட்டுப் பொருள்தான் நம் காரியத்திற்கு உதவும்'' என்று அவள் எண்ணவேண்டும்.

† மகள், சகோதரி, சகோதரியின் மகள் – இவர்களுக்கு போஜனம் செய்விப்பது பிராமண ஸமாராதனைக்கு ஒப்பாகும்.

***வினா:– மகனும் மருமகளும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டால், தாய்–தந்தையரின் கடமை என்ன?***

*விடை:–* ''நாங்கள் எவ்வளவுதான் இதைப் பொறுத்துக் கொண்டிருப்போம்?'' என்று தாய்–தந்தையர் அவ்விருவருக்கும் அறிவுறுத்த வேண்டும். இந்த வீட்டின் யஜமானன் நீங்கள்தானே? நீங்கள், உங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டால், குடும்பத்தைக் கட்டிக் காப்பது யார்? ஏனென்றால், சுமை முழுவதும் உங்கள் மேல் அல்லவா இருக்கிறது?

மகனைத் தனியாக அழைத்து, ''மகனே! உன்னுடைய மனைவி உன் பொருட்டாகவல்லவா, தன்னுடைய தாய்–தந்தையர் முதலிய எல்லோரையும் விட்டு வந்திருக்கிறாள். நீயோ, எனது சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். நீ என்ன தியாகம் செய்துவிட்டாய்? ஆகவே, தன்னல மறுப்பின் உருவமாகத் திகழ்கின்ற மனைவியை உடல், பொருள், உள்ளம் முதலியவற்றால் மகிழ்ச்சியாக வைத்திருப்பது, அவளைப் பராமரிப்பது, உன்னுடைய முதன்மையான கடமை. ஆகவே, நீ அவளுடைய கணவன் என்கிறதால், அவளை அடிமையாக்கிக் கசக்கிப் பிழியக்கூடாது. அவளுடைய விருப்பம் எதில் உள்ளதோ, நீ பற்றேதும் வைக்காமல், அந்தக் காரியங்களையே செய். எல்லா உயிர்களுக்கும் நலன் செய்வதே மனிதனின் கடமை. நீ மனைவியின் நலனைக்கூட கருத்தில் கொள்ளாவிட்டால், வேறு என்னதான் செய்துவிடப் போகிறாய்?''

மகனின் மனைவிக்கு இப்படி உணர்த்த வேண்டும்— ''பெண்ணே! உன் கணவன் பொருட்டாகவே, உன்னுடைய தாய்–தந்தையர், அண்ணன்–அண்ணி ஆகிய எல்லோரையும் துறந்தாய். இப்போது அவனோடு ஒத்துப் போகவில்லை என்றால், அவனுக்குப் பணிவிடை செய்ய முடியாவிட்டால், வேறு என்னதான் உன்னால் செய்யமுடியும்? ஒருவன் கடலைத்

தாண்டி வந்து கரையின் அருகே மூழ்கிப் போனான் என்பது எவ்வளவு வெட்கக்கேடான விஷயம்! நீ செய்ய வேண்டிய கடமை ஒன்றே ஒன்றுதான்.''

ஏகஇ த₄ர்ம ஏக ப்₃ரத நேமா ।
காய(ம்) ப₃சந மந பதி பத₃ ப்ரேமா ॥

**(ஸ்ரீராமசரிதமாநஸம் அரண்ய. 5/4)**

**வினா:– மகளும் மருமகளும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டால், தாய்–தந்தையர் என்ன செய்வது?**

**விடை:–** மகளுக்கு தாய் அறிவுரை கூறவேண்டும். ''இதோ பார்! இவள் (மருமகள்) ரொம்ப நவீனமா வளர்ந்தவள். இவள் ஏதாவது சொன்னால், அதைப் பெரியதாக நினைத்து மரியாதை கொடுக்கவேண்டும். இவள் வீட்டின் யஜமானி. அதனால், என்னைவிட இவளை உயர்வாக மதிக்கவேண்டும். நீ, என்னை மரியாதைக் குறைவாக நடத்தினால், நான் ஒன்றும் கோபித்துக் கொள்ள மாட்டேன். ஏனென்றால், நீ என்னுடைய மகள் என்கிற உறவு இருக்கிறதால், நீ உரிமை கொண்டாடலாம்.''

வீட்டுப் பெண்ணுக்கு அதிக மதிப்புக் கொடுப்பது, மருமகளின் கடமை. ஏனென்றால், அவள் ஒரு விருந்தாளியைப் போல் வந்திருக்கிறாள். அவள் நாத்தனாரின் குழந்தைகளிடம், தன் குழந்தைகளைக் காட்டிலும் அதிக ஆசையோடு இருக்கவேண்டும்.† குழந்தைகள் ஒத்துப் போய்விட்டால், அம்மாவும் ஒத்துப் போவாள் என்பது

† மருமகள், நாத்தனாரின் குழந்தைகளிடம் முதல்தரமாக அன்பு செலுத்த வேண்டும்; இரண்டாம்தரமாகச் சின்ன மைத்துனர் குழந்தைகளிடமும், மூன்றாம்தரமாகப் பெரிய மைத்துனர் குழந்தைகளிடமும், அடுத்தபடியாக மாமியார் வீட்டுக் குழந்தைகளிடமும், ஐந்தாம்தரமாகத் தன் சொந்தக் குழந்தைகளிடமும் அன்பு செலுத்த வேண்டும்.

நிலைநாட்டப்பட்ட ஒரு நியதி. இப்படியாக, நாத்தனாரை மகிழ்ச்சியாக வைத்திருக்க வேண்டும். மற்றவர்களோடு இணைந்து போவது, தன்னுடைய நலனுக்குக் காரணமாகும்.

மகளிடம் உள்ள பாசம் காரணமாக, தாய், மகளுக்கு ஏதேனும் கொடுக்க விரும்பினால், மகள் அதனை ஏற்றுக் கொள்ளக்கூடாது. ''என்னுடைய அண்ணி கொடுத்தால் வாங்கிக் கொள்கிறேன். நீ கொடுத்தால், அண்ணி தப்பாக எடுத்துக் கொள்வாள். உங்களுக்குள் சண்டை வரலாம். அதற்காக நான் இங்கே வரவில்லை! அம்மா! உன்னிடமிருந்து எனக்கு சிறிது காலத்திற்குத்தான் கிடைக்கும். ஆனால், அண்ணி கையிலிருந்து வாங்கிக் கொண்டால், அதிக நாள்வரை எனக்குக் கிடைத்துக் கொண்டேயிருக்கும்! அதனால் தியாகம், உலக நடப்பு, சுயநலம் ஆகிய எல்லாக் கோணத்திலிருந்து பார்த்தாலும், அண்ணி கையிலேருந்து வாங்கிக் கொள்வதுதான் நல்லது!'' என்று மகள் தாயிடம் கூறிவிடவேண்டும்.

***வினா:– தாய்–தந்தையருடன் அண்ணன்மார் சண்டை போட்டால், இளைய சகோதரர்களின் கடமை என்ன?***

***விடை:–*** இளைய சகோதரன், பெரிய சகோதரரின் கால்களில் விழுந்து வணங்கி, ''அண்ணா! நீங்களே இப்படி நடந்துகொண்டால், நாங்கள் யாரை லட்சியமாகக் கொள்வோம்? ஆகவே, நீங்கள் எங்களிடம் பரிவுகாட்டி, தாய்–தந்தையருடன் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். இப்படிச் செய்வதனால், உங்களுக்கு இரண்டுவிதமான நன்மை உண்டாகும். (1) குடும்பத்திலும், வீட்டின் அருகில் உள்ளவர்களிடமும் உங்கள் நல்ல நடத்தையின் தாக்கம் ஏற்படும். (2) உங்களுடைய நடத்தையைப் பார்த்து, நாங்களும் அப்படியே நடப்போமாதலால், உங்களுக்கு அந்தப் புண்ணியமும் கிடைக்கும். அதனால், உங்களுடைய நடத்தை ஒரு முன்மாதிரியாக அமையவேண்டும். நாங்கள் உங்களை வேண்டிக் கொள்ளத்தான் முடியும். ஏனென்றால், நீங்கள்

நம்முடைய தந்தைக்கு ஈடானவர்'' என்று சொல்லவும் வேண்டுமோ?

***வினா:— இளைய சகோதரன், தாய்—தந்தையரிடம் சண்டை போட்டால், பெரிய சகோதரனின் கடமை என்ன?***

***விடை:—*** பெரிய சகோதரன், இளைய சகோதரனிடம், ''நானும், நீங்கள் எல்லோரும் குழந்தைகள். நம்மால், தாய்—தந்தையர் எப்போதும் மதிக்கப்பட வேண்டும்; போற்றப்பட வேண்டும். எந்தச் சரீரத்தைக் கொண்டு நாம் பகவானை அடைய முடியுமோ, அந்த உடம்பு, நம்முடைய தாய்—தந்தையரின் கருணையால் கிடைத்திருக்கிறது. அவர்களிடம் நாம் பட்டிருக்கும் கடனிலிருந்து ஒருபோதும் நாம் விடுதலை அடைய முடியாது. ஆகவே, நாம் அவர்களுக்கு இணக்கமாக நடந்து, விருப்பப்படி செயல்பட்டால், நம்முடைய கடன் தள்ளுபடி செய்யப்படலாம். தோலைச் செருப்பாக தைத்து தாய்—தந்தையருக்குக் கொடுப்போமானாலும், அவர்களுடைய கடனைத் தீர்த்ததாக ஆகாது. ஏனெனில், அந்த சருமம் எங்கிருந்து வந்தது? அவர்கள் கொடுத்ததையே அவர்களுக்கு கொடுக்கிறோம். நம்முடையதை எதைக் கொடுத்தோம்? நாம் நம்முடையதாகக் கருதுகிறோமே, அதுதான் தவறு. அவர்கள் நம்மை எப்படி வேண்டுமானாலும் நடத்துவதற்கு உரிமை இருக்கிறது'' என்று சொல்ல வேண்டும்.

***வினா:— சகோதரி, தாய்—தந்தையரிடம் சண்டை போட்டால், சகோதரனின் கடமை என்ன?***

***விடை:—*** நீதி எங்கிருக்கிறது? என்று சகோதரன் பார்க்க வேண்டும். அந்த நீதிக் கண்ணோட்டத்திலும் சகோதரியின் தரப்பில் நிற்கவேண்டும். ''இவள் விருந்தாளி மாதிரி வந்திருக்கிறாள். இவளிடம் ஆசை—அன்பு காட்டவேண்டும்'' என்று பெற்றோரிடம் கூறவேண்டும். ஆனால், சகோதரி அநியாயமாக நடந்தால், அவளைத் தனியே அழைத்து, ''சகோதரியே! நமக்குள்ளே அன்புதான் சிறப்பானது; சச்சரவு

இல்லை. தாய்–தந்தையர் மரியாதைக்குரியவர்கள். அதனால் நீ, நான், நாமெல்லோரும் தாய்–தந்தையரிடம் மரியாதையாக நடந்து கொள்ளவேண்டும். ஒன்றுக்கும் பிரயோஜனப்படாத விஷயத்திற்காக, அவர்களைக் கேவலப்படுத்துவானேன்?'' என்று சொல்லவேண்டும்.

***வினா:– இளைய சகோதரன், அண்ணியுடன் சண்டை போட்டால், அண்ணனுடைய கடமை என்ன?***

*விடை:–* அண்ணன், தம்பியை பயமுறுத்த வேண்டும். ''நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? சாஸ்திரப்படி பார்த்தால், அண்ணாவின் மனைவி அன்னைக்குச் சமானம். லட்சுமணன், பரதன், சத்ருக்னன் சீதையிடம் எப்படி நடந்தார்கள்? அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றை அடிக்கடி படி; சிந்தித்துப் பார். அதனால், உனக்குள்ளே மாசற்ற எண்ணங்கள் தோன்றும். உன்னுடைய புத்தி இயல்பாகவே தூயதாகிவிடும்.''

***வினா:– அண்ணன் மனைவியும், தம்பியின் மனைவியும் தங்களுக்குள் சண்டையிட்டால், சகோதரர்கள் என்ன செய்யவேண்டும்?***

*விடை:–* அவர்கள் தத்தம் மனைவிக்கு அறிவுரை கூறவேண்டும். இளைய சகோதரன், தன் மனைவியிடம், ''இதோ பார்! எங்கள் அண்ணன் உனக்கு தந்தை மாதிரி – இப்படி நினைத்து, நீ மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்று சொல்ல வேண்டும். பெரிய சகோதரன், தன் மனைவியிடம், ''என்னுடைய தம்பி உனக்குப் பிள்ளைபோல. அவனுடைய மனைவி உனக்கு மகள்போல. அதனால் நீ, அவர்களிடத்திலே அன்பாயிருக்க வேண்டும். அவனுடைய மனைவி ஏதாவது சொன்னாலும், நீ அவளை மன்னிக்க வேண்டும். ஏனென்றால், நீ பெரியவள். நீ, அவளுடைய பேச்சுக்களைப் பொறுத்துக் கொள்ளாவிட்டால், உனக்கு என்ன உயர்வு? அவளுடைய பேச்சுக்களைக்

கேட்பதாலும், அவளுக்கு அன்பு காட்டுவதனாலேயும்தான், உனக்கு உயர்வு உண்டாகும். கோபம் அடைகிறவன் கடைசியிலே தோற்றுப் போகிறான். பிறருடைய கோபத்தைத் தைரியமாகப் பொறுத்துக் கொள்பவன் வெற்றி அடைகிறான்'' எனக் கூறவேண்டும்.

தங்களுடைய மனைவிகளின் பூசலைத் தங்களிடையேயும் கொண்டு வராமல், இரு சகோதரர்களும் கவனமாக இருக்க வேண்டும். பெண்களிடம் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் (இயல்பு) குறைவாக இருக்கிறது. அதனால், தங்களுக்குள் மனத்தாங்கல் ஏற்படாதபடி சகோதரர்கள் விழிப்புடன் இருக்கவேண்டும். மனைவிகள் தங்களுக்குள் ஒத்துப்போக முடியாமற்போனால், தனித்தனியே போக வேண்டியதுதான். ஆனால், 'தனியே போவதும் அன்புக்காகத்தான்' என்று இருக்கவேண்டும். தனித்தனியே இருந்தும் தங்களுக்குள் சச்சரவு தொடர்ந்தால், தனிக்குடித்தனம் எதற்கு? ஆகவே, அன்பின் காரணமாகவே ஒன்றாக இருக்க வேண்டும். அன்புக்காகவே தனித்து இருக்க வேண்டும். பிரிந்து போகிறபோது, தனது பங்குக்காகச் சண்டை போடக்கூடாது. அண்ணன் என்ன கொடுக்கிறாரோ, அதை மட்டுமே இளைய சகோதரன் எடுத்துக்கொள்ள வேண்டும். அதுபோல, தன்னைக்காட்டிலும் அதிகமாகத் தம்பிக்குக் கொடுக்க வேண்டும் என்பது தமையனின் எண்ணமாக இருக்க வேண்டும். ஏனென்றால், அவன் சிறியவன்; அன்புக்குரியவன். தன் கணக்குப்படி அதிகமாகக் கொடுத்திருந்தும், சிறிய சகோதரன், 'எனக்கு சரியாக பங்கு கொடுக்கப்படவில்லை' என்று எண்ணினால், மூத்தவன் இளையவனின் கருத்துக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும்; தன்னுடைய கருத்துக்கு அல்ல.

தியாகமே மிக உயர்ந்த பொருள். மிக எளிய பொருட்களின் பொருட்டு விருப்பு–வெறுப்புக் கொள்வது மிகப்பெரிய குற்றம். ஏனென்றால், பொருட்கள் இங்கேயே தங்கிவிடும்; விருப்பு–வெறுப்புகள் தன்னுடன் வரும்.

ஆகவே, மனிதன் ஒவ்வொரு மூச்சிலும் கவனமாக இருக்க வேண்டும். தன்னுடைய அந்தக்கரணத்தை ஒருபோதும் அசுத்தப்படுத்தக் கூடாது.

***வினா:– தங்களுடைய குமாரர்கள் தமக்குள் சண்டையிட்டால், சகோதரர்கள் என்ன செய்யவேண்டும்?***

***விடை:–*** கூடுமானவரையில், தன்னுடைய மகனுக்குப் பரிந்து பேசாமல், சகோதரனுடைய பிள்ளையை ஆதரிக்க வேண்டும். சகோதரனின் மகன் தவறு செய்துவிட்டால், அவனுக்கு அமைதியான முறையில் உணர்த்தவேண்டும். கருத்து என்னவென்றால், தன் சுயநலத்தையும் கர்வத்தையும் விட்டுவிட்டால், எல்லோருடனும் நல்லமுறையில் பழகலாம்.

***வினா:– அன்னையும் மனைவியும் (மாமியாரும் மருமகளும்) தங்களுக்குள் சண்டை போட்டால், மகனின் கடமை என்ன?***

***விடை:–*** இம்மாதிரி சூழ்நிலையில், மகனுக்குப் பெரிய ஆபத்து வருகிறது. தாயின் கட்சியை எடுத்து ஆதரித்தால், மனைவி அழ ஆரம்பிக்கிறாள். மனைவியின் கட்சிக்கு ஆதரவு காட்டினாலோ, அன்னைக்குத் துக்கம் வருகிறது! ''இவன் பெண்டாட்டிதாசன் ஆகிவிட்டான்; என் பிள்ளையாய் இல்லை!'' இம்மாதிரியான சமயத்தில், மகன் தாயிடம் அதிக மரியாதை காட்டி, தாயின் சொற்களைக் கேட்கவேண்டும். தனியாக மனைவியிடம், ''என் தாயைப்போல, மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய வேறு யாரும் எனக்கும் இல்லை; உனக்கும் இல்லை. அவரைப்போல, நம் இருவருக்கும் நல்லது செய்யக்கூடியவர், நல்லதை விரும்புகிறவர் வேறே யாரும் இல்லை. அம்மா உன்கிட்ட கசப்பும் உறைப்புமா பேசினாலும் விட்டுவிடு; மனதுக்குள்ளே உனக்குக் கெடுதல் நினைக்க மாட்டார். மாறாக, எப்போதும் நல்லதையே விரும்புவார். என்னோடு நீ ஒற்றுமையா இருக்கவேண்டுமானால் அம்மாவிடம் ஒற்றுமையாக இருக்கவேண்டும்.'' மகன்,

மனைவியின் கட்டுப்பாட்டில் சிக்கி, அவள் சொன்னாள் என்பதற்காக யாருடனும் சண்டை–சச்சரவு, வெறுப்பு வைத்துக் கொள்ளாமல் இருக்கவேண்டும். மனைவியின் பேச்சைக் கேட்டு தாயார், சகோதரி முதலியோரை அலட்சியப்படுத்துவது, அவமானப்படுத்துவது மிகப்பெரிய குற்றம்.

தாயைத் தனியாக அழைத்து, ''அம்மா! என் மனைவி தனது தாய்–தந்தையர், அண்ணா–அண்ணி எல்லோரையும் விட்டுவிட்டு வந்திருக்கிறாள். அதனால், நீங்கள்தான் இவளிடம் அன்புடன் இருக்கவேண்டும். இவளுடைய கஷ்டங்களைக் கேட்கிறவர்கள் வேறு யார் இருக்கிறார்கள்? தன்னுடைய இன்ப–துன்பங்களையெல்லாம் யாரிடம் போய்ச் சொல்லுவாள்? இப்பொழுது நீங்கள்தான் இவளுக்கு அம்மா. உங்கள் மனசுக்குக் கஷ்டம் ஏற்படுகிற மாதிரி இவள் நடந்து கொண்டால்கூட, நீங்கள் பொறுத்துக் கொண்டு மன்னித்து விடவேண்டும். நாம் இருவருமே இவளிடத்தில் பாசத்துடன் நடந்து கொள்ளவில்லையென்றால், இவள் எங்கே போவாள்? அதனால், அம்மா! இவளை மன்னித்துவிடு. குழந்தையாக இருந்தபோது, உங்கள் மடியிலே எத்தனையோ தடவை நான் மலஜலம் கழித்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் நீங்கள் கோபித்துக் கொள்ளவில்லையே. மாறாக, என்னைப் பொறுத்துக் கொண்டீர்கள். ஏன் அதையெல்லாம் ஒரு குற்றமாகக் கூட எடுத்துக் கொள்ளவில்லை? பிரிக்க முடியாத பொருளாக நினைத்து, அவளை மன்னித்து விடுங்கள். பற்கள் கடித்து நாக்கு துண்டாகப் போய்விட்டால், பற்கள் மேலே விரோதம் உண்டாவதில்லை; அதன் மேலே கோபம் வருவதில்லை, இல்லையா? அதுபோல இவளால் ஏதேனும் அபகாரம் ஏற்பட்டாலும், உங்களுக்குக் கோபம் வரக்கூடாது. ஏனென்றால், இவள் உங்கள் உடம்பிலே ஒரு பகுதி. எப்படி நான், உங்களுடைய ஓர் அங்கமாக இருக்கிறேனோ, அப்படியே இவள், என்னுடைய அங்கமாக இருக்கிறதாலே, உங்களுடைய அங்கமாகவும் ஆகிறாள்.''

***வினா:– மனைவியும் மருமகளும் தங்களுக்குள் சண்டையிட்டால் கணவன் (மாமனார்) என்ன செய்யவேண்டும்?***

*விடை:–* கணவன், தன்னுடைய மனைவியைக் கடிந்துகொண்டு, மருமகளிடம் ''நான் உன்னுடைய மாமியாருக்குப் புத்திமதி சொல்கிறேன்'' என்று கூறிச் சமாதானப்படுத்த வேண்டும். தன்னுடைய மனைவியைத் தனியாக அழைத்து, ''நீதான் இவளுடைய அம்மா. இவள் தன்னுடைய தாய்–தந்தையர், அண்ணன்–அண்ணி முதலியோரை விட்டுவிட்டு, நம் வீட்டுக்கு வந்திருக்கிறாள். அதனால், உன்னுடைய மகளைப்போல் இவளை நடத்த வேண்டும்; அன்புகாட்ட வேண்டும். இவள் தன்னுடைய துயரங்களை உன்னிடம் அல்லாமல் வேறு யாரிடம் சொல்வாள்? தனக்கு ஓர் ஆதாரமாக, ஆதரவாக வேறு யாரை அடைவாள்?'' என்று சொல்ல வேண்டும்.

மருமகளிடம், ''மருமகளே! மாமியார் எது செய்தாலும், மருமகளுடைய நன்மைக்காகவே செய்கிறாள். என் மகன் பிறந்தது முதற்கொண்டே அவள், எனக்கு மருமகள் வருவாள்; நான் சொல்கிறதைச் செய்வாள்; எனக்குப் பணிவிடை செய்வாள் என்று எதிர்பார்க்கத் தொடங்குகிறாள். இப்படி ஓர் எதிர்பார்ப்பைக் கொண்டிருக்கும் மாமியார், மருமகளுக்கு நன்மையில்லாததை எப்படிச் செய்வாள்? நீ இன்னும் குழந்தை போல் இருப்பதால், உன் இஷ்டப்படி நடக்கவில்லையென்றால், மாமியாரைப் பற்றித் தவறான எண்ணம் வருகிறது. மருமகளே! நீ உன் தாய்–தந்தையர் ஆகிய எல்லோரையும் விட்டுவிட்டு இங்கே வந்திருக்கிறாய். அப்படியிருக்கும்போது உன் மாமியாருடன் உன்னால் ஒத்துப் போக முடியாதா? மாமியார் எத்தனை நாட்களுக்கு இருக்கப் போகிறாள்? இந்த வீட்டு யஜமானி நீதான்.

உங்கள் இருவரிடையே சண்டையைப் பற்றி யாரேனும் ஒரு பொது மனிதன் கேட்டால், தவறு உன்னிடம் என்றுதான்

கருதுவான். எப்படியென்றால், வயோதிகம் அடைந்தவர்களும் சிறுவர்களும் தங்களுக்குள் சண்டையிட்டால், குற்றம் சிறுவர்களுடையதாகக் கருதப்படுமே தவிர, பெரியவர்கள் – வயதானவர்களுடையதாக அல்ல. அதனால், இந்த எல்லா விஷயங்களையும் எண்ணிப் பார்த்து, நீ உன்னுடைய குறைகளைச் சீர்படுத்திக் கொள்ளவேண்டும். உன் மாமியாருக்குத் தவறாக தோன்றாதபடி நடந்து கொள்ள வேண்டும். எப்போதாவது உன்னிடம் கடுமையாக நடந்தால், மாமியாரின் காலில் விழுந்து அழுது, மன்னிப்புக் கேட்க வேண்டும். இதனுடைய நல்விளைவு மாமியாரின் மனத்தில் ஏற்படும். அதனால், உங்கள் இருவருக்கும் பெருமை. வீட்டிலுள்ளவர்களுக்கு சுகமும் அமைதியும் ஏற்படும். ஒரு விஷயம் என்னவென்றால், நீ கோபித்துக் கொள்வதால் வீடு முழுவதும் அமைதி இழக்கிறது. வீட்டின் அமைதியின்மைக்கு நீ ஏன் காரணமாக ஆகவேண்டும்? நீ, பெரியவர்களுடைய உத்திரவுப்படி நட; காலையிலும் மாலையிலும் பெரியவர்களின் காலில் விழு. மாமியார் என்ன சொன்னாலும், அவள் எதிரே எதுவும் பேசாதே. அவளுக்கு அமைதி ஏற்பட்டதும், உன் மனத்தில் உள்ள விஷயங்களை, அவளிடத்தில் மெதுவாகச் சொல். அவள் ஏற்றுக்கொண்டாலும் சரி; ஏற்றுக்கொள்ளா விட்டாலும் சரி. உனக்கு ஒரு குறைவும் ஏற்படாது'' என்று அறிவுரை கூறவேண்டும்.

***வினா:– அன்னையும் தந்தையும் தங்களுக்குள் சண்டையிட்டால், மகனின் கடமை என்ன?***

*விடை:–* முடிந்தவரையில் மகன், தாயின் பக்கம்தான் இருக்கவேண்டும். ஆனால், இந்தச் செய்தி தந்தைக்குத் தெரியக்கூடாது. தந்தையிடம் இப்படிச் சொல்லவேண்டும்— ''அப்பா! நீங்கள், நம் எல்லோருக்கும் யஜமானன். என் அம்மாவுக்கு ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால், அதைத் தங்களிடம்தானே சொல்ல முடியும்? தங்களை விட்டால், அவர் சொல்வதைக் கேட்பதற்கு வேறு யார் இருக்கிறார்கள்?

திருமணத்தின்போது, அக்னியையும் பிராமணர்களையும் எதிரில் வைத்துக்கொண்டு கொடுத்த உறுதிமொழியைக் காப்பாற்ற வேண்டும். தான் கொடுத்த உறுதிமொழியை அம்மா காப்பாற்றுகிறாரா, இல்லையா? என்று எண்ணிப் பார்க்காமல், நீங்கள் உங்கள் கடமையை நிறைவேற்ற வேண்டும். நீங்கள் மதிப்புக் கொடுத்தால்தான், எனக்கும் அம்மாவுக்கும் இந்த லோகம்—மேலோகம் இரண்டும் வளமாக அமையும். இல்லையென்றால், நாங்கள் எங்கேதான் போவோம்? நீங்கள் இல்லாவிட்டால் எங்கள் நிலைமை என்னாகும்? நான் உங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கவில்லை; சும்மா நினைவுபடுத்திக் கொண்டிருக்கிறேன். நான் ஏதாவது உசிதமில்லாதபடி பேசியிருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள். ஏனெனில், நீங்கள் பெரியவர்.

***க்ஷமா ப$_3$ட$_3$நகோ சாஹியே, சே$_2$ாடநகோ உத்பாத் ।***
***கஹா விஷ்ணுகோ க$_4$ட் க$_3$யோ, ஜோ ப்$_4$ருகு$_3$ மாரீ லாத் ॥***

பிருகு முனிவர் தடியால் அடித்தார் என்பதால் பகவான் விஷ்ணுவுக்குக் கௌரவக் குறைவு ஏற்படவில்லை. பதிலாக, மகிமை பெருகியது. நீங்களே யோசித்துப் பாருங்கள். உங்களுக்கு நான் சொல்லவேண்டுமா? உங்களுக்கே தெரியும்.''

குடும்பத்தில் சச்சரவு ஏற்படக்கூடாது. இதற்காக, ஒவ்வொருவரும் தங்கள் அதிகாரத்தை விட்டுக் கொடுத்து, மற்றவர்களுடைய அதிகாரத்தை நிலைநாட்ட வேண்டும். ஒவ்வொருவரும் தமது மரியாதையையும் பெருமையையுமே விரும்புகிறார்கள். அதனால் நாம், மற்றவர்களுக்கும் மரியாதையையும் பெருமையையும் அளிக்க வேண்டும்.

***வினா:– அன்னையர், தன் மகனின் பக்கத்தில் சேர்ந்து மருமகளைத் துன்புறுத்தினால், மருமகள் என்ன செய்ய வேண்டும்?***

*விடை:–* ''இவர்கள் இந்த வீட்டின் யஜமானர்கள். நான் வேறொரு வீட்டிலிருந்து வந்திருக்கிறவள். அதனால், இவர்கள் என்ன சொன்னாலும், என்ன செய்தாலும், அவர்கள் சொல்படிதான் நான் நடக்க வேண்டும். அதனால், நான் அவர்களுடன் அனுசரணையாக இருக்கமுடியும்'' – என்று மருமகள் எண்ணவேண்டும். மருமகள், மாமியாரிடம் நல்லமுறையில் பழகவேண்டும்; வெறுப்புக் காட்டக்கூடாது. அவள் தன்னுடைய நல்ல கருத்துக்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். சிந்தனையில் மாசுபடிவதற்கு இடம் கொடுக்கலாகாது. ''கடவுளே! இவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடுங்கள்; எனக்கு பொறுமையைக் கொடுங்கள்'' என்று பகவானிடம் அவள் எப்போதும் பிரார்த்தனை செய்யவேண்டும்.

***வினா:– தன் கணவனும் மாமனாரும் தங்களுக்குள் சண்டையிட்டால், மனைவி என்ன செய்யவேண்டும்?***

*விடை:–* மனைவி, தன் கணவனுக்கு இப்படி அறிவுரை கூறுவதுதான் அவளுடைய கடமை. ''வீட்டில் என்னென்ன உள்ளனவோ, அவையெல்லாம் தந்தையினுடையவை. உங்கள் தாயையும் தந்தைதான் அழைத்து வந்தார். சொத்து–பத்து, நிலம்–நீச்சு, வீடு, கௌரவம் முதலியன எல்லாம் தந்தை சேர்த்து வைத்துள்ளவை. அதனால் எல்லாவிதத்திலும் அவருக்கு மரியாதை காட்டவேண்டும். அவருடைய சொற்களை ஏற்பது நியாயம், தர்மம். உங்களுடைய கடமையும்கூட. எழுத்து மூலமான ஒப்பந்தம் எதுவும் இல்லாமலேயே அவர்களுடைய செல்வத்திற்குத் தாமாகவே வாரிசாகி விட்டீர்கள். ஆகவே, அவர்கள் எதைச் சொன்னாலும் மதித்து நடக்க வேண்டும். உங்களுடைய உடலாலும் மனத்தாலும் சொல்லினாலும், அவருக்கு மரியாதை காட்டவேண்டும். எப்போதாவது அவருக்குக் கோபம் வந்து, ஏதாவது சொன்னாரானால், 'அவரைப்போல என் நலனில் நாட்டமுடையவர் வேறு யாருமிலர்' என்று எண்ணிக்

கொள்ளவேண்டும். ஆதலால், அவருடைய உள்ளம் ஒருபொழுதும் துக்கப்படுத்தப்படக் கூடாது. நானேகூட கொஞ்சம் சரியில்லாதபடி பேசினால், என்னை ஒதுக்கிவிட்டு, அப்பாவின் சொல்லைத்தான் கேட்கவேண்டும்.''

***வினா:–* கணவனும் மகனும் தங்களுக்குள் சண்டையிட்டால், அந்தப் பெண் என்ன செய்யவேண்டும்?**

***விடை:–*** பெண், தன் கணவரின் கட்சியில் இருக்க வேண்டும். மகனிடம், ''மகனே! உன்னுடைய அப்பா என்ன சொன்னாலும், ஏது செய்தாலும் உண்மையிலே அவருடைய மனத்தில் உன்னுடைய நலனில்தான் நாட்டம் இருக்கிறது. ஒருபொழுதும் அவர் உனக்கு நன்மை பயக்காததைச் செய்ய மாட்டார். அப்படி வேறு யாராவது உனக்குக் கெடுதல் செய்தால், அவரால் பொறுத்துக் கொள்ள முடியாது. அதனால், இந்த விஷயங்களையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டு, உன் அப்பாவுக்குப் பணிவிடை செய்வதில் முனைந்திருக்க வேண்டும். நீ என்னிடம் கொஞ்சம் குறைவாக மரியாதை காட்டலாம். ஆனால், அப்பாவுக்கு அதிகமாக மதிப்பு அளிக்க வேண்டும். உண்மையில் அவர்தான் நம்முடைய யஜமானர். நீ என்னிடம் மரியாதை குறைவாக நடந்தால் நான் கோபித்துக் கொள்ள மாட்டேன். எப்படியும் உன் அப்பாவுக்குக் கோபம் வரக்கூடாது. முகமலர்ச்சியோடு அவர் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். மலர்ந்த முகத்தோடு அவர் இருக்கும்படி பார்த்துக் கொள்வது உனக்கும் ஒரு கடமை ஆகும்.''

***வினா:–* தன்னுடைய மனைவியும் மகனும் தங்களுக்குள் சண்டையிட்டால், கணவனின் கடமை என்ன?**

***விடை:–*** அவர் மகனிடம், ''மகனே! அம்மாவை முகமலர்ச்சியோடு வைத்துக்கொள்வது உன்னுடைய சிறப்பான கடமை. வாழ்க்கையில் ஏற்படும் உறவுகள் எல்லாவற்றிலும் அம்மாவுடனான உறவு உயர்வானது. அதனால், உன்

மனைவியின் வசத்துக்கு ஆட்பட்டு, அம்மாவின் மனத்தைத் துக்கப்படுத்தாதே'' என்று சொல்லவேண்டும்.

மனைவியிடம், ''நீ, இவனை உன் வயிற்றில் சுமந்திருக்கிறாய்; பெற்றெடுத்திருக்கிறாய்; பாலூட்டி இருக்கிறாய். உன்னுடைய மடியில் மலஜலம் கழித்தபோதும் இவனிடம் கோபப்படவில்லை. பதிலாக, முகமலர்ச்சியோடு, ஆர்வத்தோடுகூடத் துணியைத் துவைத்துப் போட்டிருக்கிறாய். இப்போது இவன் கொஞ்சம் கடுமையாகப் பேசினால், ''இவன் என் அன்புக்குரிய பிள்ளை'' என்று நினைத்துக் கொண்டு மன்னித்துவிடு. ஏனென்றால், நீ அம்மா ஆயிற்றே. பிள்ளை, கெட்ட பிள்ளை ஆகலாம். ஆனால், அம்மா, கெட்ட அம்மா ஆக முடியாது – *'குபுத்ரோ ஜாயேத க்வசித$_3$பி குமாதா ந ப$_4$வதி ।'*

***வினா:– குடும்பத்தில் அன்பு, மகிழ்ச்சி, அமைதியை எப்படி கட்டிக் காக்க வேண்டும்?***

***விடை:–*** மனிதன், தன்னுடைய லட்சியங்களை மறக்கும் போதுதான், எல்லா இடைஞ்சல்களும் ஆபத்துக்களும் வருகின்றன. அவன், தன் லட்சியத்தில் விழிப்புடன் இருந்து, ''எது வேண்டுமானாலும் நடக்கட்டும்; எனக்கு, என்னுடைய ஆன்மிக முன்னேற்றம்தான் குறி'' என்றிருந்தால், அவன் சுக–துக்கத்தைக் கணக்குப் பார்ப்பதில்லை. *'மநஸ்வீ கார்யார்தீ$_2$ ந க$_3$ணயதி து$_3$:க$_2$ம் ந ச ஸுக$_2$ம் ॥'* தன்னுடைய சுயநலத்தையும் செருக்கையும் தியாகம் செய்வதில், அவனுக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படுவதில்லை. தன்னலமும் செருக்கும் தியாகம் செய்யப்படுவதால், அவனுடைய காரியங்களில் எந்தவிதமான இடைஞ்சலோ, தடையோ ஏற்படுவதில்லை. காரியங்களில் பரஸ்பரம் அன்பு பாராட்டுவதில் தடை எப்போது வருகிறது? என்றால், எப்போது மனிதன் தன் செருக்கைக் காட்டுகிறானோ, தன்னுடைய விருப்பம் நிறைவேற வேண்டும் என்று விரும்புகிறானோ, தன் நலத்தை சாதித்துக் கொள்ள விரும்புகிறானோ, அப்போதுதான்.

மற்றவர்களுக்கு நன்மை உண்டாக என்ன செய்ய வேண்டும்? அவருக்கு க்ஷேமம் உண்டாக, மட்டு–மரியாதை ஏற்பட, சுக–சௌக்கியம் கிடைக்க என்ன செய்ய வேண்டும்? – இந்த எண்ணம் எப்போது நடவடிக்கைகளில் வருமோ, அப்போது குடும்பத்திலுள்ள அனைவரும் மகிழ்ச்சியோடிருப்பார்கள். ஒரு குடும்பி, ஏதேனும் ஒரு சமயத்தில் மகிழ்ச்சி அற்றவனானாலும், அவனுடைய மகிழ்ச்சியின்மை நீடித்து இருக்காது; நிலைத்து நிற்காது. ஏனென்றால், அவன் இது பற்றி நன்றாக ஆராய்ந்து பார்க்கும்போது, ''என்னுடைய நலன், இதில்தான் இருக்கிறது'' என்ற எண்ணம் புலனாகும். வேடிக்கை–விளையாட்டில் மனம் ஆழ்ந்து போவதால், சிறுவனுக்குப் படிப்பு வேண்டாததாகப் படுகிறது என்பதை எடுத்துச் சொன்னால், விளைவு அவனுக்கு நன்மையானதாகவே ஆகும். அதுபோலவே, நல்லதான ஒரு விஷயம், ஒருவருக்குக் கெடுதலாகப்பட்டால், அவருக்கு அந்தச் சமயத்தில் அதிலுள்ள நன்மை தெரியாமற்போனாலும், பின்னால் ஒரு காலத்தில் அறிவுக்குப் புலப்படவே செய்யும். ஒருக்கால் அவன் அறிவுக்கு எட்டாமலே போய்விட்டாலும், அவனுடைய நலனையே விரும்புகிற நமக்கு, நம்முடைய எண்ணத்திலும் நடத்தையிலும் திருப்தி உண்டாகும். நம்முடைய சிந்தனைப்போக்கு உண்மையானது, திடமானது என்பதில், ஓர் உள்ளார்ந்த ஆற்றல் பெறப்படுகிறது.

தங்களுக்குள் அன்பு பாராட்டுவதாலேயே குடும்பத்தில் சுகமும் அமைதியும் நிலைக்கும். சுயநலத்தையும் தற்பெருமையையும் தியாகம் செய்வதால் அன்பு தோன்றும். எங்கே தன்னலமும் தற்பெருமையும் இல்லையோ, அங்கே அன்பைத் தவிர வேறு என்ன தோன்ற இயலும்? ஒருவன் சுயநல வசப்பட்டு, நம்மை இழிவாய் நடத்தினான் என்றால், ''நான், இவனுடன் நல்லமுறையில் பழகுகிறேன். அப்படியும் இவன் என்னிடம் முகமலர்ச்சியோடு இல்லை. என்ன

செய்வது?'' என்ற எண்ணம் எப்போதாவது தோன்றும். இவ்வித எண்ணம் தோன்றுவதற்குக் காரணம், நமக்குள் மறைந்து கிடைக்கும் சுக–வேட்கையே. ஏனென்றால், பிற மனிதருடைய அப்போதைய முகமலர்ச்சியினால், நமக்கு ஒருவித இன்பம் உண்டாகிறது. ஆதலால், இந்த சுக–வேட்கையை அடையாளம் கண்டு கொண்டுவிட்ட உடனேயே, அதைத் துறந்துவிட வேண்டும். ஏனென்றால், நம்முடைய கடமையைச் செய்வது, மற்றவர்களுக்கு மரியாதை அளிப்பது, அவர்களிடம் அன்பு செலுத்துவது – இதுவே நாம் செய்ய வேண்டியது. நம்முடைய எண்ணம்–நடத்தைகளின் தாக்கம் அவர்மேல் நிகழும். ஆம், கடின சித்தம் உள்ளவராக இருப்பதால், அவரிடம் தாக்கம் ஏற்படாமல் போனாலும் நம்மைப் பொறுத்தவரையில், நல்லதே செய்தோம் – என்ற அளவில் திருப்தி உண்டாகும். திருப்தி உண்டாவதால் நம்முடைய அன்பு வளரும்; குடும்பத்தில் சுகமும் அமைதியும் நிலவும்.





॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| | Code No. | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதா – தமிழ் மூலம் & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம்–பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதா–தத்வவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை] |
| 6. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதா – [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை] |
| 7. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை] |
| 8. | 600 | ஸ்ரீஹநுமாந் சாலீஸா – தமிழ் [மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 9. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 10. | 1256 | அத்யாத்ம ராமாயணம் – தமிழ் மொழிபெயர்ப்பு |
| 11. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவநீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 12. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 13. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் – தமிழ் மூலம்–விளக்கவுரை |
| 14. | 1534 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 15. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 16. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 17. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 18. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 19. | 1912 | விரத கல்ப த்ரயம் |

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – பொழிப்புரை ]

20. 1843 பத்தாவது ஸ்கந்தம் – ஸ்ரீகிருஷ்ண லீலாம்ருதம்
21. 1605 பதினோராவது ஸ்கந்தம் – ஸ்ரீ உத்தவ கீதை

[மற்ற ஸ்கந்தங்கள் விரைவில்]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

22. 1902 முதல் பாகம் [பால–அயோத்தியா காண்டம்]
23. 1903 இரண்டாவது பாகம் [ஆரண்ய–கிஷ்கிந்தா ]
24. 1904 மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]
25. 1905 நான்காவது பாகம் [யுத்த காண்டம்]
26. 1906 ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]

## அறிவுரை நல்கும் நூல்கள்

27. 127 பயனுள்ள கதைகள்
28. 365 பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள்
29. 423 கர்ம ரஹஸ்யம்
30. 466 சத்ஸங்கத்தின் சாரமான தத்துவங்கள்
31. 499 நாரத பக்தி ஸூத்ரம்
32. 536 கீதை கற்பதன் பயன்கள்
33. 550 திருநாம ஜபத்தின் மகிமை
34. 551 தூய்மையான உணவுப் பழக்கம்
35. 568 சரணாகதி
36. 569 உருவ வழிபாடு
37. 591 பிள்ளைகளின் கடமைகள்
38. 601 பகவான் ஸ்ரீகிருஷ்ணன்
39. 606 மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி
40. 607 எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்?
41. 608 பக்தராஜ ஹனுமான்
42. 609 ஸாவித்ரீ–ஸத்யவான் [கதைப் பகுதி]
43. 642 ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை
44. 643 பகவான் உறையும் ஐந்து இடங்கள்

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம், சம்ஸ்கிருதம், உருது, குஜராத்தி, மராத்தி, பெங்காலி, ஒரியா, அஸ்ஸாமியா மற்றும் நேபாளி மொழிகளில் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**எங்களது தமிழ்நாடு கிளை :**

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்–ஸ்டாப் அருகில்),
கோயம்புத்தூர் – **641 018.**
**Ph. : 0422–3202521, Mobile : 9362202521**